உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதம்

## (பழையவுரை)



மெய்கண்டார் யாண்டு - 729

நந்தன - புரட்டாசி

1952.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக பரமாசாரிய சுவாமிகள்

# திருப்பணி விழாமலர்

திருவாவடுதுறை

நந்தன — புரட்டாசி — அசுபதி

**1952.**

---

# மெய்கண்டசாத்திரம்

**( பதினான்கு )**

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம் — வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

திருச்சிற்றம்பலம்.



இருபத்தோராவது குருமஹா சந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்.**

உ

திருச்சிற்றம்பலம்.

# மெய்கண்ட சாத்திரம்

## 3. சிவஞானபோதம்.

ஸ்ரீ மெய்கண்டதேவநாயனர்

1952.

திருவாவடுதுறை ஆதீன வெளியீடு — 54.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்டசாத்திரம்

ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார் அருளிச்செய்த

# சிவஞானபோதம்

மூலமும்

பழையவுரையும்.

---

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து

21-வது குருமஹாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகசுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

---

அவ்வாதீன வித்துவான்

கு. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்

பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றன.



நந்தன — புரட்டாசி — அசுபதி.

1952.



திருவெண்ணெய் நல்லூர் ஸ்ரீ மெய்கண்டதேவர்

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முன்னுரை

ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனாரால் அருளிச் செய்யப்பட்டது இந்தச் சிவஞான போத நூல். இது மெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. மெய்கண்ட சந்தான பரம்பரையில் வந்த ஆசிரியன்மாரெல்லாம் இந்நூல் வடமொழியினின்று தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதென ஒருமுகமாய் அருளுகின்றார்கள். ஏனையோர் இந்நூல் தனித் தமிழினியன்றதென்பர். உபதேச பரம்பரையின் வந்தோர் கூற்றே ஏனையோர் கூற்றின் வலியுடையதென அப் பரம்பரையிலே வந்த அனைவரும் கொள்ளுதல் தகுதி: அது ஆசிரியரானை கடைப்பிடித்தலும் ஆம். இதற்குப் பல உரைகள் உள. இவ்வுரை பழையவுரை. இதனைச் சம்பிரதாயவுரை எனவும் கூறுவர். இதனைபடுத்துச் சிந்தனையுரை, சிற்றுரை, பேருரைகள் வெளியாம். பிற முகவுரையிற் காண்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

"வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வர்
ஓதுந் தமிழதனி னுள்ளுறுநெய் — போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்."

வேதம் பொது. அது பசுவைப்போன்றது. ஆகமங்கள் சிறப்பு. அவை பசுவினிடத்துப் பால் போன்றன. சிவபிரானுடைய உண்மைத் தன்மையை நன்கு தெளிவிப்பன. வேதாகமங்கள் முழுமுதற்கடவுளாகிய சிவபிரானால் அருளிச் செய்யப்பட்டவை. தேவார திருவாசகங்கள் ஆகிய அருட்பாக்கள் சைவ சமயாசாரியர்களாகிய நால்வரால் அருளிச் செய்யப்பட்டவை. அவை பாலினுள்ளுறும் நெய்யை யொத்தன. நெய்யின் உறுசுவையை யொத்தது ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனார் அருளிச்செய்த சிவஞானபோதம். ஸ்ரீ மெய்கண்ட தேவர் சாமுசித்தராய்த் திருவெண்ணெய் நல்லூரிலே திருவவதாரம் செய்தவர்கள். சித்தாந்த சாத்திரங்களில் தலைசிறந்து விளங்குவது சிவஞானபோதமே ஆம்.

சிவஞானபோதம் என்பது சிவத்தை அறிதற்குக் கருவியாகவுள்ள சுத்தாத்துவிதசித்தாந்தசைவஞானப்பெருநூல் ஆம். இது, பொது—சிறப்பு என்னும் இரண்டு அதிகாரங்களையும், 'பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என்னும் நான்கு இயல்களையும், பன்னிரண்டு சூத்திரங்களையும், முப்பத்தொன்பது அதிகரணங்களையும்,

எண்பத்தொரு உதாரண வெண்பாக்களையும், மங்கல வாழ்த்து அவையடக்கம் ஆகிய இரண்டு செய்யுட்களையும் உடையது.

இச்சிவஞான போதம் வடமொழியிலே இரௌரவ ஆகமத்து, எழுபத்துமூன்றாவது பாசவிமோசன படலத்துப், பன்னிரண்டாம் அத்தியாயத்துப், பன்னிரண்டு சூத்திரங்களாய் உள்ளது. சித்தாந்த முதனூலாய்ச் சிவாநுபவத்துக்கு இலக்கணமாய் உள்ளது. இது மெய்ப்பொருளாகிய சிவம், அம்மெய்ப்பொருளை உள்ளவாறு அறிதற்கு இன்றியமையாத் துணையாகிய அருள் எனப்படும் ஞானம், அவ்வருளினாலே தெளிந்த மெய்ப்பொருளை அநுபூதியில்வைத்து நிச்சயம் செய்தலாகிய போதம் என்னும் மூன்றனையும் தன்னுட்கொண்டதென்பர் பெரியோர்.

இனி, "குருவினாலே செயற்பாலன ஆகிய பரீட்சைகளெல்லாம் செய்யப்பட்டுப் பக்குவமுடையராய், சமயம் விசேடம் நிருவாணம் என்னும் மூன்று தீட்சைகளையும் பெற்றவரே இந்த ஞான நூலை ஓதுதற்கு அதிகாரிகள் ஆவார். இதனைக் குருமுகமாய் அறிதலின்றித் தமது மதிநுட்பத்தால் ஆராயப்புகுவோர் சந்தேக விபரீதமறத் தெளிந்து கொள்ளார். அதுவன்றியும் பதிவாக்கியங்களிற் குற்றமேற்றித் தாம் எரிவாய் நிரயத்துக்கு ஆளாவார். இதுபற்றியன்றே இவைகளைக் 'குருவினிடத்தேபெறுக' எனச் சைவாகமங்கள் விதித்ததூஉம் என்க."

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துக் கல்விக்களஞ்சியமாகிய சரஸ்வதி மஹால் புத்தகசாலையில் உள்ள இப்பழையவுரை இவ்வாதீனத்துப் பெரியோ

ரால் அருளிச்செய்யப்பெற்றது. தெளிவான எளிய நடையின் இயன்றது. பெரிதும் வடமொழி விரவாதது. சூத்திரக் கருத்துக்களை ஆங்காங்கே நன்கு விளக்கிச்செல்வது. இவ்வுரைப்பகுதியிலே பழையவுரையாசிரியர் தமது கருத்தைத் தெளிவாக வுரைத்துப் பின்பு வேறுரைக்கருத்தையும் எடுத்துக்காட்டி 'என்பதும் ஓர் உரை' எனத் தெரித்தருளுகின்றார்கள். இவ்வுரைப் பகுதிகளை நோக்குவார்க்கு அப்பெருமை எத்துணைத்து என்பதும் தெளிவாம். சூத்திர மூல பாடங்களும் சில இடங்களில் வேறுபட்டுள. இப்பழைய வுரை யாசிரியர்கொண்ட பாடமே மூலத்தில் தரப்பட்டுளது. ஏனைய உரைநோக்கி அறிக. இப்பழையவுரை அருளிச் செய்யப்பட்டு ஏறக்குறைய 350 ஆண்டுகட்கு மேலாகியும் முதன் முறையாக இப்பொழுதுதான் வெளிவருகிறது. இப்பழையவுரையாசிரியர் பெயர் தெளிவாகத் தெரியவில்லை. பின்பு செய்யும் ஆராய்ச்சியால் தெரியலாம். இவ்வுரையில் 'சூரணி' எனக் குறிக்கும் பகுதிகள் அனைத்தும் ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் அருளியுள்ள சிற்றுரை பேருரைகளில் 'அதிகரணம்' எனக் குறிக்கப்பட்டுள்ளன.

இதனைப் பரிசோதிப்பதற்கு இவ்வாதீனத்து சரஸ்வதி மஹாலில் உள்ள நான்கு ஏட்டுச் சுவடிகள் பயன்பட்டன. அவற்றுள் ஒன்று மிகப்பழமையானது. அன்றியும், இவ் வாதீனத்துத் தம்பிரான் சுவாமிகள் எழுதிப்படித்த காகிதப் பிரதிகளும் சில விடங்களில் உதவின. எனினும், இவ்வாதீன ஓதுவாமூர்த்திகளுள் ஒருவரும், ஆதீன வித்துவானும், என்னுடைய தமிழாசிரியர்களுள் ஒருவரும், சிதம்பரம் ஸ்ரீ மீனாட்சி தமிழ்க் காலேஜ் பிரின்ஸ்பாலும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழாசிரியர்களுள் சிறந்து விளங்கிய

வர்களும் ஆகிய ஸ்ரீ சு. பொன்னோதுவாமூர்த்திகள் ஏடொன்றே மிகவும் பயனுடையதாயிற்று.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பெருங்கருணைத் திறத்தால் கர ஆண்டு புரட்டாசித்திங்கள்—விசயதசமியன்று ஸ்ரீ மெய்கண்டதேவநாயனார் சந்நிதியில் திருவெண்ணெய் நல்லூரிலே நடைபெற்ற சித்தாந்த சைவ மாநாட்டிலே **திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார்** என்னும் இரண்டு சாத்திரங்கள் இவ்வாதீனத்து உரைகளுடன் வெளி வந்தன. இன்று ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக பரமாசாரிய சுவாமி கள் வீற்றிருக்கும் இத் திருவாவடுதுறையிலே சிவஞானபோதம் பழையவுரையுடன் வெளிவருவது மிகப் பொருத்தமுடைத் தாம். இது உலகுக்குப் பெரும் பயனுடையதுமாம்.

எம்மனோர் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் **சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்** அவர்கள் பெருங் கருணையைச் சிந் தித்து வந்தித்து வணங்குவதன்றி என்செய்பவல்லேம்.

அநுபவமுடைய தேசிகர் உணர்த்த உணர்தற்பால தாகிய இந்நூலுரையைச் சிற்றறிவுடைய பசுவர்க்கத்துட் பட்ட சிறியேன் அச்சிடத்தொடங்கியது அறிவானன்ற பெரியோர்க்கெல்லாம் ஏ ஏ இவனறிவு இருந்தவாறென்னை? என்று எள்ளி நகையாடற் கேதுவாம்.

இதனையடுத்துச் **சிவஞானபோதம் சிந்தனையுரை** வெளிவருகிறது. பிற செய்திகள் அம்முகவுரையால் தெளி வாம். இதிற் காணப்படும் பிழைகளைப் பெரியோர் பொறுத் தருள வேண்டுகின்றேன்.

திருவாவடுதுறை
5—10—52

சித்தாந்த சைவமணி—
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,**
ஆதீன வித்துவான்.

உ

# சிவஞானபோதம்

## சூத்திரக் கருத்து

முதற்பதி ஆனே ஐந்து முன்னத்து விதமி ரண்டே
இதற்பினை அனுமா னத்தால் எண்ணிலா உயிர்கள் மூன்றே
அதற்பினை அவத்தை நான்கே அகறுமத் திடலே ஐந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்தல் உயிரை ஏழே.

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்தல் எட்டே
சிறப்புடை உபாயந் தம்மால் தெளிவித்தல் உயிரை ஒன்பான்
அறுத்திடல் மலங்கள் பத்தே அழுந்தலே சிவத்தில் ஒன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி.

— ஈசான தேசிகர்; தசகாரியம்.

## அதிகரண வெண்பாத் தொகை

ஐபொருப தேழேழும் ஆங்கமைந்த நாலாறும்
ஐபொன்ப தோரெட்டோ டாறுறும் – துய்யவெட்டோ
டெண்பத்து மொன்றுஞ் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

## சூரணி – சிவஞானபோதம் இவற்றின் தொகை

சூத்திரமீ ராறினுக்குச் சூரணைமுப் பானென்பான்
ஏற்றவெண் பாவெண்பா னிரண்டனைத்துஞ்-சேர்த்ததொகை
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னுய்ந்துணர்ந்
வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு. [தோர்

## சூர்ணித்தொகை

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபின் இரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்று நன்றாய் முடிந்தபின் இரண்டி ரண்டே
ஏன்றநான் கீறு தாமே இவையீரா றிலக்கத் துள்ளே
என்றமுப் பானென் பானை எனக்கரன் இரங்கி னானே.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மெய்கண்டதேவ நாயனார் துதி

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

—சிவஞான சித்தியார்



ஸ்ரீ பஞ்சாக்ஷரதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பொருளடக்கம்

## 2. இலக்கணவியல்

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதம் பழையவுரை.

மலர்தலை யுலகின் மாயிரு டேமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னுன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

— என்பது பாயிரம்.

(இ-ள்) மலர்தலை உலகின்—இடமகன்ற ஞாலத்தின் கண்ணே உளதாகிய, மா இருள் துமிய — மகத்தாகிய பூத விருளானது கெட, பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதை— பல சமயத்தாராலுந் தோத்திரம் பண்ணப் படாநின்ற

ஆதித்தன் உதயஞ்செய்தா லல்லது, காண்டல் செல்லாக் கண்போல்—காட்சியை யுடைத்தாகாக் கண்ணைப் போல், ஈண்டிய பெரும் பெயர்க் கடவுளில் — பரிபூரணமான பெரிய பெயரினையுடைய கர்த்தாவினாலே, கண் இருள் தீர்ந்து — அறிவின் கண்ணே உண்டாகிய அஞ்ஞான மாண்து விட்டு நீங்கி, அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடிக் கண்டு — அரிய துயரத்தை விளைக்கப்படா நின்ற சரீரத்தினிடத்திலே ஆன்மாவை விசாரித்தறிந்து, மயர்வு அற — மயக்க விகற்ப மற்று மோட்சத்தைப் பெற, நந்தி முனிகணத்து அளித்த — அழகிய நந்திகேசுர நாயனார் கயிலாயத்திலே பரமேசுரரிடத்திலே அனுக்கிரகம்பெற்ற படிக்கு முனிவர் கூழாங்களுக்கு அனுக்கிரகம் பண்ணின, உயர் சிவஞானபோதம் உரைத்தோன் — மேலாகிய சிவ ஞானபோத மென்னும் வடமொழியைத் தமிழாக விரித் தருளிச் செய்தோன், பெண்ணைப் புனல் சூழ் வெண்ணைச் சுவேதவனன்—பெண்ணையாற்று நீராலே சூழப்பட்ட அழ கிய திருவெண்ணெய்நல்லூரே திருப்பதியாக எழுந்தருளி யிருக்கின்ற சுவேதவனப் பெருமாளென்னும் பிள்ளைத்திரு நாமத்தையுடையோன், பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன் — பலசமயத்தாருடைய நிலையெல்லா மாகிய பொய்யைப் பொய்யென்று கண்டு விட்டு நீங்கிச் சத்திய ஞானத்தைத் தெரிசித்தருளிய சுவாமி, பவம்நனி வன்பகை கடந்த — மிகுந்த பிறவியாகிய வலிய பகையினைக்கடந்த, தவர் அடி புனைந்த தலைமையோனே — தவத்தோர்களாலே தனது திருவடியைச் சூடப்பட்ட மேம்பாட்டினை யுடை யோன் என்றவாறு.

இனி, ஈண்டு இப்பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு கண்ணிருள் தீர்ந்து என்று கொண்டு இதற்கு இவ்விடத் திலே மிகுந்த மகாதேவ ரென்னும் பெயரையுடைய பரம

சிவனது கிருபையினாலே ஆன்மாக்கள் அஞ்ஞான இருணீங்கி ஞானக்கண் பெற்று என்றும், உயர் சிவஞானபோதம் உரைத்தோன் என்பதற்கு உயர்ந்த சிவஞானபோத மென்னு முபதேச வடமொழிக்கலை பூமியிலுள்ள பக்குவான்மாக்க ளுணரும் பொருட்டுத் தமிழாகச் செய்தவர் யாரோ வென்னில் என்றும், தவரடி புனைந்த தலைமையோனே என்பதற்குத் தவத்தையுடைய பெரியோர்கள் சிரசின் மேலே சூடிக் கொள்ளப் படாநின்ற விரண்டு சீபாத கமலங்களையுமுடைய தலைவனாகிய சுவாமி என்றும் உரைக்கு முறைகளுஞ் சில உளவாம்.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

(இதன் பொருள்) கல்லால் நிழல்-கயிலாயத்திலே தெட்சணாமூர்த்தமாகி எழுந்தருளியிருந்து அகத்தியர் புலத்தியர் சநகர் சநற்குமாரர் இவர்கள் நால்வர்க்கும் தன்மார்த்த காமமோட்சங்களும், பிரம விட்டுணுவாதிகளுக்கு வேதமும் அனுக்கிரகம் பண்ணிச்சிட்ட பரிபாலனமும்; மலைவில்லார் அருளிய-மகாமேருவை வில்லாக வளைத்துத் திரிபுராதிகள் முதலான துட்டநிக்கிரகமும் இயற்றி உலகத்தை இரட்சித்தருளிய பரமசிவனுடைய புத்திரராகிய; பொல்லார் இணைமலர்-திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கிற சுயம்புவாகிய பொல்லாத விநாயகருடைய இரண்டு சீபாத கமலங்களையும்; நல்லார் புனைவர் ஏ—மலந் தீர்ந்து சிவஞானத்தைப் பொருந்தின ஞாதாக்கள் சிரசின்மேலே சூடா நிற்பர்கள்: யாமும் அது செய்வோம் என்பதுகருத்து என்றவாறு.

இது காப்பு.

இனி, கல்லானிழல் என்பதற்குக் கல்லாலின் கீழே யெழுந்தருளியிருந்து சநகாதி நால்வர்க்குந் தன்மார்த்த காம மோட்சங்களை யருளிச் செய்து என்றும், மலைவில்லா ரருளிய என்பதற்கு மகா மேருவை வில்லாக வளைத்துத் துட்டநிக்கிரகஞ் சிட்ட பரிபாலனம் பண்ணின மகா தேவரால் கொடுக்கப்பட்ட என்றும் பொருள் கொள்ளி னும் பொருந்தும்.

**காப்பு முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார் — தம்மை
உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

— *என்பது அவையடக்கம்.*

(இ-ள்) தம்மை உணர்ந்து தமையுடைய தன் உணர் வார்—தற்றெரிசனப்பட்டுத் தம்மை அடிமையாகவுடைய கர்த்தாவை யறிந்தவர்கள், எம்மை உடைமை எமை இகழார்—எம்மையும் கர்த்தாவுக் கடிமையாகிய உடைமை யென்றிகழச் செய்யார்கள் எம்மாற் செய்யப்பட்ட நூலையு மிகழச் செய்யார்கள், தம்மை உணராருணரார்— தற்றெரிசனப் படாத பேர்கள் எம்மையுமறியார்கள் எம்மாற் செய்யப்பட்ட நூலையும் அறியார்கள், உடங்கி யைந்து தம்மிற் புணராமை — அவர்களோடுங்கூடிப் பொருந்தியிரோம் ஆகையினாலே, கேளாம் புறன் — அவர்கள் சொல்லும் புறமொழியை யாம் கேளோம் என்பது கருத்து.

இனித், தம்மையுணரா ருணரா ரென்பதற்குத் தம்மை யறியாத பேர்கள் தலைவனாகிய சிவனையு மறியார்கள் என்றும், உடங்கியைந்து தம்மிற் புணராமை யென்பதற்கு அவருடனே கூடிக் கலந்தியைந்து யாதும் யாமுணராமையினாலே என்றும், கேளாம்புறன் என்பதற்கு அவர்கள் புறங்கூறும் அறியாமையை யாம் கேட்கக் கடவோ மல்லோம் என்றும் சிலவுரைகள் உள்ளன.

**அவையடக்கம் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்

## முதற் சூத்திரம்

*அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்*
*றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா*
*மந்த மாதி யென்மனார் புலவர்.*

(இ-ள்) அவன் அவள் அதுஎனும் அவை—ஒருவனென்றும் ஒருத்தி யென்றும் ஒன்றென்றும் சுட்டப்பட்ட உயர்திணை அஃறிணையான பிரபஞ்சத்துக் கொருகருத்தாவுண்டு. கர்த்தா உண்டென்றது எந்த ஏதுவினாலே? மூவினைமையின்—பிரபஞ்சத்திற் றோற்றப்பட்டவையெல்லாம் முத்தொழிலாய்ச் சிருட்டிப்பட்டும் திதிப்பட்டும் சங்காரப்பட்டும் வருகையினாலே. இந்த வேதுவினாலேயோ கர்த்தா வுண்டென்றது? கர்த்தா வேண்டுவதில்லை. நாலு பூதங்களிடமாய்த் தோன்றி நின்றழியும். தோற்றிய, திதியே — நீ நித்தியம் என்ற பிரபஞ்சம் தோன்றித் திதிப்பட்டு நிற்கையினாலே. ஒடுங்கி உளதாம் — சங்கார கர்த்தாவினாலே சங்காரப்பட்டு மீளவுமுண்டாம். சங்காரப்பட்ட பிரபஞ்சம் சங்காரப்பட்ட

படியே போகாமல் மீளவும் உண்டாவானேன்? மலத்து ஆம்—மலம்தீர்ந் தொடுங்கா தாகையினாலே மலம் தீர்ந் தொடுங்குவது காரணமாகச் சங்காரப்பட்ட பிரபஞ்சம் சங்கார கர்த்தாவினாலே மீளவும் உண்டாம். சிருட்டி கர்த்தாவும் திதிகர்த்தாவும் இருக்கச் சங்கார கர்த்தாவை முதன்மையாகச் சொல்லுவானேன்? அந்தம் ஆதி என்மனார்புலவர்—அந்தியத் தொழிலை யாதொரு கடவுள்செய்யா நிற்கிறார் அவரே சகத்துக்கு முதன்மையாகிய கர்த்தா என்று அறிவான்மிக்க ஞாதாக்கள் திருவுள்ளம் பற்றுவார்கள் என்றவாறு.

இனித், தோற்றிய திதியே என்பதற்கு நீ நித்தியமென்ற பூதங்கள் தோன்றித் திதிப்பட்டு நிற்கையினாலே என்றும், தோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதாம் என்பதற்குத் தோற்றப்பட்டுத் திதியாய்க் காணப்பட்டு நிற்கிற உலகமெல்லாம் சங்காரப்பட்டு மலத்தி லொடுங்கித் திரும்பவுஞ் சிருட்டிப்பட் டுண்டாகும் என்றும், அந்த மாதி யென்மனார்புலவ ரென்பதற்கு ஆனால் அந்தத் தொழிலிருக்கிற உலகத்துக்குக் கர்த்தா ஆர் என்னில் அந்தத்திலே சங்காரத் தொழிலைச் செய்கிற கர்த்தாவே முத்தொழிலையு முடைய முதல்வர் என்றவாறு என்றும் சில வுரைப் பேதங்கள் உள்ளன.

என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின்? சங்கார காரணனாயுள்ள முதலே முதலாக உடைத்திவ் வுலகம் என்ப துணர்த்துதல் நுதலிற்று—இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங்கிற்றோ வெனின் சங்காரத்துக்கு முதன்மையாகிய சங்கார கர்த்தாவே முதன்மையாகியகர்த்தா என்று இந்தப்பிரபஞ்சம்காட்டா

நிற்பதைச்சொல்லத் தொடங்கிற்று என்றவாறு. நுதலிற்றென்பதற்குக் கருதிற்றென்றுரைப்பினும் பொருந்தும். இதன் பொழிப்புரைத்துக் கொள்க. இதை விரித்தறிந்து கொள்க என்றவாறு.

இதற்குச் சூரணியும் ஏதுவும் உதாரணமும் வருமாறு:

**முதற் சூரணி:** உலகாயதன்பிரத்தியட்சக் காட்சி மட்டுங் கொண்டு உலகம் நித்தியம் என்று சொன்னதை மறுத்துணர்த்துகிறார். ஈண்டுத்தோற்றமும் ஈறும் உள்ள தன் பாலே கிடத்தலின் — உளதா யிவ்விடத்திலே சிருட்டியுஞ் சங்காரமு முண்டாயிருக்கிற திதியின் பக்கத்திலே கிடக்கக் காண்கையினாலே. ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசம் உடைத் தென்றது — ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் சுட்டியறியப்பட்ட பிரபஞ்சம் தோன்றி நின்றழியும் என்று சொன்னது.

இனி, ஈண்டுத் தோற்றமும்ஈறும் உள்ள தன்பாலே கிடத்தலின் உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்றென்ற சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசம் உடைத் தென்றது என்பதற்குச் சிருட்டியுஞ் சங்காரமுந் தோற்றப்பட்டுத் திதியாகி நிற்கிற ஒரு பொருளின் பகுதியிலே கிடக்கக்காண்கிற ஏதுவினாலே உளதாய் ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் சுட்டியறியப் பட்ட பூத பௌதிகப் பிரபஞ்ச முழுவதும் ஒவ்வொரு காலத்திலே சங்காரகர்த்தாவினாலே சிருட்டிப் பட்டும் திதிப் பட்டும் சங்காரப்பட்டும் வருமென்று நாஞ் சொன்னது என்பதும் ஒருரையாம்.

**உதாரண வெண்பா :**

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையின் — ஓதாரோ
ஒன்றொன்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டும்
அன்றென்று முண்டென்ன வாய்ந்து.

*(இ-ள்) பேதாய்—பிரபஞ்சம் நித்தியம் என்னும் உலகாயதனாகிய அறிவில்லாதவனே, பூதாதி—நீ நித்திய மென்ற நான்கு பூதமாதியாகிய பிரபஞ்சம் முழுவதும், ஈறும் முதலும் துணையாக — சங்காரமுந் தோற்றமுந் துணையாக, திதி யாகும் பெற்றிமையின் — இப்போது திதியாகக் காணப்பட்டு நிற்கிற ஏது முறைமையினாலே, ஒன்றில் ஒன்று தோன்றி—ஒரு வடிவிலே யொருவடிவுண் டாய், உளதாய்—திதிப்பட்டும், இறக்கண்டும்—அழியக் கண்டும், அன்றென்றும் உண்டென்ன ஆய்ந்து — நீ நித்தியம் என்ற பிரபஞ்சம் நித்திய மாகுதல் எப்போதும் உண்டென்றுவிசாரித்து, ஓதாரோ—திருவுள்ளம் பற்றார் களோ : திருவுள்ளம் பற்றுவார்கள் அறிவான் மிக்க ஞாதாக்கள் என்றவாறு.*

*இனிச், சங்காரமுந் தோற்றமுந் துணையாக இப் போது திதியாகக் காணப்பட்டு நிற்கிற ஒருபொருளில் அறியக் கிடக்கிற ஏதுவினாலேயும், ஒருவடிவிலே யிருந் தொருவடிவு தோன்றி நின்றழிகிற காட்சிப் பிரமாணத் தினாலேயும் நீ நித்தியம் என்ற பூதாதிப் பிரபஞ்சமாகிய காரியம் நித்தியமன்றென்றும் ஒவ்வொரு காலங்களிலே சிருட்டிப் பட்டுந் திதிப்பட்டுஞ் சங்காரம் பட்டும் வருவதுண்டென்றும் ஆராய்ந்துணர்ந்த அறிவுடை யோர்கள் சொல்லார்களோ சொல்லுவர் என்றவாறு என்பதும் ஒருரை.*

இனி, இரண்டாஞ் சூர்ணி வருமாறு :

இனி, இல்லதற்குத் தோற்றம் இன்மையின் உள்ள தற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின ஒடுங் கின சங்காரத்தின் அல்லது உற்பத்தி யில்லை என்றது. இனி, இல்லதற்குத் தோற்ற மின்மையின் — என்று மில்லாததாகிய முயற்கோடு, ஆமை மயிர், ஆகாயப் பூ என்னும் பொய்ப் பொருள் ஒருகாலமும் உண்டாந் தன்மை யில்லாதாகையினாலும், உள்ளதற்குச் செய்வோ ரின்றிச் செய்வினை யின்மையின்—உள்ளதாகிய கடபடாதி களுக்குச் செய்வோ ரில்லாமற் செயற்படுந்தன்மை யில்லா தாகையினாலும், ஒடுங்கின சங்காரத்தி னல்லது உற்பத்தி யில்லை யென்றது — சங்கரிக்கிற சங்கார கர்த்தாவினாலே யல்லது உண்டாந் தன்மை யில்லையென்று சொன்னது.

இனி, உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின்ஒடுங்கினசங்காரத்தினல்லதுஉற்பத்தியில்லை யென்றது என்பதற்கு என்றுமுள்ள காரணமாகிய மண் ணிலே என்றுமுள்ள காரியமாயிருந்து வருகிற குடம் சட்டி சால் முதலாகிய பலவுருக்களும் வனையுந் தொழிலை யுடைய குயவனையின்றிக் காரியப்பட்டு வாராததினாலும் காரிய ரூபமாயிருக்கிற பிரபஞ்சமும் இங்ஙனம் சொன்ன ஏதுப்படிக்கு முன்சங்கரித் தொடுக்கின கர்த்தாவினால் உண்டாவ தன்றித் தானே காரணமாகிய மாயையிலி ருந்து காரியரூபமாய்த் தனுகரண புவன போகம் தோன்று தென்று நாம் சொன்னது என்பதும் ஒருரை.

உதாரணவெண்பா :

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தால்
இலயித்த வாறுளதா வேண்டும் — இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு.

(இ-ள்) இலயித்ததன்னில் இலயித்தது ஆம்—சங்கரித்த சங்காரகர்த்தாவினாலே சங்காரப்பட்ட பிரபஞ்சம் மீளவும் முண்டாம். சங்காரப்பட்டபிரபஞ்சம் சங்காரப் பட்டபடியே போகாமல் மீளவும் உண்டாவானேன்? மலத்தால் — மலந்தீர்ந் தொடுங்கா தாகையினாலே மலந் தீர்ந் தொடுங்குவது காரணமாக, இலயித்தவாறு உளதா வேண்டும் — சங்காரப்பட்ட முறைமையிலே சங்கார கர்த்தாவினாலே மீளவு முண்டாக வேண்டும். சங்கார கர்த்தாவினாலே சங்காரப் படுமென்று சொல்லுவானேன்? சங்கார கர்த்தா ஏதுக்கு? இலயித்தது அத்திதியில் என்னின் — திதிகர்த்தா திதயிறந்து நிற்கவே சர்வமும் சங்காரப் படுமென்று சொல்லுவாயாகில், அழியாது — தோப்பு வைத்தவன் தண்ணீர் வாராதிருந்தால் வாடியும் வதங்கியும் நிற்குமே யல்லாமற் சர்வமும் சங்காரப் படாது. ஆனால் சர்வமுஞ் சங்காரப் படுகிறதெப்படி? அவை அழிவது அத்திதியும் ஆதியும்—சிருட்டி கர்த்தாவுந் திதி கர்த்தாவுஞ் சங்காரப் படவே சர்வமுஞ் சங்காரப்படும். சிருட்டி கர்த்தாவுந் திதிகர்த்தாவும் சங்காரப்பட்டால் மீளவும் பிரபஞ்சம் உண்டாகிறதெப்படி? ஆம் அங்கு — அந்தச் சங்கார கர்த்தாவினாலே மீளவு முண்டாகும் என்றவாறு.

இனி, ஒருரை வருமாறு:

இலயித்த தன்னில் இலயித்ததாம்—சங்கரித்த சங்கார கர்த்தாவினாலே சங்காரப்பட்ட பிரபஞ்சந் திரும்பவும் உண்டாம். ஆனால், காக்கிறவன் இருக்கக் காவல் அழியுமோஎன்னில்? அவைஅழிவது அத்திதியும் ஆதியுமாமங்கு — சங்கார கர்த்தா காக்கிறவரையும் காவலையும் சிருட்டிக்கிறவரையும் சிருட்டியையும் அழிக்கையினால்

சர்வமும் சங்காரப்படும். ஆனால் திதிகர்த்தாவும் சிருட்டி கர்த்தாவும் அல்லாமல் திரும்பச் சிருட்டி திதி எப்படி உண்டாம் என்னில், அந்த இருவரையும் பிரபஞ்சத்தையும் சங்கார கர்த்தாவினுடைய ஆக்கினைசத்தி கன்மத்தின் வழியே உண்டாக்கும் என்றறிவாயாக என்றவாறு.

சங்காரப்பட்ட பிரபஞ்சம் சங்கார கர்த்தாவினாலே எப்படி உண்டாமென்னில் உதாரண வெண்பா

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமாம்
அத்தன்றா ணிற்ற லவர்வினையால் — வித்தகமாம்
வேட்டுவனுமப்புழுப்போல்வேண்டுருவைத்தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து.

(இ-ள்) மண் குளிர்ந்து வித்துண்டாமூலம் முளைத்தவாபோல்—தண்ணீர் பாய்ந்து பூமி குளிர்ந்து பதம் செய்த இடத்து வித்திலே உண்டாகிய அங்குரங்களெல்லாம் பரிணமித்துஅங்குரித்து எழுந்துவருவதுபோல, தாரகமாம் அத்தன்நிற்றல்—எவ்விடத்திலும்நிறைந்திருக்கின்ற கர்த்தாவினுடைய திருவடித் தாமரையானது மாயையிலே பதிந்த இடத்து, அவர் வினையால் — அவரவர் வினைக்கு ஈடாகிய சரீரம் மாயையின் இடமாக மாறி உண்டாம்: நீர் மாறி உண்டாம் என்று சொல்லுவானேன்? ஆட்டிலே ஆடும் மாட்டிலே மாடும் வாழையடி வாழைபோலத் தத்தம் மரபிலே எடுத்துக் கொள்ளும். வித்தகமாம் — நீர்சொன்னது ஆச்சரியமாம், வேட்டுவனும் அப்புழுப் போல்—புழு வேட்டுவாளியானதுபோல், வேண்டுருவைத் தான் கொடுத்து—அவரவர் விரும்பப்பட்ட சரீரத்தையும் கொடுத்து, கூட்டானே — அதற்கேற்ற போகத்தையும் கர்த்தாத் தானே கூட்டி முடிப்பது என்றவாறு.

இனித், தாரகமாம் அத்தன் தாள்நிற்றல்—கர்த்தாவினுடைய பராசத்தியின் கிருபை மாயையில் வியாபித்த போது பிரபஞ்சம் மாயையிலே சிருட்டிப்படும். அவர் வினையால் — சர்வ சங்கார காலத்தில் கேவலத்தில் ஒடுங்கின ஆன்மாக்கள் எல்லாம் வினைக்கீடான சரீரங்களை மாயையிலே மாறி எடுத்துக் கொண்டு வரும். புத்தன் மாறிப்பிறந்தது தத்தம் மரபிலே தோன்றிவரும் என்னில், வித்தகமாம் — நீ சொன்னது ஆச்சரியமாயிருந்தது, வேட்டுவனும் அப்புழுப்போல்— இவ்விடத்திலே பச்சைப் புழுவானது வேட்டு வாளிப் பூச்சியாகியும், மயிர்ப் புழு கருவண்டாகியும், நீர்ப் பூச்சி தட்டானாகியும் உருவம் மாறிப் பிறப்பதுபோல ஆன்மாக்கள் கன்மத்துக்கு ஈடாய் மாறிப் பிறந்துவரும். அப்படியானாலும் உயிர்கள் தாமே வேண்டிய தேகத்தை எடுத்துக் கொண்டு வரும் என்னில், கேவலத்திலேயே அறிவின்றிக் கிடந்து மாயா தேகத்தைப் பற்றியே பின்பு அறிவைப்பெறும் ஆன்மாக்கள் ஆகையால் வேண்டிய தேகத்தை அறிந்து செய்தெடுத்துக் கொள்ள மாட்டாது. ஆனதினால், வேண்டுருவைத்தான்கொடுத்து— புசிக்கும் வினைக்கு ஈடான தேகங்களை மாறியும் மாறுமலும் மாயையிலே உண்டாக்கிக் கொடுத்து, கூட்டானே— அந்தந்தத் தேகங்களுக்கு ஏற்ற புசிப்புந் தொழிலும் இருக்கிற புவனங்களிலே கூட்டிப் புசிப்பிப்பர் அரனாகிய கர்த்தாஎன்றவாறு என்பதும் ஓர் உரைநடைப் பேதமாம். அளவில்லாத பிரபஞ்ச உலகத்திலுள்ள அளவில்லாத ஆன்மாக்களுக்கு எல்லாம் கர்த்தா ஒருவராக நின்று ஒன்றிலும் தோயாமல் விடயமற ஐந்து தொழிலும் செய்வது எப்படியென்னில். **உதாரணவெண்பா :**

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தில்<br>
தாக்காது நின்றுளத்திற் கண்டிறைவன் — ஆக்காதே

கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்

கண்டவனி லிற்றின்றாங் கட்டு.

(இ-ள்) அன்றே — அநாதியிலே, இறைவன் — கர்த்தா ஆனவன், நின்று — சர்வ ஆன்மாக்களிடத்திலேயும் விட்டு நீங்காமல் நின்று, உளத்தில் கண்டு—அவரவர் செய்யப்பட்ட கன்மத்தை எல்லாம் தனது திருவுள்ளத்திலே அடைத்தருளி, ஆக்காதே ஆக்கி — சிருட்டியாதே சிருட்டித்தும், நோக்காது நோக்கி — இரட்சியாதே இரட்சித்தும், நொடியாதே நொடித்தும் — சங்கரியாமற் சங்கரித்தும் இப்படிவரச்செய்தேயும். கர்த்தாவுக்கு விகாரம் இல்லை என்றது எந்த ஏதுவினாலே? காலத்தில் தாக்காது— காலமானது மூன்று விதமாகக் காரியப்பட்டு வரச்செய்தேயும் காரணத்துக்கு இல்லாததுபோலக் கர்த்தாவுக்குப் பந்தமில்லை: என்று சொன்னது எந்தஏதுவினாலே? கண்ட நனவுணர்வில் கண்ட கனவு உணரக் கண்டவனில்— கனவிலே கண்ட காட்சியை நனவிலே விசாரித்தறியும் இடத்துக் கண்டவனுக்கு இல்லாததுபோல, இற்று இன்றாம் கட்டு — கர்த்தாவுக்குப் பந்தமில்லாததும் இந்த முறைமைத்தாம் என்றவாறு.

இனிக், காலத்திற்றாக்காது நின்று — காலமானது ஒன்றாய்ச் செல்காலம் நிகழ்காலம் எதிர்காலமாகிக் கர்த்தாவின் ஏவலினாலே உலக முழுதும் தன்னிடத்திலே முத்தொழிற்பட அந்தத் தொழில் விகாரந்தாக்காமல் தான் விகாரமற நின்றது போலக் கர்த்தாவும் காலம் முதலான தத்துவங்களை எல்லாம் அற்றே சகலத்தேற்றி ஆன்மாக்களுடைய கன்மங்களை எல்லாம் திருவுளத்திலே கண்டு, நோக்காதே நோக்கி — இரட்சியாதே இரட்சித்தும்,

நொடித்தும் — சங்கரியாதே சங்கரித்தும், ஆக்காதே — சிருட்டித்தும், அன்றே — அநாதியிலே தொடுத்துப் பஞ்ச கிருத்தியங்களைச் செய்வர்: ஆனால், ஆன்மாக்களுடைய இன்ப துன்பத் தொடக்கு கர்த்தாவுக்குத் தாக்காதோ என்னில் தாக்காது: அதெப்படி என்னில்? கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்கண்டவனில் இற்றின்றுங்கட்டு—கனவு கண்டவனுக்கு நனவிலே கனவு கண்ட வாதனை தாக்காமல் அறிவது போலக் கர்த்தாவுஞ் சகலமும் அறிந்து உலக வாதனை தாக்காமல் பரிபூரணசொரூபியாய் நிற்பர் என்றவாறு என்பதும் ஒருரை.

கர்த்தாவுக்குந் திருவுரு உண்டாகையாற் பிரபஞ்ச விகாரந்தாக்குமென்னில் அவர் அநாதிமுத்தராய் ஞானமே திருமேனியர் ஆகையால் மலவிகாரம் தாக்காமல் நின்மலனாக நின்று பஞ்சகிருத்தியஞ் செய்வார். சுட்டுணர்வுகளை உடைய ஆன்மாக்கள்போல் அல்லஎன்று உணர்த்துகிறார்.

இதற்கு மூன்றாஞ் சூரணி வருமாறு:

இனிச், சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் — அதுஇது என்று சுட்டியறியப்பட்ட தேகாதிப் பிரபஞ்சம், சுட்டு உணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழிஅல்லது—அது இது என்று சுட்டி யறியப்படாத சங்கார கர்த்தாவின் வழித்தல்லது, சுதந்திரமின்றி நிற்றலால் — தனக்கென வேறே தொழிற்படும் சுதந்திர முறைமையின்றி நிற்றலால், சங்காரமே முதலென்றது—சங்கார கர்த்தாவே முதன்மையாகிய கர்த்தா: மற்ற மாயா தேகங்களைப் பற்றியவர் ஆக்கினையின் நடக்கிற பிரமா விஷ்ணு முதலாகிய ஆன்மாக்கள்: முதலல்ல என்று சொன்னது.

*உதாரண வெண்பா :*

ஒன்றலா வொன்ற லுளதாகி நின்றவா
றொன்றலா வொன்றிலவை யீறுதல் — ஒன்றலா
ஈறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு.

(இ-ள்) ஒன்றலா ஒன்றால்—அது இது என்று சுட்டி அறிகிற பிரபஞ்சப் பொருளில் ஒன்று அல்லாத சங்கார கர்த்தாவாகிய ஒருவராலே இது என்று சுட்டியறியப் பட்ட பிரபஞ்சம், உளதாகி நின்றவாறு — சிருட்டிப்பட்டும் திதிப்பட்டும்நிற்கிற முறைமையினாலே, ஒன்றலா ஒன்றில் அவை யீறு—அது இது என்று சுட்டி அறியப்படாத அந்தச் சங்கார கர்த்தாவினாலே அந்தப் பிரபஞ்சம் சங்காரப்படும், ஆதல் — ஆகையினாலே, ஒன்றலா ஈறே முதல்—அது இது என்று சுட்டி அறியப்படாது பிரபஞ்ச அதீதனாகிய சங்கார கர்த்தா ஒருவனே பெத்தம் முத்தி இரண்டினும் அந்தப் பிரபஞ்சத்துக்கு முதன்மையாகிய கர்த்தாவாம். அதனில் ஈறலா ஒன்று—அந்தப் பிரபஞ்சத்திற் சங்காரப்படாத ஆன்மா ஒன்று, பலவாறே தொழும் பாகும்—பலபிரகாரத்தினாலேயும் அடிமையாகும், அங்கு— அந்தச் சங்கார கர்த்தாவுக்கு என்றவாறு.

இனி, அதனில் ஈறலா ஒன்று பலவாறே தொழும் பாகு மங்கு என்பதற்கு அவர் சங்கரிக்கப்பட்ட பிரபஞ்ச மாயா காரியத்துடனே கூடி இறவாமல் மலகேவலத்தில் ஒடுங்கின பிரம விஷ்ணுக்கண் முதலாகிய ஆன்ம வர்க் கங்கள் எல்லாம் பல பிரகாரத்திலும் அந்தச் சங்கார கர்த்தாவுக்கு அநாதியாகிய அடிமைகளாக இருக்கும் என்றறிவாயாக என்றவாறு என்பதும் ஓர் உரை.

**முதற் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.**

## இரண்டாஞ் சூத்திரம்.

**அவையே தானே யாயிரு வினையிற்**
**போக்கு வரவு புரிய வாணையி**
**னீக்க மின்றி நிற்கு மன்றே.**

மாயாவாதி எல்லாம் ஏகப் பிரமம் ஒன்றே என்று வேதம் சொல்ல நீர் கர்த்தா வேறென்றும் ஆன்மாக்கள் வேறென்றும் மலமாயாகன்மங்கள்வேறென்றும் சொல்லு வானேன்? என்றவனை மறுத்துப் பதிபசுபாச மூன்றும் அநாதி நித்தியமென்றும், கர்த்தாவாகிய பரமசிவன் முன் சங்காரப்பட்டு மலத்தில் ஒடுங்குமென்ற ஆன்மாக்கள் எல்லாம் அந்த ஆணவ மல நோய் தீர்ந்து மோட்சம் பெறும் பொருட்டுத் திரும்பவும் பிறப்பித்து மாயா தேகம் பாத்திரமாகவும் கன்மமாகிய இருவினைப் பிராரத்துவ இன்ப துன்பம் மருந்துகளாகவும் கூட்டி ஊட்டிப் புசிப் பித்து அந்த வழியே சிவபுண்ணியங்களை அபுத்தி பூர்வத் திலும் புத்தி பூர்வத்திலும் உபாயச் சரியை யாதி வழி யிலும் உண்மைச் சரியை யாதி வழியிலும் நிரம்ப வேற றிவித்து மும்மலங்களையும் நீக்கி மோட்சம் கொடுத்து இரட்சிப்பர் என்று இச்சூத்திரத்தால் உணர்த்துகிறார்.

(இ-ள்) அவையே தானே ஆய் — கர்த்தா முன் சொன்ன ஆன்மாக்கள் பலவும் தானேயாய் இரண்டற அத் துவிதமாய்க் கலந்து நின்று, ஆணையின் இரு வினையின் — கர்த்தாவினுடைய ஆக்கினை சத்தியாகிய திரோதன சத்தி யினாலேநல்வினை தீவினைக்கு ஈடாக, போக்கு வரவு புரிய— சனன மரணப்பட்டு வருமிடத்தும், நீக்கம் இன்றி நிற் கும் — சர்வ ஆன்மாக்களிடத்திலேயும் விட்டு நீங்காமல் நிற்பன், அன்றே — அநாதியிலே என்றவாறு.

இனி, போக்கு வரவு புரிய — வினை புசித்துத் தொலையு நிமித்தம் பிறந்து இறந்து பூமி சுவர்க்க நரக இடங்களிலே போக்கு வரவு செய்ய, நீக்கமின்றி நிற்கும் அன்றே — இப்படிப் போக்கு வரவு செய்யும் ஆன்மாக் களிடத்திலேயும் சகலப் பிரபஞ்சத்தினிடத்திலேயும் நீங்காமல் ஒன்றிலும் ஒட்டியும் ஒட்டாமற் கர்த்தாவும் நின்மலராய் நிற்பர் என்றவாறு என்பதும் ஓர் உரை.

என்பது சூத்திரம் என்னுதலிற்றோ வெனின் — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங்கிற்றோ வெனின், புனருற்பவம் வருமாறு உணர்த்துதல் நுத லிற்று — இரண்டாவதும் சிருட்டிப்பட்டு வருகிற முறை மையைச் சொல்லத் தொடங்கிற்று என்றவாறு.

இனி, என்னுதலிற்றோ வெனின் — என்ன சொல் லக் கருதிற்றோ வெனின் என்பதும்; புனருற்பவம் வருமா று உணர்த்துதனுதலிற்று — ஆன்மாக்கள் திரும்பத் திரும்பச் சிருட்டிப்பட்டு வரும் முறைமையைச் சொல்லக் கருதிற்று என்பதும் ஓர் உரை.

இதற்கு, முதற் சூரணி வருமாறு :

ஈண்டு அத்துவிதம் என்றசொல்லானே ஏகம் என் னில், ஏகமென்று சுட்டுவது உண்மையின் அத்துவிதம் என்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்துமாயிட்டு.

ஈண்டு அத்துவிதம் என்ற சொல்லானே ஏகம் என்னில் — இவ்விடத்திலே இரண்டல்ல என்ற சொல் லினாலே நீ ஒன்றென்று சொல்லில், ஏகமென்று சுட்டுவது உண்மையின் — ஒன்றென்று சுட்டிச் சொல்லிக்கொண்டு நிற்கிறது ஒன்று உண்டாகையினாலே, அத்துவிதம் என்ற சொல்லே — இரண்டல்ல என்ற சொல்லுத்தானே,

அந்நிய நாத்தியை உணர்த்தும் — அந்நியத்தை நாத்தி பண்ணி அநந்நியத்தை அறிவிக்கும். ஆயிட்டு — இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் தானேயாய் நிற்கும் என்றது. ஆகையினாலே சர்வ ஆன்மாக்களும் கர்த்தாத் தானேயாய் நிற்கும் என்று சொன்னது.

இனி, ஈண்டு அத்துவிதம் என்ற சொல்லானே ஏகமென்னில்—இவ்விடத்திலே நான்கு வேதமும் அத்துவிதம் என்று சொன்னதினாலே பிரமத்தைத் தவிர ஆன்மாக்கள் வேறே இல்லை, எல்லாம் ஏகப் பிரமமே வேதம் சொன்ன அத்துவிதம் என்ற சொல்லுக்குப் பொருள். துவிதம் என்பது இரண்டு: அத்துவிதம் என்பது ஒன்றே என்று மாயாவாதி சொல்ல அவனை மறுத்துப் பதிபசுபாசம் முப்பொருளும் அத்துவிதமாய் இருக்கும் என்று வேதம் சொல்வதென்று உணர்த்துகிறார்.

ஏகமென்று சுட்டுவது உண்மையின்—பிரமம் ஒன்றென்று சுட்டியறியும் ஓர் அறிவு வேறே உண்டாகையால் அப்பிரமத்தைத் தவிர, அப்பிரமம் ஒன்றென்று சொல்லும் ஆன்மாக்கள் வேறே உண்டு. ஆனால், வேதம் ஒன்றென்று சொல்லுவானேன் என்னில் அத்துவிதம் என்னும் சொல்லுக்குப் பொருள் நீ அறியாய். அத்துவிதம் என்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்தும் — அந்த அத்துவிதம் என்ற சொல்லுக்கு அர்த்தம் பிரமத்தைத் தவிர ஆன்மாக்கள் வேறே இராதென்று சொல்லுகிறது. ஆயிட்டு—ஆனதினாலே, இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் தானேயாய் நிற்கும் என்றது.

இங்ஙனம் சொன்ன ஆன்மாக்கள் பலவினும் பரப்பிரமமாகிய சிவம் தானேயாய் அந்நியமற அநந்நியமாய் வேறறக் கலந்து ஒன்றும் ஆகாமல் இரண்டுமாகாமல்

உடலும் உயிரும் போல அத்துவிதமாய் நிற்பரென்று வேதம் சொல்லுவது என்று யாம் சொன்னது என்பதும் ஓர் உரை.

உதாரண வெண்பா :

கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ளம்
இட்டதொரு பேரழைக்க வென்னென்றுங் — கோட்டி
அவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு.

(இ-ள்) கட்டு முறுப்பும்—நரம்பு நாடிகளினாலே கட்டப்பட்ட சத்த தாதுக்களும்பஞ்சேந்திரியங்களும்கன்மேந்திரியங்களும், கரணமும்—அந்தக் கரணங்களும், கொண்டுள்ளம் இட்டதொருபேர் அழைக்க என் என்றுங்கு — இவை எல்லாம் உடைத்தாய் இருக்கிற சரீரத்துக்கு ஒரு பேர் இட்டழைக்கும் இடத்து ஆன்மா என்னென்றது போல, ஒட்டி அவன் உளம் ஆகில்லான்— சர்வ ஆன்மாக்களிடத்திலும் பொருந்தி நிற்கிற கர்த்தா ஆன்மா ஆகான், உளம் அவனுமாட்டாது —ஆன்மாவும் கர்த்தாவாக மாட்டாது, அவன் உளமாய் அல்லனுமாம்—கர்த்தா ஆன்மாவுமாய் அல்லாதவனுமாய் நிற்பன், அங்கு—அந்த உடலும் உயிரும் போல என்றவாறு.

இனிக், கட்டு முறுப்பும் கரணமும் கொண்டு உள்ளம் — நரம்பு நாடி தசை என்பு முதலானவற்றால் கட்டி இருக்கிற அவயவம் உடைய தேகத்தையும் அதற்குள்ளே பொருந்தி இருக்கிற அந்தக்கரணம் முதலாகிய கருவிகளையும் ஆன்மா தானாகப் பொருந்திக் கொண்டு நின்று, இட்டதொருபேரழைக்க என்னென்றுங்கு ஒட்டி—

அந்தக் கரண முதலாகிய மூத்தேகத்துக்கிட்ட பேர் சொல்லி ஒருவர் அழைக்கத் தேகத்துக்கு வேருயும் தேகமாயும் நின்றேன் என்றாற்போலப் பிரமமாகிய சிவமும் ஆன்மாக்கடோறும் ஒட்டி நின்று ஆன்மாவாயும் ஆன்மாவுக்கல்லவாயுமே நடத்துவன், அவனுளமாகில்லான் உளம் அவனு மாட்டாது—அப்படி நின்றுலும் சிவன் ஆன்மாக்களாகான் ஆன்மாக்கள் சிவமாகமாட்டாது, அவனுளமாய் அல்லனுமாம் அங்கு-பரமசிவன் ஆன்மாக்களாயும் அவைகளல்லாமல் தனியாயுநிற்பன். அது எப்படிப்போல என்னில், ஆன்மா உடலாயும் உடலுக்கு அந்நியமாயும் நின்று நடத்துவது போல் என்றவாறு என்பது ஓர் உரை.

வேதத்திலே ஒன்றேஎன்று சொல்லவும் நீர் வேறே ஆன்மா உண்டென்று சொல்லுவானேன் என்னில் வேதம் ஒன்றே என்றதற்கு நீ பொருளறியாய் என்று உணர்த்துகிறுர்.

**உதாரண வெண்பா :**

ஒன்றேன்ற தொன்றேகா ணென்றே பதிபசுவாம்
ஒன்றேன்ற நீபாசத் தோடுளைகாண் — ஒன்றின்றல்
அக்கரங்க ளின்று மகர வுயிரின்றேல்
இக்கிரமத் தென்னு மிருக்கு.

(இ-ள்) ஒன்றென்றது ஒன்றே காண்—வேதத்திலே ஒன்றென்றுசொன்னது பதியாகிய பரமசிவம் ஒன்றே உலகத்துக்குமுதலல்லாமல் வேறே இரண்டில்லைஎன்று சொன்னதுகாண், ஒன்றே பதி — ஆனதினுல் ஒன்றே மேலான கர்த்தா: அவருக்கு இணையாக வேறே ஒருவருமில்லை

என்றறிவாயாக. ஆனால், வரையன்றி ஆன்மாக்கள் உண்டென்றறிவது எப்படி என்னில், பசுவாம் ஒன்றென்ற நீ பாசத்தோடு உளை காண்—பதி ஒன்றுண்டென்றறியாமல் எல்லாம் ஒன்றென்று சுட்டி அறிந்து சொல்லிக் கொண்டு நிற்கிற உன்னுடைய சுபாவந்தான் காண் பாச பெந்தியாகிய ஆன்மாவாய் நிற்கிறாய், ஒன்றின்றால் — பரமசிவனாகிய ஒரு கர்த்தா ஆன்மாக்களோடும் அநாதியே உயிர்க்குயிராய் எங்கும் நிறைந்து நில்லாதே போனால் ஆன்மாக்கள் தனித்து நிற்கமாட்டாவாம். மேலும், ஆன்மாவும் இல்லை பிரபஞ்சமும் இல்லை. அதெப்படிப் போல்? அக்கரங்கள் இன்றும் அகர உயிரின்றேல்—அகரமாகிய சூக்கும நாதவெழுத்தென்று வியாபித்துக் கூடாவிட்டால் உடல் எழுத்தாகிய அக்கரங்கள் தோன்றாததுபோல, இக்கிரமத்தென்னும் இருக்கு — இந்தக் கிரமம் என்று இருக்கு முதலாகிய வேதங்கள் சொல்லும் என்றவாறு.

இனி, ஒன்றின்றால் — ஒன்றாகிய கர்த்தா இல்லையேல் ஆன்மாவும் இல்லை. பிரபஞ்சமும் இல்லை. அது எப்படிப் போல? அக்கரங்களின்றும் அகர உயிரின்றேல்—அகரமாகிய உயிரெழுத்து இல்லாத இடத்து அக்கரங்களாகிய உடல் எழுத்தில்லாதது போல என்பது மற்றோர் உரை.

வேதத்திலே அத்துவிதம் என்று சொல்லுகிறதே அதெப்படி என்பார்க்குப் பின்னும் அவ்வத்துவிதத்துக்கு வேறே திட்டாந்தம் இட்டு உணர்த்துகிறார்.

**உதாரண வெண்பா :**

பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம் — அண்ணல்தாள்

பிரிப்பின்றி — பாசத்திற் கூடாமல் சிவத்தை விட்டு நீங்காமல் பிரிவின்றி நின்றால், தானே உலகாம் தமியேன் உளம் புகுதல் — தானே உலக வடிவாய் நின்ற ஒப்பில்லாத கர்த்தா என்னுகிய ஆன்மாவின் உள்ளத்திற் புகுந்து யானாகி நின்றதால், யானே உலகென்பன் இன்று — யானே பிரமம் என்று சொல்லலாம்: பாச பெந்திகள் சொல்லக் கூடாது (எ-று) என்பதும் ஒருரை.

இப்படிச் சிவானுபவப் படாமல் கன்ம மலத்தை இச்சிக்கும் பாச பெந்திகளான ஆன்மாக்களுக்கு இருவினையும் கூட்டும் முறைமைக்கு இரண்டாஞ் சூரணி வருமாறு:

இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என்றது — இங்ஙனம் சொல்லப்பட்ட சர்வான்மாக்களுக்கு நல்வினை தீவினை இரண்டும் கர்த்தாவினுடைய ஆக்கினையினாலே வரும் என்று சொன்னது: எந்த ஏதுவினாலே? ஒரு நகரியைக் காப்பான் — ஒரு பட்டணத்துக்குரிய இராசா ஆனவன், பாடிகாவல் இட்டாங்கு— சிற்றூரும் தனது பாதுகாவலாக வைத்த விடத்திலே தனதாக்கினை வைத்துச் செலுத்துகிறது போல அவை அவனது ஆக்கினை ஆதலால் கர்த்தாவினுடைய ஆக்கினையினாலே நல்வினை தீவினை இரண்டும் வந்து பொருந்தும் ஆகையினாலே சொன்னது.

இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என்றது இங்ஙனம் சொன்னவிருப்பு வெறுப்புக்களையுடைய ஆன்மாக்களுக்கு இருவினைப் பயன்களைக் கர்த்தா தமதாக்கினையினாலே அவன் அவள் அது என்னும் முன்னிலையினாலும் தன்மையினாலும்

படர்க்கையினாலும் கூட்டி முடித்து நடத்துவர். அதெப் படியென்னில்? ஒரு நகரியைக் காப்பான் பாடி காவலிட்டாங்கு அவை அவனது ஆக்கினையாகலான் — ஒரு பெரிய நகரியைக் காக்கும் இராசாவானவன் தனக்கு வேண்டிய சிற்றூர்களையும் உண்டுபண்ணி அங்கங்கே காவற்றொழிலாளிகளையும் வைத்துக் குடிகளைக் காக்கிறது போலக் கர்த்தாவும் பிரமா, விட்டுணு, தேவேந்திரன் முதலாகிய திக்குப் பாலகர் சந்திர சூரியர் முதலாகிய அநேக அதிகாரிகளையும் உண்டு பண்ணி அங்கங்கே ஆளு கிற சத்தியுங் கொடுத்து அவர்களுக்கும் மற்ற உயிர்களுக் கும் வினைக்கு ஈடான போகங்களைக் கொடுப்பர் என்று நாம் சொன்னது என்பதும் ஓர் உரை.

உதாரண வெண்பா :

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலின்
உள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே — வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

(இ-ள்) உள்ளதே தோற்ற—வினைக்கு ஈடாகிய சரீ ரமேஉண்டாக, உயிர் அணையும் அவ்வுடலின்—அந்தச் சரீ ரத்திலே ஆன்மா பொருந்தா நிற்பன், முற்செய்வினை உள்ளடைவே வள்ளல் அவன் செய்வன்—முன்னே செய் யப்பட்ட வினைக்கீடாகிய முறைமையினாலே வள்ளலாகிய கர்த்தா கூட்டி முடிப்பன். கர்த்தா கூட்டி முடிக்கவேண் டுமோ? கன்மம் தானே வந்து பொருந்தும் அது எப்படி என்னில், செய்பவர் செய்திப் பயன் விளக்கும் செய்யே போல்—செய்தபேர் செய்திக்குத் தக்க பிரயோசனத்தைக் கொடுக்கிற வயலைப் போல, உள்ளதாம் — உண்டாம்,

செயலணையா சென்று—வினைபோலசேதனம் ஆகிய சடம் ஆகையினாலே வினை தானாக வந்து பொருந்த மாட்டாது என்றவாறு.

இனி, உள்ளதே தோற்ற உயிரணையும் அவ்வுடலின் — ஆன்மாக்களுக்குள்ள வினைக்கு ஈடான தேகம் தோற்ற அதனை ஆன்மா பொருந்தும், உள்ள தாம் முற்செய்வினை உள்ளடைவே — அந்தத் தேகத்தின் வழியே யான யாம் முன்செய்த நல்வினை தீவினை புண்ணிய பாவம் ஆறத்துவாவிலும் கட்டுப்பட்டிருந்த சஞ்சிதவினையில் பாகப்பட்ட வினையை அடைவினால் பிரித்து, வள்ளலவன் — கர்த்தாவானவர் பிராரத்துவமாகிய இன்ப துன்பங்களைக் கூட்டிப் புசிப்பிப்பர், செய்பவர் செய்திப் பயன் விளக்கும் செய்யே போல் செய்வன் — வயலானது பிரயாசைப்பட்டுச் செய்த தொழிலுக்கேற்ற பலன்களைக் கொடுப்பது போல, கர்த்தாவும் ஏறாமல் குறையாமல் அவரவர் செய்த வினைக்கு ஏற்ற பலன்களைக் கொடுப்பன். செயல் அணையா சென்று—வினை தானே செய்த ஆன்மாக்களை அறிந்து பலன் கொடாது என்றவாறு என்பதும் ஒருரையாம்.

வினைகளைச் செய்த ஆன்மாக்கள் அறிவுடைய பேர்கள் அல்லவோ? ஆன்மாக்கள் தாமே வினைப்பலன்களைச் சென்று அறிந்து எடுத்துக் கொண்டு கூடும் என்னில் கூடாமாட்டாதென்று மறுத்து உணர்த்துகிறார்.

**உதாரண வெண்பா :**

அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போல் — அவ்வினையைப்

பேராம லூட்டும் பிரானி னுகரார்ரேல்
ஆர்தா மறிந்தணைப்பா ராங்கு.

(இ-ள்) அவ்வினையைச் செய்வதனில்—யாதொருவன் யாதொரு தொழிலைச் செய்யுமிடத்து, அவ்வினைஞர் தாம் சென்று அங்கு—அந்தத் தொழிலைச் செய்தவர்கள் தாமே அதற்குத் தக்க பிரயோசனத்தை அறுத்து மடக்கி எடுத்துக் கொள்ளுகிறது போல, அவ்வினையை காந்த பசாசம் போல் — அந்த வினையைக் காந்தமும் பசாசமும் போலப் பொருந்துவார்கள். வினையை பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல் — அந்த வினையை ஏறுமல் குறையாமல் அறிந்து புசிப்பிக்கிற கர்த்தாவினுலே அறிந்து புசியாதிருந்தார்களேயானுல், ஆர் தாம் அறிந்து அணைப்பார் — ஆர் தாம் அறிந்து கூட்டி முடிக்கப் போகிருர், ஆங்கு—அந்தக் காந்தமும் பசாசமும் போல என்றவாறு.

இனி, அவ்வினையைச் செய்வதனில் — அந்த இருவினையும் செய்த இடங்களிலே, அவ்வினைஞர் தாம் சென்றங்கு — அந்த வினைகளைச் செய்த ஆன்மாக்கள் தாமே சென்று, அவ்வினையைக் காந்த பசாசம் போல் — அந்த வினைப் பலன்களைக் காந்தமும் இரும்பும் தம்மிற் கூடுவது போலக் கூடும் என்னிற் கூடாது. அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல் — அந்த வினைகளை அறிந்து அந்தந்த உலகங்களிலே அந்தந்த ஆன்மாக்களைக் கூட்டி அந்தந்த இன்ப துன்பங்களாகிய போகங்களை மாறுபாடில்லாமல் பேராமல் ஊட்டுகிற கர்த்தாவினுலே அறிந்து புசியார்களேயானுல் அளவில்லாத அண்டங்களில் இருக்கிற அளவில்லாத போகங்களை அளவில்லாத ஆன்மாக்களுக்கு, ஆர் தாம் அறிந்து அணைப்

பார் ஆங்கு—யாவர்கள் தாம் அறிந்து கூட்டப் போகிறார்: ஆன்மாக்களாற் கூடாது என்றவாறு என்பது ஓர் உரை.

இப்படி ஆன்மாக்கள் சரீரத்தைப் பற்றி வினையைப் புசிப்பதற்கு இச்சையைக் கொடுத்த ஆணவம் மாயை காமியம் என்னும் மலம் மூன்றும் அநாதியென்று உணர்த்துகிறார். இனி, அவ்வினை தான் எப்போதுள்ளது என்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே — வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கமலத் தாம்.

(இ—ள்) நெல்லிற்கு உமியும்—நெல்லினிடத்திலே உமியும், நிகழ் செம்பினில் களிம்பும் — விளங்காநின்ற செம்பினிடத்திலே காளிதமும், சொல்லில் புதிது அன்று தொன்மையே — சொல்லுமிடத்துப் புதிதாயுள்ளதல்ல பழமையாகவுள்ளது, வல்லி — பெண்ணே, மல கன்மம் அன்று உள ஆம் — மலமும் கன்மமும் அநாதியே உள்ளதாம், பொன் வாள் அலர் சோகம் செய் கமலத்து — ஆதித்தனுடைய சந்நிதானத்திலே தாமரையானது அலர்தலும் குவிதலுமாய் வருகிறது போல, வள்ளலால் ஆம்— மலத்தினாலே கேவலப்பட்ட ஆன்மா கன்மத்துக்கு ஈடாகக் கர்த்தாவினுடைய சந்நிதானத்திலே சகலப்பட்டு வரும் என்றவாறு.

இனி, நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினிற் களிம்பும் சொல்லில் புதிதன்று தொன்மையே — நெல்லுக்குண்டாகிய தவிடு முளை உமியும் செம்பிற்குண்டான களிம்

பும் சொல்லுமிடத்து இடையிலே புதிதாக உண்டானதல்ல. அநாதி செயற்கையாய் ஆன்மா உண்டானபோதே உடன் தோன்றுதலாயிருக்கும். இதில் நெல் உவமை ஆணவம் மாயை காமியம் என்னும் மும்மலங்களும் முற்பிற்பாடில்லாமல் ஒன்ருய்த் தோன்றுவதாகும். செம்பு உவமை ஆணவ மலம் ஒன்றும் சகசமாய்க் கூடத் தோன்றும் என்பதற்கும் எனக் கொள்க. வல்லி மகடூஉ முன்னிலை. பெண்ணே! மல கன்மம் அன்று உளவாம்—ஆணவம் மாயை காமியம் என்னும் மும்மலங்களும் அநாதியிலே ஆன்மாக்களுக்கு உண்டானதாம். வள்ளலால் பொன் வாள் அலர் சோகம் செய் கமலத்தாம் — சகல ஆன்மாக்களும் மோட்சமாகிய சுத்தாவத்தையைக் கூடுமட்டும் அந்த வள்ளலாகிய கர்த்தாவினுடைய கிருபையினுலே மலம் பரிபாகமாகும்படிக்குக் கேவல சகலமென்னும் இரண்டவத்தையிலும் மாறிமாறி ஒடுங்கியும் உற்பவித்தும் வரும். அதெப்படிப் போல என்னில், சூரியனுடைய கிரணத்தினுலே அலர்தலும் குவிதலும் உண்டானதோ அவை போல் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

இனி, இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வரும் என்றது மாயாவாதி இப்படி அவத்தைப் படுவது சலப் பிரதி பிம்பம் போல மாயா கற்பிதமான சிதாபாச மயக்கமாகிய பொய்; எல்லாம் பிரமத்தைத் தவிர வேறே ஆன்மாக்களில்லை யென்ன. நீ சொன்னது பொய். இன்ப துன்பம் புசியாது இன்ப துன்பம் புசித்து வரும் ஆன்மா நித்தியனுய் வேறே உண்டென்று மறுத்து உணர்த்துதற்கு.

**மூன்ருஞ் சூரணி வருமாறு:**

இனி, இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வரும் என்றது — சர்வான்மாக்களும் செனன மரணப்பட்டு வரும் என்று சொன்னது. எந்த ஏதுவினாலே? தோற்ற மும் ஈறும் உள்ளதற்கல்லது உளதாதல் இன்மையான் — சிருட்டியும் சங்காரமும் உண்டாயிருக்கிற ஆன்மாவுக் கல்லது பிரமத்துக்கு உண்டாந்தன்மையில்லை ஆகையி னாலே சொன்னது.

உதாரண வெண்பா :

கண்ட நனைவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந்தத் தூடு விணையினாற் — கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனம்
தள்ள விழுங்கருவிற் றான்.

(இ-ள்) கண் செவி கெட்டு — கண் செவி முத லாகிய தூல தேகத்தை விட்டு நீங்கிச் சூக்கும தேகத் தைப் பொருந்தி, கண்ட நனைவை கனவுணர்வில் தான் மறந்து—நனவிலே கண்ட காட்சியைக் கனவிலே மறந்தது போல அறிவானது மயங்கி, அத்தூடு விண் படர்ந்து — அந்தச் சூக்கும தேகத்தைப் பொருந்தி ஆகாய மார்க்கத் திலே சென்று, விணையினால் உள்ளதே தோற்ற—விணைக்கு ஈடாகிய நரக சுவர்க்கங்களே உண்டாக அது புசித்துத் தொலைந்த பின்பு, உளம் அணுவாய்ச் சென்று — ஆன்மா அணுருபமாய்ச் சென்று, மனம் தள்ள — மன வேகம் தோற்க, விழும் கருவில் தான் — மீளவும் ஆன்மாக் கருப் பாசக் குழியிலே வந்து பொருந்தும் என்றவாறு.

இனி, கண்ட நனைவைக் கனவுணர்வில் தான் மறந்து — நனவிலே தூலதேகத்துடனே கூடி அறிந்த

அறிவையெல்லாம் ஒருவன் கனவிலே சூக்கும தேகத்துடனே கூடி மறந்து அரூப தேகவடிவாய்த் திரிந்து அலைந்தது போல, விண் படர்ந்து அத்தூடு வினையினால் கண் செவி கெட்டு — பூமியில் உண்டான ஆன்மாக்கள் கண் செவிமுதலாகிய உறுப்பையுடைய தூல தேகத்தைக் கெட்டுப் போம்படி விட்டுவிட்டு ஆகாய மார்க்கமாய்ச் சூக்கும தேகத்துடனே வினையினாலே பறந்து சுவர்க்க நரகங்களிலே போய் அநுபவித்துக் கர்த்தாவினுடைய ஆக்கினையினாலே, வினையினால் உள்ளதே தோற்ற—வினைக்கீடான தேகம் பெறுவதற்கு, உளம் அணுவாய்ச் சென்று மனம் தள்ள விழும் கருவில் தான் — ஆன்மாக்கள் அணுரூபமாய்ச்சென்று மனவேகமும் தோற்கும்படிக்கு அதிவேகத்துடனே சராயுசம் அண்டசம் சுவேதசம் உற்பீசம் என்னும் நால்வகை யோனி பேதக் கருவில் விழுந்து உற்பவித்துப் பூமியிலே பிறந்து வரும் என்றவாறு என்பது ஓர் உரை.

மாயாவாதி, ஆன்மாக்கள் பிறந்து இறந்து வரும் என்று சொல்லுவதென்ன? கடத்தில் வளைபட்ட ஆகாயம் மாகாயத்துடனே போக்குவரத்துச் செய்கிறது எனக் காண்பது போலவும், கூத்தாடி ஒருவனே பல வேடம் போட்டு ஆடுவது போலவும் பிரமத்தினுடைய விளையாட்டல்லாமல் வேறில்லை என்று சொல்ல அவனை மறுத்து உணர்த்துகிறார்.

**உதாரண வெண்பா :**

அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும் — பாவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

(இ-ள்) அரவு தன் தோல் உரிவும்-சர்ப்பமானது தோல்பற்றித் தோலுரிக்கிறது போலச் சரீரத்திரிவும், அக்கனவும் — நனவிலே கண்ட காட்சியைக் கனவிலே மறந்ததுபோல அறிவுத் திரிவும், வேறு பரகாயம் போய் வரும் அப்பண்பும் — சித்தர்கள் ஆகாய மார்க்கத்திலே பரகாயப் பிரவேசம் பண்ணுகிறது போல இடத்திரிவும், பரவில் — விசாரிக்குமிடத்தில், குடாகாய ஆகாயக் கூத்தாட்டாம்-குடம் உடைந்த இடத்துக் குடத்தில் ஆகாயம் பெரிய ஆகாயத்தோடே கூடும் என்பதும் ஒருவன் பல கூத்துக் கட்டி நடித்த இடத்துக் கூத்து வேறு அவன் வேருய் நிற்பன் என்பதும், அடாது — பிரமத்துக்கு அடாது, உள்ளம் போமாறு அது — ஆன்மா செனன மரணப்பட்டு வருகிற முறைமை அரவுதன் தோலுரிவும் அக்கனவும் போல என்றவாறு.

இனி, அரவுதன் தோல் உரிவும் — சர்ப்பமானது தோல்பற்றித் தோலுரித்துச் சட்டை கழற்றிப் போவது போல இறக்கும்போது தூலதேகத்தை விட்டு மறந்து சூக்குமதேகத்தைப் பற்றி நடக்கும் உடற்றிரிவும், அக்கனவும் — கனவிலே நனவு அறிவு தெரியாதது போல தூலதேகத்தறிவு மறந்து சூக்குமதேக அறிவாய் முட்டையிலிருந்த புள்ளு முட்டைக் கூட்டை விட்டுப் பிரிந்த போது முட்டையிலிருந்தோம் என்பது தெரியாமற் பறந்து போவது போல் சூக்தும தேகத்துடனே பறந்து செல்லும் அறிவுத் திரிவும், வேறு பரகாயம் போய் வரும் அப்பண்பும் — பரகாயப் பிரவேசம் பண்ணுகிற சித்தாதிகள் ஒரு தேகத்தை விட்டு ஒரு தேகத்திற் புகுந்து அந்தத் தேக வடிவாய் நின்று அநுபவிப்பது போல ஆன்மாக்கள் தூல தேகத்தை விட்டுச் சூக்கும தேகவடிவாய்ப் பூத

சார சரீரத்தைப் பொருந்திச் சுவர்க்காதி போகவிடத்தினும் பூததேகமான யாதனா சரீரத்தைப் பொருந்தி நரகாதி வேதனை இருக்குமிடத்தினும் பூத பரிணாமமான தேகத்தைப் பொருந்திப் பூமியினிடத்தினும் வரும் இடத்திரிவும் இப்படி மூன்று திரிவுக்குட்பட்டு ஆன்மாக்கள் மாறி மாறிப் பிறந்திறந்து வருவதல்லது, பரவில் — விசாரித்தறிந்தால், குடாகாய ஆகாயக் கூத்தாட்டாம் என்பது அடாது — நீ பிரமம் தானே குடாகாய மகா காயத்தில் திரிவது போலும் கூத்தாடி ஒருவன் தானே பல வேடம் போட்டு ஆடுவது போலும் விளையாடும் என்று சொல்லுவது பொருந்தாது, உள்ளம் போமாறது — ஆன்மாக்கள் பிரமத்துக்கு வேறாய்ப் பிறந்திறந்து வருவது நாம் இங்ஙனம் சொன்ன திட்டாந்தப்படியே உள்ளதென்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

இப்படி ஆன்மாக்கள் பிரம வியாபகத்துக்குள்ளே பிறந்து இறந்து வர அவர் பற்றற நிற்பது எப்படி யென்னில் அப்பற்றற நின்மல சொரூபியாய் நிற்பர் என்பதற்கு **நாலாம் சூரணி** வருமாறு :

இனி, நீக்கமின்றி நிற்கும் அன்றே என்றது கர்த்தா சர்வ ஆன்மாக்களிடத்திலும் அநாதியே விட்டு நீங்காமல் நிற்பன் என்று சொல்லிற்றே: அது எந்த ஏதுவினாலே? அவன் ஏக அநேகம் இரண்டுமின்றி: அவன் ஏகம்—ஒன்றும் அல்லாமல், அநேகம்—பலவும் அல்லாமல், இரண்டும் இன்றி— இந்த இரண்டு முறைமைகளும் அல்லாமல், சர்வ வியாபியாய் நிற்கலான — சர்வத்திர பரிபூரணனாய் நிற்கையினாலே சொன்னது.

இனி, நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது இப்போது அந்தப் பிரமமாகிய கர்த்தா எங்கும் நீக்கமற ஒன்

றினும் ஒட்டாமல் நிற்பன் என்று நாம் சொன்னது. அவன் ஏக அநேகம் இரண்டும் இன்றி சர்வ வியாபியாய் நிற்கலான். அவன் ஏகமாய்த் தனித்து நில்லாமல் அநேகமாய்ப் பிரிந்து பலவுமாய் நில்லாமல் சடசித்துக்கள் எங்கும் சர்வ வியாபியாய் ஆகாயம் போலப் பற்றற நிற்பதனுல் என்று அறிவாயாக என்பதும் ஓர் உரை.

உதாரண வெண்பா :

எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னில்
எங்கு முளனன் றெவற்றெவனும் — அங்கண்
அவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீசன்
அவையுடைமை யாளாநா மன்று.

(இ-ள்) எங்கும் உளன் என்று அளவை — எவ்விடத்திலும் சர்வத்திர பரிபூரணனாய் நிற்கிறவன் என்ற அளவைப் பிரமாணங்களினாலே வேதாகமங்கள் சொல்லுகையினாலே, ஒன்று அன்று — ஒன்றுமல்ல, இரண்டு என்னில் — நீ இரண்டென்று சொல்லுவாயேயானால், எங்கும் உளன் அன்று — எவ்விடத்திலும் சர்வத்திர பரிபூரணனாய் நிற்கிறவன் என்று சொல்ல வேண்டுவதில்லை, எவற்று எவனும் — எவற்றாகிய பிரபஞ்சமும் எவனாகிய ஆன்மாவும், அங்கண் — அவ்விடத்திலே, அவை அவனன்றில்லை — கர்த்தாவில்லையோ ஆன்மாவுமில்லை, பிரபஞ்சமுமில்லை. அது எப்படிப் போல? பொன் ஒளி போல், ஆதித்தனில்லையோ கண்ணும் பதார்த்தங்களும் இல்லாதது போல். ஈசன் அவை உடைமை — பிரபஞ்சமெல்லாம் கர்த்தாவின் உடைமை. ஆளா நாம் அன்று — ஆன்மாக்களெல்லாம் கர்த்தாவினுடைய அடிமை அநாதியிலே என்றவாறு.

இனி, எங்கும் உளன் என்று அளவை ஒன்றன்று— வேதம் எங்கும் உளன் என்று சொன்னதற்குப் பொருள் ஒன்றென்று சொன்னதல்ல. ஆனால் உலகத்துக்கு வேருய் இரண்டுபட நிற்பரோ என்னில், எங்கும் இலன் அன்று— அநாதியிலே எங்கும் பரிபூரணனாய் நிற்பன் என்பது கூடாது. ஆனால் எப்படி? எவற்று எவனும் — எல்லாப் பிரபஞ்சப் பொருளினிடத்தும் எல்லா ஆன்மாக்களிடத்தும் அங்கு என்ற கர்த்தா சர்வ பரிபூரணனாய் நிற்பன் என்றதாம். அவை அவனன்றில்லை — இங்ஙனம் சொன்ன சட சித்து என்னும் இருவகைப் பொருளும் அநாதியிலே கர்த்தா இல்லையோ அவை இரண்டும் இல்லை; என்று கர்த்தா உண்டோ அன்று அவ்விருவகைப் பொருளும் உண்டு. அது எப்படி யென்னில்? பொன் ஒளி போல் ஈசன் — என்று காட்டும் சூரியன் உண்டோ அன்று காணும் கண்களும் உண்டு, என்று காணும் கண்கள் உண்டோ அன்று காணப்படும் பொருள்களும் உண்டு என்று அறிவாயாக. ஆனால், சூரியனைப்போல பற்றற்று எங்கும் தோய்ந்தும் தோயாமல் நிற்கிற கர்த்தாவுக்கு இந்த இரண்டு வகைப் பொருளினாலும் பிரயோசனம் ஏது என்னில் அவை உடைமை ஆளாம் நாம் அன்று— அநாதியே தொடுத்துச் சகலப் பிரபஞ்சத்திலுள்ள பொருளெல்லாம் அவனுக்கு உடைமையாயும் சகல ஆன்மாக்களும் அவனுக்கு அடிமையாயும் இருக்கும் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

இரண்டாஞ் சூத்திரம் அத்துவிதத்துக்குப் பொருள் ஒன்று என்றவனை மறுத்துப் பதி, பசு, பாசம் முப்பொருளும் அத்துவிதம் என்று சொன்ன கருத்து முற்றியது.

முதற் சூத்திரத்தில் உலகாயதன், புத்தன், பாஞ்சராத்திரியாகவும், இரண்டாஞ் சூத்திரத்தில் மாயாவாதியாகவும் பேசின சீடன் இரண்டாஞ் சூத்திரங் கேட்டு முடிந்த அனுபவத்தில் முன் ஏகப்பிரமம் சாதித்து நானே பிரமம் என்ற கருத்து நீங்கி அறிவுக்கு வேறாய் தேகாதிப் பிரபஞ்சம் சற்றே பிரிந்து ஐயக் காட்சியாய்த் தோன்றக் கண்டதனால் தத்துவ ரூபம் பிறந்தது. அந்தப் பரிபாகங் கண்டு தத்துவ தேகத்துக்கு வேறாய் ஆன்மா உண்டு என்று அறிவிப்பதற்கு மூன்றாம் சூத்திரம் வருமாறு:

## மூன்றாஞ் சூத்திரம்.

உளதில தென்றலி னெனதுட லென்றலின்
ஐம்புல னொடுக்க மறிதலிற் கண்படில்
உண்டிவி னையின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

(இ-ள்) மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது—மாயையினாலே கட்டுப்பட்ட சரீரத்திலே ஆன்மா உண்டு. இலது—நீர் சொல்லப்பட்ட ஆன்மாவோ இல்லை. இலது என்றலின் ஆன்மா உளது — நீ இல்லை என்று சொன்ன ஏதுவினாலே அதற்கு வேறே ஆன்மா உண்டு. அப்படி அறிந்து வருகிறதும் சரீரமே அல்லாமல் நீர் சொல்லப்பட்ட ஆன்மாவோ இல்லை. எனது உடல் என்றலின் ஆன்மா உளது — அந்தச் சரீரத்தை என்னுடைய சரீரம் என்று சொல்லிக் கொண்டு நிற்கிறது ஒன்று உண்டு ஆகையினாலே நீ சொல்லப்பட்ட சரீரமோ சடம்; அதற்கு வேறே ஆன்மா உண்டு. அப்படி அறிந்து வருகிறதும் பஞ்சேந்திரியங்களே அல்லாமல் நீர் சொல்லப்பட்ட ஆன்மாவோ இல்லை. ஐம்புலன் அறிதலின் ஆன்மா

உளது — பஞ்சேந்திரியங்கள் ஓர் இந்திரியம் அறிந்த விடயத்தை ஓர் இந்திரியம் அறியாது; ஆகையினாலே, பஞ்சேந்திரியங்களிலேயும் பொருந்தி நின்று அது அதுவாய் அறிந்து வருகிறது ஒன்றுண்டு: ஆகையினாலே, நீ சொல்லப்பட்ட பஞ்சேந்திரியங்களோ சடம். அதற்குவேறே ஆன்மா உண்டு. அப்படி அறிந்து வருகிறதும் சூக்கும தேகமே அல்லாமல் நீர் சொல்லப்பட்ட ஆன்மாவோ இல்லை. ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது—ஆன்மா நித்திரைபண்ணி விழித்த விடத்துக் கனவு கண்டோம் என்றும் கண்டிலம் என்றும் மயங்கி நிற்கிறது ஒன்று உண்டாகையினாலே நீ சொல்லப்பட்ட சூக்கும தேகமோ சடம்; அதற்கு வேறே ஆன்மா உண்டு. அப்படி அறிந்து வருகிறதும் பிராணவாயுவே அல்லாமல் நீர் சொல்லப்பட்ட ஆன்மாவோ இல்லை. கண்படில் உண்டி வினை இன்மையின் ஆன்மா உளது—ஆன்மா கேவலப்பட்ட விடத்துப் பிராண வாயு உச்சுவாச நிச்சுவாசம் போகுமிடத்தும் சரீரத்துக்குப் புசிப்பும் தொழிலும் இல்லாதாகையினாலே நீ சொல்லப்பட்ட பிராண வாயுவோ சடம்; அதற்கு வேறே ஆன்மா உண்டு. அப்படி அறிந்து வருகிறதும் பிரமமே அல்லாமல் நீர் சொல்லப்பட்ட ஆன்மாவோ இல்லை. உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது — பிரமத்துக்கு அறிவிக்க வேண்டுவதில்லையே; அறிவிக்க அறிகிற ஏதுவினாலே அதற்கு வேறே ஆன்மா உண்டு. அப்படி அறிந்து வருகிறது முப்பத்தாறு தத்துவங்களே அல்லாது நீர் சொல்லப்பட்ட ஆன்மாவோ இல்லை. மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது — முப்பத்தாறு தத்துவங்களும் தனித் தனியே பெயர் பெற்று நிற்கையினாலே நீ சொல்லப்பட்ட தத்துவங்களோ சடம். அதற்கு வேறே மாயையினாலே கட்டப்பட்ட சரீரத்திலே ஆன்மா உண்டு என்றவாறு.

என்பதுசூத்திரம்என்னுதலிற்றோவெனின் ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங்கிற்றோ எனின் இந்தச் சரீரத்திலே ஆன்மா விளங்காநிற்கிற முறைமையைச் சொல்லத் தொடங்கிற்று என்றவாறு.

இனி, இந்தச் சூத்திரம் என்னசொல்லக்கருதிற்றோ எனின் தத்துவ ரூபங்களுக்குப் புறம்பாய் ஆன்மா உண்டென்று விளங்கும் தன்மையை அனுமானப் பிரமாணத்தினாலே அறிவிப்பதைச் சொல்லக் கருதிற்று என்றவாறு என்பது ஓர் உரை.

உளது என்றது ஆன்மாவுளது என்று எங்கும் ஓட்டிப் பொருளுரைக்கற்பாற்று — உளது என்று சொன்னது இங்ஙனம் சொல்லப்பட்ட தானங்களெல்லாம் ஆன்மாவுண்டென்று விசாரித்தறியும்முறைமைத்து என்றவாறு. இனி, உளது என்னும் சொல்லை இந்தச் சூத்திரச் சூரணி ஏழிடத்தினும் ஓட்டி இலது என்றலின் ஆன்மா உளது. எனது உடல் என்றலின் ஆன்மா உளது. ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது. ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது. கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உளது. உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது. மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது என்று உரைத்துக் கொள்க என்பது ஓர் உரை.

இந்த ஒழுங்கிலே முதற் சூரணி வருமாறு:

இனி, இலது என்றலின் ஆன்மா உளது என்றது-எவற்றினையும் அன்று அன்று என விட்டு ஆன்மா இலது என்று நிற்பது உளதாதலின் அதுவே அவ்வான்மாவாம்

என்றது. நீ இல்லையென்று சொன்ன ஏதுவினாலே அதற்கு வேறாக ஆன்மா உண்டென்று சொல்லிற்றே அது எந்த ஏதுவினாலே? நீ ஆன்மாவாம் என்ற எல்லாவற்றையும் நாம் அல்ல அல்ல என விட்டு நீங்கி ஆன்மா இல்லை என்று சொல்லிக் கொண்டு நிற்கிறதொன்றுண்டாகையினாலே அதைத் தான் ஆன்மாவென்று சொன்னது.

இனி, நீ இரண்டாஞ் சூத்திர முடிவிலே வேறு வேறாய்த் தோன்றும் தத்துவ ரூபங்களையும், ஒருமுதலாய்த் தோன்றும் பிரமத்தையும் தவிர ஆன்மாவைக் காணோமே என்று முன்னறிவொன்று உண்டாகையால் அதுவே அவ்வான்மாவாம் என்று நாம் சொன்னது என்பது ஒருரை.

உதாரண வெண்பா :

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றென் றுளததுவே நீயனைத்தும் — நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

(இ-ள்) அன்று அன்று என நின்று-நீ ஆன்மாவாமென்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும் நாம் அல்ல அல்ல எனவிட்டு நின்று, அனைத்தும் விட்டு-முப்பத்தாறு தத்துவங்களையும் பொய்யெனவிட்டு, அஞ்செழுத்தாய்—பிரணவ பஞ்சாட்சர சொரூபியாய், நின்றொன்று உளது அதுவே நீ — நிற்கிறதொன்று உண்டே அதுவே நீ ஆகிய ஆன்மா, அனைத்தும் நின்றின்று — இப்பொழுது முப்பத்தாறு தத்துவங்களும் உன்னிடத்திலே பொருந்தி நின்று, தர்ப்பணம் போல் காட்டலால் — கண்ணாடியைப் போல்

சாட்டினத்தைக் காட்டிக் கொண்டு நிற்கையினாலே, சார்மாயை — உன்னைப் பொருந்தின மாயை, நீ அல்லை — நீ அந்த மாயையுமில்லை, தற்பரமும் அல்லை — மேலாகிய பிரமமும் அல்லை, தனி — தனியே ஒரு முதல் என்றவாறு.

இனி, அன்று அன்று எனநின்று அனைத்தும்விட்டு— தத்துவக் கூட்டங்களை அறிந்து நாம் அல்லவென்று அனைத்தினையும் விட்டு, அஞ்செழுத்தாய் நின்றொன்று ளது அதுவே நீ—அகார உகார மகார விந்து நாத அறிவு வடிவாய் அந்தக் கரண சொரூபியாய்த் தத்துவங்களைக் கண்டு நிற்கும் அறிவு ஒன்றுண்டே அதுகாண் நீயாகிய ஆன்மா, அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம் போல் காட்டலால்—இப்போது நீ அஞ்செழுத்தொளி வடிவாய்க் கண்ணாடி போல நின்று விளங்கிக் கண்ணாடி தன்னிற் பொருந்தின பொருள் வடிவாய் நிற்பதுபோல உன்னில் தோன்றின தத்துவ ரூபமே நீதானாய்க்காட்டி நிற்றலால், சார் மாயை நீ அல்லை—இப்போது உன்னறிவிலே சார்ந்து தோன்றப்பட்ட மாயா காரியமான உன் தேகம் முதலாகிய பொருளெல்லாம் நீ அல்ல, தற்பரமும் அல்லை தனி— அந்தப் பிரமமாகிய பொருளும் நீயல்ல நீ வேறேயொரு தனிமுதலென்று அறிவாயாக.

## இரண்டாஞ் சூரணி வருமாறு:

இனி, எனதுடல் என்றலின் ஆன்மா உளது என்றது—சரீரத்தை என்னுடைய சரீரம் என்று சொல்லுகையினாலே அதற்கு வேறே ஆன்மா உண்டென்று சொல்லிற்றே: அது எந்த ஏதுவினாலே? என் பதி என் மனை என்றாற் போல — என்னுடைய ஊர் என்னுடைய வீடு என்று சொல்லுகிறவனைப் போல, என் கை என் கால்

என நிற்பது உளதாதலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது — கையை என்னுடைய கை என்றும் காலை என்னுடைய கால் என்றும் சொல்லிக் கொண்டு நிற்கிறது ஒன்றுஉண்டு; ஆகையினாலே, அதனையே அவ்வான்மாவாம் என்று நாம் சொன்னது.

இனி, இனி எனதுடல் என்றலின் ஆன்மா உளதென்றது. என் பதி என் மனை என்றாற்போல என் கை என்கால் என நிற்பது உளதாதலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது — நீ நான் என்றிருந்த உடல் இப்போது என் பதி என் மனை என்று புறம்பாயிருக்கிற பொருள் போல என்னுடல் என்கை என்கால் என்று அவயவங்களையெல்லாம் பிரிந்தகிழமையாய்க் கண்டு சொல்லுகிறபடியினாலே நீ தேகத்துக்கு வேறாகிய ஆன்மாவாம் என்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

எனதென்ற மாட்டி னெனதலா தென்ற
துனதலா துன்கைகால் யாக்கை — எனதென்றும்
என்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகாண்
உன்னிலவை வேறா முணா.

(இ–ள்) உனது அலாத உன் கைகால் ஆக்கை — உனது அல்லாத நீயாகிய கைகால் ஆக்கையை, எனதலாது என்றது — யான்கை யான்கால் என்று சொல்லாமல், எனதென்ற மாட்டின் — எனதென்று செல்வத்துக்கிட்ட பேரைப்போல, எனது என்றும் — என்னுடைய சரீரம் என்றும், என் அறிவு அது என்றும் — என்னுடைய அறிவென்றும், உரைத்து நீ நிற்றி காண் — இப்படிச் சொல்

லிக் கொண்டு நிற்கிறவன் நீ காண், உன்னில்—விசாரிக்கு மிடத்து, அவை வேறு ஆம் — அந்தக் கைகால் ஆக்கை உனக்கு வேருும், உணர் — அதனை அறிவாயாக என்ற வாறு.

இனி, எனதென்ற மாட்டின் எனதலா தென்றது—நீ இப்போது தேகத்தை என்னுடல் என்கை என்கால் என்று சொன்னதினாலும் தனதின்கிழமையாய் நானுடல் நான்கை நான்கால் என்று சொல்லாததினாலும், உனது அலாது உன் கைகால் ஆக்கை — நீ அல்லாத உன்னுடைய கைகால் முதலாகிய தேகம், எனதென்றும் என்னறிவ தென்றும் உரைத்து நீ நிற்றிகாண் — நீ இப்போது இங்ஙனம் சொன்ன அவயவங்களையுடைத்தாகிய தேகத்தை என்னதென்றும் தேகத்துக்குட்பட்ட அந்தக்கரண அறிவுகளை என்னறிவென்றும் சொல்லிக் கொண்டு நிற்கிறாய் காண், உன்னில் அவை வேறு ஆம் உணர் — ஆனதினால் உனக்கு அந்தக்கரணம் முதலாகிய அவயவங்களையுடைய தேகம் புறம்பென்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

மூன்றுஞ் சூரணி வருமாறு :

இனி, ஐம்புலனொடுக்கம் அறிதலின் என்றது. ஐம்புலனொடுக்கம் அறிதலின் என்று சொன்னது: ஐம்புலன் அறிதலின், ஒடுக்கம் அறிதலின் என்று உணரற்பாற்று—பஞ்சேந்திரியங்களைக்கொண்டு அறிகையினாலேயும் சூக்கும தேகத்தைக் கொண்டு அறிகையினாலேயும் என்று விசாரித்தறியும் முறைமைத்து என்றவாறு.

இனி, ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளதென்றது — பஞ்சேந்திரியங்களைக் கொண்டறிகையினாலே

அதற்கு வேறே ஆன்மா உண்டென்று சொல்லிற்றே: அது எந்த ஏதுவினாலே? ஐம்புலனாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்ததொன்று அறியாமையின் இவ்வைந்தினாலும் ஐம்பயனும் அறிவதுஉளதாதலின் அதுவே அவ்வான்மா ஆம் என்றது — சத்தாதி விடயங்களை இந்திரியங்கள் ஓர் இந்திரியம் அறிந்த விடயத்தை ஓர் இந்திரியம அறியாது; ஆகையினாலே, இந்தப் பஞ்சேந்திரியங்கள் ஐந்தினாலும் சத்தாதி விடயங்களைப் பொருந்தி அதுவதுவாய் அறிந்து வருகிறதொன்றுண்டே அதைத் தான் ஆன்மா என்று சொன்னது.

இனி, ஐம்புல னொடுக்கம் அறிதலின் என்றது — ஐம்புலன் அறிதலின் ஒடுக்கம் அறிதலின் என்று உணரற்பாற்று ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது; ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது என்று இரண்டு சூரணியாய்ப் பிரித்தறிக.

இங்ஙனம் சொன்ன உபதேசம் கேட்டு உடலுக்கு வேறாய் ஆன்மாவுண்டென்று கண்ட சீடனை உன் அநுபவம் என்னென்று கேட்க, சுரோத்திராதி ஞானேந்திரிய அறிவே நானென்று சொல்ல அவை ஆன்மா அல்ல என்று மறுத்துணர்த்துகிறார்.

ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது என்றது—ஐம்புலனாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறியாமையின் இவ்வைந்தினாலும் ஐம்பயனும் அறிவது உளதாதலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது — ஐந்து வகையான சத்தாதி விடயங்களை ஞானேந்திரியங்கள் ஓர் இந்திரியம் அறிந்த விடயத்தை ஓர் இந்திரியம் அறியாதபடியினாலும், ஐந்தும் தனித்

தனியாயிருக்கையினாலும் இந்திரியங்கள் ஆன்மா அல்ல. இவ்வைம்பொறியினாலும் சத்தாதி விடயங்கள் ஐந்தை யும் அறிந்து வேறுவேறாய்க்கண்டு புசிப்பதொன்றுண்டா கையால் அதுவே நீயாகிய ஆன்மா என்று நாம் சொன்னது என்றவாறு என்பது ஓர் உரை.

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
அன்றும் புலனாயவ் வஞ்செழுத்தை — ஒன்றறிதல்
உள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லை யோர்.

(இ—ள்) ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி உடன் மன்னி — ஓர் இந்திரியம் அறிந்த விடயத்தை ஓர் இந்திரியம் அறியாது; ஆகையினாலே பஞ்சேந்திரியங்களிட மாக ஆன்மா நிலைபெற்று நின்று, அன்றும் புலன் ஆய — பொருந்தப்பட்ட சத்தாதி விடயங்களை விசாரித்தறியு மிடத்து, அஞ்செழுத்தை ஒன்றறிதல் உள்ளதே ஆகில் அது நீ—பிரணவ பஞ்சாக்கரத்தைப் பொருந்தியறிகிறது ஒன்று உண்டே அதுவே நீயாகிய ஆன்மா, தனித்தனி கண்டு உள்ளல் அவை — அதுஅதுவாகப் பொருந்தியறி வது பஞ்சேந்திரியங்கள், ஒன்று அல்லை — நீ அந்தப் பஞ் சேந்திரியங்களிலே ஒன்றல்லை, ஓர்—விசாரித்தறிவாயாக என்றவாறு.

இனி, ஒன்றறிந்தது ஒன்றறியாதாகி உடன் மன்னி — ஓர் இந்திரியம் அறிந்த விடயத்தை ஓர் இந்திரி யம் அறியாமல் ஐந்தும் தேகத்தில் தனித் தனியே நிலை பெற்று, அன்றும் புலனாய அஞ்செழுத்தை — அது அது வாய் வந்து ஒன்றி ஐந்தெழுத்தாகிய அகாராதி அறிவைப்

பொருந்தின மனாதி முதலான கரணங்களைக் கொண்டு ஒன்றறிதல் உள்ளதேயாகில் அது நீ — சத்தாதி விடயங்களைப் பகுத்து ஒன்றொன்றாய் அறிந்து புசித்து வருகிறது ஒன்று உண்டே அதுகாண் நீ, தனித்தனி கண்டு உளளல் அவை ஒன்றல்லை ஓர் — விகற்பித்தறிகிற அந்தக்கரணங்களாற் பற்றி விகற்பியாமல் தனித்தனியே இருந்தறிகிற பஞ்சேந்திரியங்களில் ஒன்று அல்ல நீ: அவை உனக்கு வேறு என்றறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

பஞ்சேந்திரியங்களுக்கு வேறாய் ஆன்மாவுண்டென்று கண்ட சீடனை உன் அநுபவம் என்னென்று கேட்க, சத்தாதி ஐந்து மனம் புத்தி ஆங்காரம் மூன்றுமாக எட்டுங்கூடின சூக்கும தேகமே அறிவது; வேறே ஆன்மா இல்லை என்று சொல்ல, சூக்கும தேகம் ஆன்மா அல்ல; அதற்கு வேறாய் ஆன்மா உண்டென்று மறுத்து உணர்த்துகிறார்.

நாலாஞ் சூத்திரம் வருமாறு :

இனி, ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது என்றது. சூக்கும தேகத்தைக் கொண்டு அறிகையினாலே அதற்கு வேறே ஆன்மா உண்டென்று சொல்லிற்றே, அது எந்த ஏதுவினாலே? நனவின்கண் கனவுகண்டாம் என்றும் கண்டிலமென்றும் நிற்பது உளதாதலின் — ஆன்மா நித்திரை பண்ணி விழித்த விடத்துக் கனவு கண்டோமோ? கண்டிலமோ? என்று மயங்கி நிற்கிறதொன்றுண்டு: ஆகையினாலே, அதுவே அவ்வான்மாவாம் என்றது — அதனையே அவ்வான்மாவாம் என்று சொன்னது.

இனி, ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது என்றது. நனவின்கட் கனவு கண்டாம் என்றும் கண்டிலம் என்றும் நிற்பது உளதாதலின அதுவே அவ்வான்மாவாம் என்றது— நனவாகிய சாக்கிரத்தில் நின்ற ஆன்மா தூலதேகத்தை விட்டுச் சூக்குமதேகததுடனே கூடிக் கனவுகண்டும் அந்தத் தூலதேகத்தையும் விட்டுக் கேவலமாய் அறிவின்றிக் கிடந்தும் பின்பு சாககிரத்தானத்தல் வந்து நனவாகிய தூலதேகத்தையும் கனவுச் சூக்குமதேகத்தையும் தேகமின்றிக் கிடந்த கேவலாதீததனையும் அறிந்து நிற்கும் அறிவு ஒன்றுண்டு, ஆகையால், அதுவே நீயாகிய ஆன்மா என்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி — அவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுடல் நீயல்லை மற்று.

(இ-ள்) அவ்வுடலில் நின்று உயிர்ப்ப — அந்தச் சரீரத்திலே பிராணவாயுவானது நின்று உச்சுவாச நிச்சுவாசம் போகுமிடத்தும், ஐம்பொறிகள் தாம் கிடப்ப — கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்து வருகிற பஞ்சேந்திரியங்களுங்கிடக்க, செவ்விதின் அவ்வுடலில் சென்று அடங்கி — நேரே அந்தச் சரீரத்திலே ஆன்மா சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள அஞ்சவத்தைப்பட்டு, அவ்வுடலின் வேறு ஒன்று கொண்டு — அந்தச் சரீரத்தைப் போலே வேறே ஒரு சூக்கும தேகத்தை எடுத்துக் கொண்டு, விளையாடி —

யானையேறி மாலை சூடக்கண்டு, மீண்டு அதனை மாறல் உடல் — மீளவும் அந்த விளையாட்டைவிட்டு நீங்கினது சூக்கும தேகம், நீ அல்லை — நீ அந்தச் சூக்கும தேகமல்லை, மற்று-நீ அந்தச் சூக்கும தேகத்துக்கு வேறு என்றவாறு.

இனி, அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் தாம் கிடப்ப—தூலதேகத்தினுக்குக் காவலாகப் பிராண வாயு நின்று உச்சுவாச நிச்சுவாசம் பண்ண அந்தத் தேகத்திலே ஐந்து இந்திரியமும் அறிவின்றிக் கிடக்க, செவ்விதின் அவ்வுடலை சென்றடங்கி—தூலதேக நுதற்றானத்திலே சாக்கிரமாய் நின்ற ஆன்மா அந்தத் தூல தேகத்தை விட்டுக் கீழே கண்டம் இருதயம் நாபி என்னும் அவத்தைத்தானங்களையும் விட்டுக் கழித்து நேரே மூலாதாரத்தில் ஒன்றுந் தெரியாமல் கேவலாதீதமாய்க் கிடந்து பின்பு மேலெறித் தூரியத்தானம் சுழுத்தித் தானமாகிய நாபி இருதயத்தையும் விட்டுச் சொப்பனத் தானமாகிய கண்டத்தில் வந்து, அவ்வுடலின் வேறொன்று கொண்டு விளையாடி — அவ்விடத்திலே சூக்கும தேகத்தைப் பொருந்தி யானையேறி மாலை சூடக் கனவு கண்டு அநுபவித்து விளையாடித் திரும்பவும் சாக்கிரமாகிய நுதற்றானத்தில்வந்து தூலதேகத்தைப்பொருந்தி, மீண்டு அதனை மாறல் உடல் நீ அல்லை மற்று — சூக்குமதேகத்தை விட்டுத் தூலதேகமாய் மாறி நின்று அந்த இரண்டு உடற் செய்தியும் கேவலத்தில் ஒடுங்கிக் கிடந்த செய்தியும் அறிந்து நிற்கும் அறிவு ஒன்றுண்டு: ஆகையால், அது காண் நீயாகிய ஆன்மா, சூக்கும தேகம் நீ அல்ல என்றறி வாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

சூக்குமதேகத்துக்கு ஆன்மா புறம்பு என்று கண்டயிடத்தை உன் அநுபவம் என்னென்று கேட்கப் பிராண

வாயுவே அறிகிறது; அதற்கு வேறாய் ஆன்மா இல்லை என்று சொல்ல, பிராணவாயு ஆன்மா அல்ல என்று மறுத்துணர்த்துகிறார்.

ஐந்தாஞ் சூரணி வருமாறு:

இனி, கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உளது என்றது — ஆன்மா கேவலப்பட்ட விடத்தும் பிராணவாயு உச்சுவாச நிச்சுவாசம் போகுமிடத்தும் சரீரத்துக்குப் புசிப்பும் தொழிலும் இல்லாதாகையினாலே அதற்கு வேறே ஆன்மா உண்டென்று சொன்னது; எந்த ஏதுவினாலே? ஒடுங்கினவிடத்து இன்பதுன்பம் சீவனம் பிரகிருதிக்கு இன்மையின் — ஆன்மா கேவலப்பட்டவிடத்துச் சுகதுக்கங்களாகிய புசிப்பும் தொழிலும் பிரகிருதி மாயாசரீரத்துக்கு இல்லாதாகையினாலும், ஒடுங்காத விடத்து இன்ப துன்பம் சீவியாநிற்பது உளதாதலின் ஆன்மா சகலப்பட்ட விடத்துச்சுகதுக்கங்களாகிய புசிப்பும்தொழிலும் பிரகிருதி மாயாசரீரத்துக்கு உண்டாகையினாலும் அதுவே அவ்வான்மாவாம் என்றது—அதனையே அவ்வான்மாவாம் என்று சொன்னது.

இனி, ஆன்மா கேவலத்தில் ஒடுங்கினபோது பிராணவாயு நிற்கச் செய்தேயும் தேகத்துக்கு இன்ப துன்பப் புசிப்பும் தொழிலும் இல்லாதபடியினாலும் ஆன்மா ஒடுங்காமல் சாக்கிரத்தில் நின்றபோது தேகத்துக்குப் புசிப்பும் தொழிலும் உண்டாகையினாலும் பிராணவாயு சடமே அல்லாமல் ஆன்மா அல்ல. இன்ப துன்பங்களைத் தூலதேகத்துடனே கூடியறிந்து நிற்பதே ஆன்மா என்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா:

கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணாதே
உண்டிவினை யின்றி யுயிர்த்தலால் — கண்டறியும்

உள்ளம்வே றுண்டா யொடுங்கா துடனண்ணில்
உள்ளதா முண்டிவினை யூன்.

(இ-ள்) கண்டு அறியும் இ உடலே — கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்து வருகிற சரீரத்தினிடத்திலே, காட்டு ஒடுங்க — காட்டாநின்ற ஆன்மா கேவலப்பட்டவிடத்து, காணாதே—சரீரம் அறியவில்லையே, உண்டி வினை இன்றி உயிர்த்தலால் — பிராணவாயு உச்சுவாச நிச்சுவாசம் போகுமிடத்தும் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதாகையினாலே, கண்டறியும் உள்ளம் வேறு உண்டாய் — கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்து வாராநின்ற ஆன்மா பிராணவாயுவுக்கு வேறாக உண்டாய், ஒடுங்காது உடல் நண்ணில்— ஆன்மா கேவலப்படாமல் சகலப் பட்ட விடத்து, உள்ள தாம் உண்டிவினை ஊன் —அந்தச் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் உண்டாம் என்றவாறு.

1 இனிக், கண்டறியும் இவ்வுடலே காட்டொடுங்கக் காணாதே உண்டிவினை இன்றி உயிர்த்தலால் — இன்ப துன்பங்களை ஆன்மாவுடனே ஒற்றுமையாய் நின்று அறிந்து தொழிற் செய்யும் உடலானது தனக்குக் காட்டி அறிகின்ற ஆன்மா கேவலத்தில் ஒடுங்கினபோது தேகம் புசிப்பும் தொழிலுமின்றிப் பிராணவாயு ஒடுங்காமல் நின்றும் ஒன்றும் அறியாமற்கிடக்கையினால், கண்டறியும் உள்ளம் வேறுண்டாய்—அந்தப் பிராணவாயுவுக்கு வேறாய் அப்பிராணவாயுவையும் அடக்கியும் விட்டும் அறிந்து நிற்கும் ஆன்மா வேறே உண்டு, ஒடுங்காது உடல் நண்ணில் உள்ள தாம் உண்டிவினை ஊன் — ஆன்மா கேவலத்தில் ஒடுங்காமல் ஊனாகிய தேகத்துடனே கூடினபோது தேகத்துக்குப் புசிப்பும் தொழிலும் உண்டாகையால்

அப்பிராணவாயுவுக்கு வேறாய் நின்று அறிகிற ஆன்மா உண்டென்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

பிராணவாயுவும் ஆன்மா அல்லவென்று அறிந்த சீடனை உன் அநுபவம் என்னென்று கேட்க; பிரமமே அறிகிறது, வேறே ஆன்மா இல்லை என்று சொல்லப் பிரமத்துக்கு வேறாய் ஆன்மாவுண்டென்று மறுத்துணர்த்துகிறார்.

ஆறுஞ் சூரணி வருமாறு :

இனி, உணர்த்த உணர்தலின் ஆன்மா உளதென்றது — அறிவிக்க அறிந்து வருகையினாலே பிரமத்துக்கு வேறே ஆன்மா உண்டென்று சொன்னது: எந்த ஏதுவினாலே? அவன் அறிந்தாங்கு அறிவன் என்று அறிவிக்க அறிந்து — சரீரம் நீ அல்ல அறிவென்று அறிவித்த விடத்திலே அறிவாயும், உபதேசியாய் நிற்பது உளதாதலின் — உபதேசிக்கப்பட்டு நிற்பதொன்று உண்டாகையினாலே, அதுவே அவ்வான்மாவாம் என்றது — அதனையே அவ்வான்மாவாமென்று நாம் சொன்னது.

இனி, உணர்த்த உணர்தலின் ஆன்மா உளதென்றது — அவன் அறிந்தாங்கு அறிவன் என்று அறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பது உளதாதலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது. கர்த்தா ஞானாசாரிய ரூபமாய் எழுந்தருளிவந்து பக்குவமறிந்து அறிவிக்க அறிவித்தபடி அறிந்து உபதேசியாய் நிற்கும் அறிவு பிரமம் அல்ல, அதுவே ஆன்மாவாம் என்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

*உதாரண வெண்பா :*

அறிந்து மறிவதே யாயு மறியா
தறிந்ததையும் விட்டங் கடங்கி — அறிந்த
தேதுவறிவு மன்றாத மெய்கண்டா னொன்றின்
அதுவதுதா னென்னு மகம்.

*(இ-ள்) அறிந்தும் அறிவதே யாயும் — சரீரம் தான் என்று அறிந்தும் சரீரம் நீ அல்ல அறிவு என்று அறிந்த விடத்திலே அறிவாகியும், அறியாது அறிந்ததை யும் விட்டு—அறியாமையினாலே அறிந்த சரீரத்தையும் விட்டு, அங்கு அடங்கி—அவ்விடத்திலே பஞ்சாவத்தைப் பட்டு, அறிந்தது எது அறிவும் அன்றாகும்-இப்படி அறிந்து வந்த அறிவெல்லாம் பிரமம் அல்லவாகும், மெய்கண்டான் ஒன்றின் — சத்தியத்தைத் தெரிசித்தவன் விசாரித்தறியு மிடத்து, அது அதுதான் என்னும் அகம்—அது நாம் அது நாம் என்றதெல்லாம் அது நாமல்ல அது நாமல்ல என்னும் ஆன்மா என்றவாறு.*

*இனி, அறிந்தும் அறிவதேயாயும் — ஆசாரியர் அறிவித்தபடி அறிந்தும் பின்னும் அறியவேண்டியதற்கு இச்சித்தும், அறியாது அறிந்ததையும் விட்டடங்கி — அறிந்ததையும் மறந்து மலமறைப்பில் அடங்கியும், அறிந் தது எது அறிவும் அன்றாகும் — இப்படி நினைந்தும் மறந் தும் வருகிற அறிவே ஆன்மா; அது மறவாமல் சர்வக்ஞ னாயறிகிற பிரமம் ஆகாது, மெய்கண்டான் ஒன்றின் அது அதுதான் என்னும் அகம் — மெய்ம்மை அறிந்து உணர்த் துகிற கர்த்தா உயிர்க்குயிராய் நின்று உணர்த்துகிறதை யும் அறியாமல் தன் உண்மையையும் அறியாமல் பொருந்*

தினைத்தையெல்லாம் நான் என்று மயங்கி நிற்கிற அறிவே நீயாகிய ஆன்மா என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

பிரமம் நீஅல்ல என்று உணர்த்தக்கேட்ட உடனே உன் அநுபவம் என்னென்று கேட்க, தத்துவங்களெல்லாம் ஒன்றாய்க்கூடினசமூகத்திலே ஓர் அறிவு பிறக்கிறது; ஆனதினால் தத்துவக் கூட்டமே அறிவது; வேறே ஆன்மா இல்லை என்று சொல்லத் தத்துவங்களுக்கு வேறாய் ஆன்மா உண்டென்று மறுத்துணர்த்துகிறார்.

ஏழாஞ் சூரணி வருமாறு:

இனி, மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளதென்றது — மாயையினாலே கட்டப்பட்ட சரீரத்திலே ஆன்மா உண்டென்று சொன்னது: எந்த ஏதுவினாலே? அவை தாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான் — அந்த முப்பத்தாறு தத்துவங்களும் தனித்தனியே பெயர் பெற்று நிற்கையினாலே சொன்னது.

உதாரண வெண்பா:

கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை
நிலையாவாந் தீபமே போல — அலையாமன்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதனுவாம்
தானத்தில் வேறாசந் தான்.

(இ—ள்) கலையாதி மண்ணந்தங் காணில் அவை மாயை—பிருதிவி முதல் நாதம் ஈறாக முப்பத்தாறு தத்துவங்களையும் விசாரித்தறியுமிடத்து அவை மாயா சம்பந்தம்: அதனுடைய சுபாவந்தான் எப்படி யென்னில்? நிலை

யாவாம் தீபமே போல நில்லாவாம் — நிலைமையில்லாத விளக்கைப்போல நில்லாவாம், அலையாமல் — அந்தத் தத்துவங்களைப் பொருந்தி அலையாமல், ஞானத்தை முன் உணர்ந்து — அநாதியிலேயுள்ள சிவஞானத்தை விசாரித்தறிந்து, நாடில் அது தனுவாம் — விசாரிக்குமிடத்து முப்பத்தாறு தத்துவங்களும் உனக்குச் சரீரங்களாம், தான் அத்தில் வேறாகும் தான் — இங்ஙனம் சொல்லப்பட்ட தத்துவங்களுக்கெல்லாம் ஆன்மா வேறு என்றவாறு.

இனி, மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது என்றது அவைதாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான் — கர்த்தா மாயாகாரியத்தினாலே யுண்டாக்கப்பட்ட சூக்ஷிமப்பாவையாகிய தேகத்திலே கூடி நிற்கிற கருவிக் கூட்டங்களெல்லாம் தனித்தனியே வேறு வேறு பெயர் பெற்று நிற்றலால் அவையெல்லாம் ஆன்மாவல்ல; வேறே ஆன்மா உண்டென்று நாம் சொன்னது.

கலையாதி மண்ணந்தம் காணில் அவை மாயை — கலை காலம் நியதி முதல் பிருதிவியந்தம் வரைக்குங் காணப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களையெல்லாம் விசாரித்தறிந்தால் அவையெல்லாம் மாயா காரியமாயிருக்கும்: நிலையாவாம் தீபமே போல இவையெல்லாம் கர்த்தா ஆன்மாவுக்குத் தேகமாய்க் கூட்டினதாயிருக்கும். அது ஏன் என்னில், இருட்டிலே காட்சியற்றுக் கிடந்த கண் காணும் பொருட்டு ஒருவர் விளக்கேற்றிக் காட்டுவது போல ஆணவ மலத்திலே மறைபட்டுக் கிடக்கிற ஆன்மாவுக்குக் கன்ம பலன்களை யறிந்து புசிக்கும் பொருட்டுக் கூட்டினதாயிருக்கும். அலையாமல் ஞானத்தை முன்னுணர்ந்து நாடில் தனுவாம் — ஆசாரியர் அறிவித்த சிவஞானத்தை முன்னிட்டு அறிந்தால் அந்தக் கலாதி ஞானங்

கூடின தத்துவங்களெல்லாம் உனக்குத் தேகமாய்ச் சூரிய கிரணத்துக்குட்பட்டுக்கிடக்கிற விளக்குப்போல உனக்கு வேருன சடமாய்க் காணும். தான் அத்தில்வேருகும்தான் — அப்போது நீ உன்னைக் கலாதி ஞான தேகத்துக்கு வேருகக் காண்பாய் என்றவாறு என்பது ஓர் உரை.

மூன்ருஞ் சூத்திரம் அனுமானப்பிரமாணத்திஞல் ஆன்மா உண்டென்று உணர்த்திய கருத்து முற்றியது.

### மூன்ருஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.

---

இப்படி உணர்த்தியும் ஆன்மாவின் உண்மை அறியாமல் அகாராதி அறிவு கூடின அந்தக்கரணமே அறிவதென்று சொல்லுகையால் அந்தக்கரணத்துக்கு வேருய் ஆன்மா உண்டென்று உணர்த்துதற்கு நாலாஞ் சூத்திரம் வருமாறு:

## நாலாஞ் சூத்திரம்

**அந்தக் கரண மவற்றினொன் றன்றவை**
**சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா**
**தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.**

(இ-ள்) அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று — ஆன்மா அந்தக்கரணங்களாயுள்ள மனே புத்தி ஆங்கார சித்தங்களிலே ஒன்றல்ல, அவை சந்தித்தது ஆன்மா — அந்த அந்தக்கரணங்களைப் பொருந்தி அறிந்து வந்தது ஆன்மா, அந்தக்கரணங்களைப் பொருந்தியறிவானேன்? சகசமலத்து உணராது — ஆன்மாவை மலமானது சகசமாய் மறைத்துக்கொண்டு நிற்கையினுலே அந்தக்கரணங்களைப் பொருந்தினுலல்லது அறியச் செய்யாது. ஆனல்,

அந்தக் கரணங்களோ. முதன்மை? அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்சவத்தைத்து ஏ— இராசாவும் மந்திரியும் போலே நின்று ஆன்மா அஞ்சவத்தைப்பட்டு வரும் என்றவாறு.

இனி, என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின்? இதுவுமது—இந்தச் சூத்திரமும் மூன்றாஞ் சூத்திரத்திலே சொன்ன ஆன்மப் பிரகாசத்தையே உணர்த்துதலைக் கருதிற்று. முன் நாம் உண்டென்று சொன்ன ஆன்மா நீ சொன்ன அந்தக்கரணங்களில் ஒன்றல்ல. அந்தக்கரணங்களோ ஆன்மாவைச் சந்தித்த கருவியாயிருக்கும். அவை வேண்டுவதேன்? என்னில், ஆன்மா சகசமலத்தினால் அறிவு மறைபட்டு நிற்றலால் அதற்கு உணர்த்தும் பொருட்டு இராசாவுக்கு மந்திரிகள் வேண்டுவது போல உண்டானது. அந்தக் கரணத்தினால் அறிந்து புசித்து அதற்கு வேறாய் ஆன்மா கேவல சகல சுத்தம் என்னும் மூன்றவத்தைப்பட்டு வரும்.

என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின்—இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங்கிற்றோ எனின், இதுவுமது — இதுவும் ஆன்ம இலக்கணத்தையே சொல்லத் தொடங்கிற்று என்பது ஓர் உரை.

## இதற்கு முதற் சூரணி வருமாறு:

ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோ புத்தி ஆங்கார சித்தங்களின் ஒன்றன்று என்றது — இவ்விடத்துச் சொல்லப்பட்ட ஆன்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி ஆங்கார சித்தங்களின் ஒன்றல்ல என்று சொல்லிற்றே; அது எந்த ஏது

விஞலே? அவை தாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலால் — அந்த அந்தக்கரணங்கள் தாம் நீ பொருந்தின விடத்துப் பிரகாசமாகியும் அல்லாதவிடத்து அப்பிரகாசமாகியும் நிற்கையிஞலே சொன்னது.

இனி, ஈண்டு இவ்வான்மா அந்தக்கரணங்களாயுள்ள மஞே புத்தி ஆங்கார சித்தங்களில் ஒன்றின்று என்றது. அவை தாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான் — இவ்விடத்திலே அந்தக் கரணங்கள் ஆன்மாவுடனே கூடினபோது பிரகாசமாயும் ஆன்மா கேவலத்தில் ஒடுங்கினபோது அவை அப்பிரகாசமாயும் நிற்றலால் அந்தக்கரணங்கள் ஆன்மா அல்லவென்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கண்
மனமாதி மன்புலனி னல்லன் — மனமேல்
உதித்தொன்றை யுள்ள முணர்த லதனில்
உதிக்குங் கடற்றிரையை யொத்து.

(இ-ள்) மனமாதியால் உணர்தல் மன்னு புலன்கள்—மனம் முதலாகிய அந்தக் கரணங்களிஞலே அறிந்து வருகிறது நிலைபெற்ற பஞ்சேந்திரியங்கள், மனமாதி மன்புலனின் அல்லன் — மனம் முதலாகிய அந்தக் கரணங்களோ நிலைபெற்ற பஞ்சேந்திரியங்களிலே ஒன்றல்ல, மனமேல் உதித்து ஒன்றை உள்ளம் உணர்தல் — மனம் முதலாகிய அந்தக் கரணங்களைப் பொருந்தி அதற்கு முதன்மையாக அறிந்து வருகிறது ஆன்மா: ஆன்மாவும் அந்தக் கரணங்களும் கூடின விடத்து ஆன்ம போதம்

சீவிக்கிறது எப்படி யென்னில்? அதனில் உதிக்கும் கடற்றிரையை ஒத்து—சமுத்திரத்திலே அலை யெழுகிறது போல ஆன்மாவினிடத்திலே போதம் சீவியாநிற்கும் என்றவாறு.

இனி, மனமாதியால் உணர்தல் மன்னு புலன்கள்—சாக்கிரத்தில் மனம் புத்தி ஆங்கார சித்தங்களாகிய அந்தக்கரணத்தில் ஆன்மா தன்குணமாகிய உள்ளத்தைக் கொண்டு வேண்டிய விடய போகங்களை நிச்சயித்தறியும், மனமாதி மன்புலனின் அல்லன் — அந்த அந்தக் கரணங்களுடனே கூடி அதுவதுவாய்ப்பொருந்தி விடயத்தை யறிந்தாலும் ஆன்மா அந்தக்கரணத்தின் ஒன்றல்ல. ஆனால், ஆன்மாவை யறிகிறது எப்படி என்னில்? மனமேல் உதித்து ஒன்றை உள்ளம் உணர்தல் அதனில் உதிக்கும் கடற்றிரையை ஒத்து—மனம் முதலான அந்தக் கரணம் நான்கினும் உள்ளம் அதிவேகமாய் அதுவது வாய்க் கூடிநின்று விடயத்தைப் பற்றி யறிவது எப்படி என்னில்? கடற்றண்ணீரானது திரை வடிவாய்க் கூடி எழுவது போல் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

ஆனால் மனம் முதலான அந்தக் கரணம் நான்கினும் உள்ளம் ஒன்றாய் அதுவதுவாய்க் கூடி விடயத்தை அறிவதெப்படி என்னில்:

*உதாரண வெண்பா :*

சிந்தித்தாஞ் சித்தந் தெளியாதா மாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப் — பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறும்
அவ்வேறும் போதுபோ லாங்கு.

(இ—ள்) சிந்தித்தாம் சித்தம்—சித்தமாய் நின்று ஒன்றைச் சிந்தித்தும், தெளியாதாம் ஆங்காரம்—ஆங்காரமாய் நின்று ஒன்றை விசாரியாமல் எழுந்தும், புந்தியாய் ஆய்ந்து — புத்தியாய் நின்று ஒன்றை விசாரித்தும், மனம் ஆகி பந்தித்தும் — மனமாய் நின்று ஒன்றைப் பற்றியும், வெவ்வேறு தானே துணிந்து உள்ளம் — இப்படிப் பற்றி நிச்சயித்து ஆங்காரித்து ஐயுற்று அதுவதுவாய் அறிந்து வருகிறது ஆன்மா, இவ்வேறும் — இந்த அந்தக்கரணங்களுக்கு வேறாய் இருக்கும். அது எப்படிப் போல? அவ்வேறும் போது போல் ஆங்கு — காலத்துக்கு வேறாகிய பொழுதைப் போல என்றவாறு.

இனி, சிந்தித்தாம் சித்தம் — சித்தமாய் நின்று விடயத்தைச் சிந்தித்தும், தெளியாதாம் ஆங்காரம் — ஆங்காரமாய் நின்று தெளியாமல் மயங்கியும், புந்தியாய் ஆய்ந்து — புத்தி ரூபமாய் நின்று விடயத்தை இன்னதென்று ஆய்ந்தறிந்தும், மனம் ஆகிப் பந்தித்தும் — மனவடிவாகி விடயத்தைப் பற்றிப் பந்தப்பட்டும், வெவ்வேறு தானே துணிந்து உள்ளம் இவ்வேறும் — அந்தக்கரணம் நான்கினும் அதுவதுவாய் நின்று அறிந்தாலும் அவைகளுக்கு வேறாய், விளக்கும் கண்ணும் போலக் கூடி அறிவது ஆன்மபோதம். ஆனால், அந்த அந்தக்கரண வடிவாய் ஆன்மா நின்றதற்கு உவமானம் எப்படி என்னில், அவ்வேறும் போது போல் ஆங்கு—சூரியனானவன் ஒருதன்மையாயிருந்தும் கால வேற்றுமைகளுடனே கூடி அந்தக் கால வடிவாய் மந்தித்தும் தீட்சணமாயும் தோன்றுவதுபோல் என்றறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

விந்து ஞான வடிவாகிய அகாராதி ஐந்தெழுத்துணர்வும் அந்தக்கரணங்களைப் பொருந்தி ஆன்மாவின்

கன்மத்துக்கு ஈடான விடய போகங்களை அறிவிப்பது எப்படி என்னில்? இது முன் சொன்ன கடலின் திரை போலக் கூடி நிற்கும் என்று உணர்த்துகிறார்.

**உதாரண வெண்பா :**

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப் — பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

(இ-ள்) அகார உகாரம் அகங்காரம் புத்தி — அகங்காரத்துக்கு அகாரமும் புத்திக்கு உகாரமும், மகாரம் மனம் — மனத்துக்கு மகாரமும், சித்தம் விந்து — சித்தத்துக்கு விந்துவும், நாதம் உளம் — உள்ளத்துக்கு நாதமும் நின்று காரியப்படுத்தி வரும், பகாத இவற்றை நாடில் பிரணவம் ஆம் — பகுக்கப்படாத இந்த அக்கரங்களை விசாரிக்குமிடத்துப் பிரணவ சொரூபமாய் இருக்கும். ஆன்மாவும் அக்கரங்களும் கூடின இடத்து ஆன்மபோதம் சீவிக்கிறது எப்படியென்னில்? போதம் கடல் திரையே போன்று—சமுத்திரத்திலே அலை எழுகிறதுபோல ஆன்மா விடத்திலே ஆன்மபோதம் சீவியா நிற்கும் என்றவாறு.

இனி, அகாரம் அகங்காரத்தையும் உகாரம் புத்தியையும் மகாரம் மனத்தையும் விந்து சித்தத்தையும் பகுப்பாய்த் தோன்றாமல் அந்தக்கரண சொரூபமாய் நிற்கிற உள்ளத்தை நாதமுங் கூடிக் கலந்து நின்று விடயங்களிற் செலுத்தும். இந்த ஐங்தெழுத்து முறைமையையும் விசாரித்தறியில் சுத்தமாயையாகிய பிரணவசொரூபமாயிருக்கும். இந்த ஐந்தக்கர ஞானத்துடனேயும் ஆன்ம

போதம் கூடியறிகிறது எப்படியென்னில்? கடற்றண்ணீரும் திரையும் போலக் கூடி நின்றறியும் என்றறிவாயாக என்றவாறு என்பது ஒருரை.

அந்தச் சுத்தமாயையிற் றோன்றின ஐந்து பிரணவ ஞானமும் பாசஞானம் அல்லவோ? அவை அந்தக்கரணங்களை அறிந்துகூடி ஆன்மாவுக்கு விடயத்தை எப்படி அறிவிக்கும் என்னில்? சிவஞானசத்தி பதிந்திருக்கிற பஞ்சகர்த்தாக்களாலே பிரேரிக்கப்படும் என்று உணர்த்துகிறார்.

உதாரண வெண்பா :

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவொடு நாதத்துக் — கண்ணிற்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வம்
அகரவுக ரம்மகரத் தாம்.

(இ-ள்) எண்ணில ஓங்காரத்து — நினைத்தற்கரிதாகிய பிரணவ சொருபமாயிருக்கிற, அக்கரங்களுக்கு அதிதெய்வம் கண்ணில் — அதிதேவதைகளை விசாரிக்குமிடத்து, ஈசர் சதாசிவமா நண்ணிய விந்துவொடு நாதத்து — பொருந்தப்பட்ட விந்துவுக்கு மயேச்சுரனும் நாதத்துக்குச் சதாசிவமும், பகர் அயன் மாலோடு பரமன் அகர உகர மகரத்து ஆம் — அகாரத்துக்குப் பிரமாவும் உகாரத்துக்கு விட்டுணுவும் மகாரத்துக்கு உருத்திரனும் அதிதேவதைகளாய் நின்று காரியப்படுத்தி வருவார்கள் என்றவாறு.

இனி, எண்ணில ஓங்காரத்து ஈசர் சதாசிவமாம் நண்ணிய விந்துவொடு நாதத்து — அளவுபடாத ஓங்கார வடிவான நாதத்தைச் சதாசிவரும் விந்துவை மகேசுரரும், கண்ணில் பகர் அயன் மாலோடு பரமன் அதிதெய்வம் அகர உகர மகரத்தாம் — விசாரிக்கில் அகாரத்தைப் பிரமாவும் உகாரத்தை விட்டுணுவும் மகாரத்தை உருத்திரருமாக ஐந்து அதிதேவதைகளும் ஆன்மாவினுடைய கன்மத்தை அறிந்து பிரேரகப்படுத்துவர் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரையாம்.

ஆன்மா அறிவாயிருக்கப் பஞ்ச கர்த்தாக்கள் இங்ஙனம் சொன்ன பாசஞானத்தால் அறிவிப்பானேன்? என்னில், இவ்வான்மாவினுடைய இச்சா ஞானக் கிரியை அநாதியிலே ஆன்மாவுடனே கூட உதித்த சகச மலத்தினால் மறைபட்டுக் கிடக்கையாற் பரமசிவனுடைய சிவசத்தி ஐந்து அதிகார தேவதைகளிடத்திலும் பதிந்து நின்று கருணையினாலே பஞ்ச கிருத்தியங்களைப் பண்ணி ஆன்மாவுக்குள்ள மும்மலத்தையும் போக்கி மோட்சத்தைக் கொடுக்கு நிமித்தம் பந்தத்திற் பாச ஞானத்தினாலும் முத்தியிற் சிவஞானத்தினாலும் உணர்த்தி இரட்சிக்கும் என்று உணர்த்துகிறார்.

இதற்கு, இரண்டாஞ் சூரணி வருமாறு:

இனி, இவ்வான்மா சகசமலத்தினால் உணர்வின்று என்றது: என்பது இவ்விடத்திலே ஆன்மாவை ஆணவ மலம் சகசமாய் மறைத்துக்கொண்டு நிற்கையினாலே அறிவில்லையென்றுசொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே? அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான் என்பது—ஆன்மாவினுடைய அறிவு மலந்தான் மாறுபாடாக மறைத்துக் கொண்டிருக்கையினாலே சொன்னது.

இனி, இவ்வான்மா சகசமலத்தினால் உணர்வின்று என்றது. அதுதான் ஞான திரோதகமாய் மறைத்துக் கொடு நீற்றலான்—இவ்வான்மாவின் அறிவைஅனாதிசை யோகமாய்க் கூடஉதித்த சகசமலம் திரை போட்டது போல மறைத்து மயக்கிக்கொடுநிற்றலால் ஆன்மாவுக்குத் தானாய் விளங்கி அறியும் அறிவில்லை என்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

மாயா தனுவிளக்காய் மற்றுள்ளங் காணாதேல்
ஆயாதா மொன்றை யதுவதுவாய் — வீயாத
வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றுங் காட்டம்போல்
தன்னைமல மன்றணைத ரன்.

(இ—ள்) வீயாத வன்னிதனை தன்னுள் மறைத்து ஒன்றும் காட்டம்போல் — கெடாத அக்கினியைத் தன்னுள்ளே மறைத்துக் கொண்டு ஒன்றாய் நிற்கிற காட்டத்தைப் போல, தன்னை மலம் அன்று அணைதல் தான்—ஆன்மாவை ஆணவ மலமானது அநாதியே பொருந்தியிருக்கையினாலே, மாயா தனு விளக்காய்—மாயா சரீரம் ஒரு விளக்காக, மற்று உள்ளம் காணாதேல் — அந்தச் சரீரத்துக்கு வேறாயிருக்கிற ஆன்மா பொருந்தி அறியாதிருந்தானே யானால், ஆயாதாம் ஒன்றை அது அதுவாய்—அது அதுவாய் ஒரு விஷயத்தையும் விசாரித்தறிய மாட்டாது ஆன்மா என்றவாறு.

இனி, மாயா தனுவிளக்காய் மற்று உள்ளம் காணாதேல் ஆயாதாம் ஒன்றை அது அதுவாய் — முன் சொன்ன விந்துஞானமும் கலாதிஞானமும் அந்தக்கரண

அறிவும் ஞானேந்திரிய அறிவும் ஆகிய இவை எல்லாம் கூடின மாயா தனுவாகிய பாச ஞானம் விளக்கொளி போல ஆணவ மலத்தினுடைய காரியமான கேவல மறைப்பை நீக்க, அந்தப் பாசஞானவடிவாய் ஆன்மா கூடி நின்று சத்தாதி விடயத்தை அறிந்து அது அதுவாய் நின்று புசிப்பதன்றி மற்றப்படி தானுய்க் கேவலத்தை விட்டு நீங்கி ஒன்றையும் அறியமாட்டாதென்று சொல்லக் கேட்ட சீடன் மாயாவாதக்கருத்தாய் மாயையே ஆவரணசத்தி வடிவாய் மறைக்கும். நீர் சொன்ன ஆணவ மலம் என்ற ஒன்றில்லை என்ன நீ கேவலத்தில் அறிவின்றிக் கிடந்து தேகத்துடனே கூடின போது உன் இச்சா ஞானக் கிரியை சீவிப்பதைப் பிரத்தியட்சமாய்க் கண்டிருந்தும் மாயை மறைக்குமென்று அறியாது சொன்னுய். ஆணவ மலமே ஆன்மாவினுடைய அறிவை மோட்ச பரியந்தம் மறைக்கும். அதற்குத் திட்டாந்தம் எப்படி என்னில்? வீயாது வன்னிதனை தன்னுள் மறைத்து ஒன்ரும் காட்டம் போல் தன்னை மலம் அன்று அணைதல் தான் — கெடாமலே அக்கினியானது தன்னுட் கிடக்கக் காட்டமானது கொழுந்தாய்த் தோன்றின நாள் முதல் விறகாய் உலர்ந்து ஒருவர் கடைந்தெடுக்குமட்டும் அக்கினியை மறைத்து ஒன்ருய்க் கிடந்தது போல அநாதி தொடுத்து ஆணவமலஇருளே ஆன்மாவை மறைத்துச் சகசமாய்க் கிடக்கும் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

இப்படி மறைபட்ட ஆன்மா தான் உண்டென்று தோன்றுகிறது எப்படி என்னில்? கர்த்தாவினுடைய கிருபையாகிய திரோதனசத்தி அநாதி தொடுத்து அந்த மலத்துக்குள்ளேகூட நின்று மலத்தைப் பரியாகப் படுத்தி நீக்கும் நிமித்தம் காரியப்படுத்த, அதனுலே ஆன்மாகேவல

சகல சுத்தம் என்னும் மூன்றவத்தைப்பட்டு மலத்தை விட்டு நீங்கி ஞானசொரூபமாய்த் தோன்றும் என்று அவத்தை லட்சணமுணர்த்துகிறுர்.

மூன்ருஞ் சூரணி வருமாறு :

இனி, இவ்வான்மா சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம்துரியாதீதமாயுள்ளபஞ்சாவத்திதனுய் நிற்குமென்றது — என்பது இங்ஙனம் சொல்லப்பட்ட ஆன்மா அஞ்சவத்தைப் பட்டு வரும் என்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினுலே? அதுதான் மல சொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான் என்பது — ஆன்மா மலத்தினுடைய சொரூபத்திலே மறைந்த ரூபமே சொரூபமாய் நிற்கையினுலே சொன்னது.

இனி, இனி இவ்வான்மா சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாகிய பஞ்சாவத்திதனுய் நிற்குமென்றது. அதுதான் மல சொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான் — அநாதி கேவலத்தில் மறைபட்டுக் கிடக்கும் ஆன்மா காரண காரியமாகிய சகலாவத்தையினும் கேவலாவத்தையினும் மாறிமாறி அடைந்து வரும் இதில் கேவலப்பட்டரூபசொரூபியாய் நிற்கும் முறைமையை உணர்த்துகிறுர் என்றவாறு என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினில்
சென்றணையுஞ் சித்த மிதயத்து — மன்றவே
ஐயைந்தா நன்னுதலிற் கண்டத்து வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

(இ-ள்) ஒன்று அணையா மூலத்து — ஒரு கருவியும் பொருந்தாத மூலாதாரத்திலே புருடனென்றும் பொருந்தா நிற்கும். உயிரணையும் நாபியினில் — நாபித் தானத்திலே பிராணவாயு ஒன்றும் பொருந்தா நிற்கும், சென்று அணையும் சித்தம் இதயத்து — இருதயத் தானத்திலே சித்தம் ஒன்றும் பொருந்தா நிற்கும், நன்னுதலின் வாக்காதி மெய்யாதி—இலாடத்தானத்திலே பஞ்ச பூதத்தின் வழித்தாகிய ஞானேந்திரியங்களைந்தும் கன்மேந்திரியங்களைந்தும் ஆகப் பத்துக் கருவிகளும் பொருந்தா நிற்கும்.

இனி, ஒன்று அணையா மூலத்து—துரியாதீதத்திலே புருடபாகமாகும் ஆன்மா ஒழிய ஒரு கருவியும் பொருந்தாது, உயிர் அணையும் நாபியினில்—பிராணவாயு ஒன்றும் துரியத் தானமாகிய நாபியைப் பற்றி நிற்கும், சென்று அணையும் சித்தம் இதயத்து — சித்தம் ஒன்றும் சுழுத்தித் தானமாகிய இருதயத்தைப் பற்றி நிற்கும், மன்றவே ஐ ஐந்தாம் நன்னுதலில் கண்டத்து வாக்காதி மெய்யாதி விட்டகன்று வேறு — சித்தம் நீங்கலாக அந்தக்கரணம் மூன்றும் பிராணவாயு நீங்கலாக வாயுக்கள் ஒன்பதும் சத்தாதி ஐந்தும் வசனாதி ஐந்தும் ஆக இருபத்திரண்டு கருவியும் சொப்பனத்தானமாகிய கண்டத்தைப்பற்றிக் கிடக்கும்: ஞானேந்திரியம் ஐந்தும் கன்மேந்திரியம் ஐந்துமாகப் பத்துக் கருவியும் சாக்கிரத்தானமாகிய நுதலிடத்தைப் பற்றிக் கிடக்கும். இவை ஆன்மா கீழாலவத்தைப்படும் தன்மையில் இருபத்தைந்து கருவியும் கிடக்கும் முறைமை சொன்னது. இனி, சகலாவத்தைப்படும் தன்மையும் சுத்தாவத்தைப்படும் தன்மையும் உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளம்
இலாடத்தே யைந்தவத்தை யெய்தும் — இலாடத்தே
அவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
அவ்வவற்றி னீங்கலது வாங்கு.

*(இ-ள்) இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம் — இலாடத் தானத்திலே நின்று சாக்கிர முதல் அதீதம் ஈருக அஞ்சவத்தைப்பட்டு வந்த ஆன்மா, இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் — இலாடத் தானத்திலே தானே நின்று அதீத முதற் சாக்கிரம் ஈருக அஞ்சவத்தையும் பொருந்துவன், இலாடத்தே அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டதுவே-சாக்கிரத்தானத்திலே நின்று அந்தந்த இந்திரியங்களை அறிந்து வந்த ஆன்மாவே, அவ்வவற்றின் நீங்கல் — அந்தந்த இந்திரியங்களை விட்டு நீங்கினது, அது ஆங்கு — அது போலச் சுத்தத்திலே ஆன்மா அஞ்சவத்தைப்பட்டு வரும் என்றவாறு.*

*இனி, இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம் — மூலாவத்தைப்பட்டு அறிவின்றிக் கிடந்த ஆன்மா சகலாவத்தைப்படும் நிமித்தம் மேல் நோக்கிப் புருடபாகமாய்த் துரியத்திற் பிராணவாயுவுடனே கூடி இரண்டாய், சுழுத்தியில் சித்தத்துடனே கூடி மூன்றாய், சொப்பனத்தில் மனம் புத்தி ஆங்காரம் மூன்றும் வசனாதி ஐந்தும் சத்தாதி ஐந்தும் வாயு ஒன்பதுமாக இருபத்திரண்டு கருவியுடனும் கூடி இருபத்தைந்தாய், சாக்கிரத்தில் ஞானேந்திரியம் கன்மேந்திரியமான பத்துடனுங் கூடி முப்பத்தைந்தாய் முன் கேவல சாக்கிரத்துக்குக் கூடாமல் நின்ற சிவதத்துவம் அஞ்சும் வித்தியாதத்துவம் ஆறும் மாபூதங்கள் ஐந்துமாகப் பதினறு கருவிகளுடனும்*

கூடிச் சகலாவத்தைப்பட்டு நுதற்றானமாகிய இலாடத்திலே நின்று பஞ்ச விடயங்களைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்து புசிக்கும். அந்தச்சாக்கிரத்திலேயும், இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் — சாக்கிரத்திற் சாக்கிரம் சாக்கிரத்திற் சொப்பனம் சாக்கிரத்திற் சுழுத்தி சாக்கிரத்திற்றுரியம் சாக்கிரத்திற்றுரியாதீதம் ஆகிய மத்தியாலவத்தைப்படும். இதில், அதீதமாவது ஒரு பொருளை வைத்து மறந்தது. துரியமாவது பிராண வாயுவுடனே கூடி நினைவுண்டானது. சுழுத்தியாவது சித்தத்துடனே கூடி விசாரித்தது. சொப்பனமானது இருபத்திரண்டு கருவியுடனுங் கூடி அந்தப் பொருளை வைத்த விடம் சந்தேகமாய்த் தோன்றுவது. சாக்கிரத்திற் சாக்கிரமாவது மற்றப் பத்துக் கருவியுங் கூடக் கூடிப் பொருள் வைத்த விடம் புலப்பட அறிவது. இந்த ஐந்தவத்தையிலும் சத்தாதி விடயங்களை மறந்தும் நினைத்தும் மாறிமாறிப் புசித்துவரும் இதற்கெல்லாம் சிவசத்தி கூடி நின்று சிவதத்துவம் ஐந்தினாலும் வித்தியா தத்துவங்களைச் செலுத்திக் கன்மத்தின் வழியே இன்ப துன்பங்களை அறிவித்துப் புசிப்பிக்கும். கனவிலேயும் புசிப்பு உண்டானால் சூக்கும தேகத்தினாலே கூடித் திருவருட் பிரேரகத்தினாற் புசித்து வரும். இந்தச் சாக்கிர சொப்பனம் இரண்டும் சுத்தாவத்தையா மென்று அறிக. இப்படி அநாதி தொடுத்து மோட்சபரியந்தம் தேகக் கருவிகளுடனே கூடி மாறிமாறிப் பிறந்து கேவலப் பட்டுக் கிடந்த காலமெல்லாம் காரண கேவலம் என்று அறிக. இலாடத்தே அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டதுவே அவ்வவத்தை நீங்கல் அது ஆங்கு — இனிச் சுத்தாவத்தையாவது இருவினையொப்பு மலபரிபாகம் பிறந்த அளவில் ஆசாரியர் அநுக்கிரகத்தினாலே பாச

ஞான பசுஞானங்களை விட்டுச் சிவஞானத்துடனே கூடி நின்று அந்த இலாடத்தானத்திலே தானே முன் சொன்ன கேவலாவத்தையின் செய்தியும் சகலாவத்தையின் செய்தியும் அறிந்து தான் அதனோடும் கூடாமல் வேறு என்று அறிந்து நீங்கி நிற்பதே சுத்தாவத்தை. அதிலும் நின்மல சாக்கிர நின்மலசொப்பன நின்மலசுழுத்தி நின்மல துரியம் நின்மல துரியாதீதம் ஆகிய அஞ்சவத்தையும் ஆசாரியர் அநுக்கிரத்தினால் அறிந்து ஆன்மா மோட்சத்தைப் பெறும் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

நாலாஞ் சூத்திரம் அவத்தைக்கு வேறாய் ஆன்மா உண்டு என்று அறிவித்த கருத்து முற்றியது.

## நாலாஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.

---

இப்படி அவத்தைத்தன்மை உணர்த்தக்கேட்ட சீடனை உன் அநுபவம் என் என்று கேட்க மாயாவாதக் கருத்தாய் மயங்கிப் பிரமத்துக்கு வேறாய் ஆன்மா என்பது ஒன்றில்லை. இங்ஙனம் சொன்ன மூன்றவத்தையும் கண்டு நீங்கின அறிவு கடத்துக்குள் வளைபட்ட ஆகாயம் போலத் தேகத்தில் வளைபட்டு நின்ற அவத்தாத்திரய சாட்சியாகிய கூடத்தர் என்னும் பெயரையுடைய உடற்படு பிரமம் என்று சொல்ல, அது பிரமமல்ல, கர்த்தாவினுடைய உபகாரத்தினாலே சீவித்து வரும் ஆன்மா என்று மறுத்து உணர்த்துகிறார். இதற்கு ஐந்தாம் சூத்திரம் வருமாறு :—

## ஐந்தாஞ் சூத்திரம்

**விளம்பிய வுளத்து மெய்வாய் கண்மூக்**
**களந்தறிந் தறியா வாங்கது போலத்**
**தாந்த முணர்விற் றமியருள்**
**காந்தங் கண்ட பசாசந் தவையே.**

(இ-ள்) விளம்பிய உளத்து — இங்ஙனம் சொல்லப் பட்ட ஆன்மாவினாலே, மெய்வாய் கண் மூக்கு அளந்து அறிந்துஅறியா — மெய்வாய் கண் மூக்குச் செவிகளாகிய பஞ்சேந்திரியங்கள் அறிந்து காரியப்பட்டு வருமிடத்தும் ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டு வருகிறோம் என்று அறியச்செய்யாது, ஆங்கு அதுபோல — அந்தப் பஞ்சேந் திரியங்களைப்போல, தாம் தம் உணர்வில் தமியருள் — தனக்கெனச் சுயமே ஓர் அறிவில்லாத ஆன்மாவும் ஒப் பற்ற கர்த்தாவினாலே அறிந்து காரியப்பட்டு வருமிடத் தும் கர்த்தாவினாலே அறிந்து காரியப்பட்டுவருகிறோம் என்று அறியச்செய்யாது. கர்த்தாவினாலே அறிந்து காரியப்பட்டு வருகிறது எப்படியென்னில்? காந்தம் கண்ட பசாசத்தவையே — காந்தத்தினுடைய சந்நிதா னத்திலே இரும்பு காரியப்பட்டு வருகிறதுபோலக் கர்த்தாவினுடைய சந்நிதானத்திலே ஆன்மாக்களும் காரியப்பட்டு வரும் என்றவாறு.

— என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின் — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங் கிற்றோ எனின், இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுப காரம் உணர்த்துதல் நுதலிற்று. இவ்விடத்திலே சர்வான்மாக்களுக்கும் தமக்கு முதன்மையாகிய கர்த்தா

தானே ஊட்டி உறக்கிக் கிடத்தி நடத்தி உபகரித்து வருகிற முதன்மையைச் சொல்லத் தொடங்கிற்று.

இனி, — என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின்? இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் உபகாரமுணர்த்துதல் நுதலிற்று. நீ உடற்படு பிரமம் என்று சொன்ன ஆன்மாவினாலே சுரோத்திராதி ஞானேந்திரியம் ஐந்தும் அந்த ஆன்மாவுடனே கூடி நின்று சத்தாதி விடயங்களை அறியச் செய்தேயும் அந்த இந்திரியங்கள் தம்மையும் அறியாமல் தம்முடனே ஒன்றாய்க் கூடிநின்று அறிவிக்கும் ஆன்மாவையும் அறியாமல் நிற்பதுபோல நீ உடற்படு பிரமம் என்ற ஆன்மாவும் கர்த்தா ஒற்றுமையாய் உயிர்க்குயிராய்க் கூடிநின்று கன்மங்களை அறிந்து கூட்டி முடித்து அறிவுக்கறிவாய் அறிவித்து நிற்க அந்த உபகாரத்தினாலே காந்தத்தின் சந்நிதானத்தில் இரும்பு சேவிப்பதுபோல ஆன்மாவாகிய நீ செயற்பட்டு நிற்கச்செய்தேயும் அந்த உபகாரத்தையும் மறந்து தன்னையும் தலைவனையும் அறியாமல் நிற்கிறாய் என்பது ஒருரை.

இதற்கு முதற் சூரணி வருமாறு :

ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவாலுணரும் என்றது. என்பது இவ்விடத்திலே பஞ்சேந்திரியங்கள் ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டுவரும் என்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே? அவற்றினால் ஆன்மா ஒற்றித்துக் காணின் அல்லது அவை ஒன்றையும் விடயியா ஆகலான்: என்பது ஆன்மாவானவன் பஞ்சேந்திரியங்களைப் பொருந்தி யறிந்தாலல்லது பஞ்சேந்திரியங்கள் ஒரு விடயத்தையும் அறியச் செய்யாதாகையினாலே சொன்னது.

இனி, இவ்விடத்தில் ஐந்துணர்வுகளாகிய சுரோத்திராதி ஞானேந்திரியங்கள் ஆன்மாவுடனே ஒற்றுமையாய் நின்று உணர்ந்து அறிவதல்லது அவை ஒரு விடயத்தையும் தாமாயறிந்து விடயியாதென்று நாம் சொன்னது என்பது ஒருரை.

**உதாரண வெண்பா :**

ஐம்பொறியை யாண்டங் கரசா யுளநிற்ப
ஐம்பொறிக ளுள்ள மறியாவாம் — ஐம்பொறியிற்
காணதேற் காணது காணுமுளங் காணதேற்
காணகண் கேளா செவி.

(இ—ள்) ஐம்பொறியை ஆண்டு — பஞ்சேந்திரியங்களையும் தனக்கடிமையாக ஆண்டு, அங்கு அரசாய் உளம் நிற்ப — அவ்விடத்திலே இராசாவைப்போலே ஆன்மா நிற்குமிடத்தும், ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம் — பஞ்சேந்திரியங்கள் ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டு வருமிடத்தும் நாம் ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டு வருகிறோம் என்று அறியச் செய்யாது, ஐம்பொறியிற் காணதேற் காணது — ஆன்மாவும் பஞ்சேந்திரியங்களைப் பொருந்தினால் அல்லது ஒரு விடயத்தையும் அறியச்செய்யாது. ஆனால், பஞ்சேந்திரியங்களோ முதன்மை ? காணும் உளம் காணதேல் — அறியவல்ல ஆன்மா பஞ்சேந்திரியங்களைப் பொருந்தி யறியாதிருந்தானேயானால், காண கண் — கண்ணுங்காணாது, கேளா செவி — செவியும் கேளாது என்றவாறு.

இனி, ஐம்பொறியை ஆண்டு அங்கு அரசாய் உளம் நிற்ப ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம் — ஐந்து

இந்திரியங்களையும் விடயங்களிற் செலுத்தி ஆண்டு கொண்டு அவைகளுக்கு இராசாவாய் ஆன்மா ஒற்றித்து நிற்கவும் அந்த ஐம்பொறிகள் ஆன்மாவை அறியாது. அப்படி இந்திரியங்களால் அறியப்படாமல் நிற்பதுவே பிரமம் என்று நீ சொல்லுவாயானால், ஐம்பொறியிற் காணாதேல் காணாது—பிரமத்துக்கு இந்திரியங்களுடனே கூடி அறியவேண்டுவதில்லை. நீ பிரமமென்று சொன்னது ஆன்மாவாகையால் அது ஐம்பொறிகளுடனே கூடியல்லது தானாய் ஒருவிடயத்தையும் அறியமாட்டாமல் நிற்கிறது. காணும் உளம் காணாதேல் காணா கண் கேளா செவி — அந்த ஐந்து இந்திரியங்கள் தாமும் இந்த ஆன்மாக் கூடி நின்றாலன்றிக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிய மாட்டா என்றறிவாயாக என்றவாறு என்பது ஒருரை.

இங்ஙனம் சொன்ன ஆன்மாவும் கர்த்தா ஒற்றுமையாய் நின்று கருவிகளையும் கூட்டிக் கன்ம பலன்களையும் அறிந்து கூட்டி உடன்பாடாய் நின்று உணர்த்த அறியும் என்பதற்கு.

இரண்டாஞ் சூரணி வருமாறு :

இனி, இவ்வான்மாத் தன்னாலே யுணரும் இந்திரியங்களைப்போல என்பது—இந்த ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டு வருகிற பஞ்சேந்திரியங்களைப் போல, தானுந் தன்னை யுணராது நிற்றலான் என்பது—ஆன்மாவும் தன்னுடைய சுபாவத்தை அறியாமல் நிற்கையினாலே, இதுவும் தமது முதலாலே யுணரும் என்பது—ஆன்மாவும் தமக்கு முதன்மையாகிய கர்த்தாவினாலே அறிந்து காரியப்பட்டு வரும் என்று சொன்னது,

இனி, இவ்வான்மா தன்னாலே யுணரும் இந்திரியங்களைப்போல இதுவும் தம்மை உணராது நிற்றலால் இதுவும் தமது முதலாலே யுணரும் என்றது — ஆன்மாவினாலே அறிகிற இந்திரியங்களைப்போல இந்த ஆன்மாவும் தன்னையறியாது நிற்றலால் கர்த்தா ஒற்றுமையாய் நின்று அறிவிக்க ஆன்மாவினாலே கருவிகளாகிய இந்திரியங்கள் அறிவதுபோல இந்த ஆன்மாவும் கர்த்தாவுக்குக் கருவியாய் நின்று அறியும் என்று அறிவாயாக. இப்படிச் சொல்லக்கேட்ட சீடன் மாயாவாதக் கருத்தாய்ச் சகல உலகமும் பிரமமே அறிந்து நடத்துகிறதென்று வேதம் சொல்ல நீர் ஆன்மாக்கள் அறிகிறதென்று சொன்னதென் என்று கேட்க, நீ வேதத்தின் அர்த்தம் அறியாமற் சொல்லுகிறாய் என்று மறுத்துணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

*உதாரண வெண்பா :*

மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியன்மறந்தாய் — சொன்னசிவன்
கண்ணு வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணுன் சிவனசத்தை யின்று.

(இ-ள்) மன்னு சிவன் சந்நிதியில் — நிலைபெற்ற கர்த்தாவினுடைய சந்நிதானத்திலே, மற்று உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய் — உனக்கு வேறாயிருக்கிற பிரபஞ்சம் காரியப்பட்டு வருமென்று வேதாகமங்கள் சொல்லுகிற முறைமையினையும் மறந்துவிட்டாய், சொன்ன சிவன் கண்ணு — சொல்லப்பட்ட கர்த்தாவினிடமாக, உளம் வினையால் — ஆன்மாவினுடைய வினைக்கு ஈடாக, கண்டறிந்து நிற்கும் காண் —

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்து வரும் காண், எண்ணேன் சிவன் அசத்தை இன்று — இப்பொழுது கர்த்தாவுக்கு அசத்தாகிய பாசத்தை விசாரித்தறிய வேண்டுவதில்லை என்றவாறு.

இனி, மன்னுசிவன் சந்நிதியில் மற்று உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய் — எங்கும் பரிபூரணனாய் நிலைபெற்று நிற்கிற பரப்பிரமமாகிய பரமசிவன் சந்நிதானத்திலே உலக உயிர்களெல்லாம் அறிந்து சேட்டைப்படுமென்று வேதம் சொன்ன அர்த்தத்தை அறியாமல் மறந்துவிட்டாய், சொன்ன சிவன் — அந்த வேதங்களைச் சொன்ன சிவன், கண்ணு உளம் வினையால் கண்டறிந்து நிற்கும் காண் — உலகத்தி லுள்ள சகல ஆன்மாக்களுக்கும் ஒரு கண்ணாக நின்று தேக போகங்களையறிந்து கூட்டிக்காட்ட ஆன்மாக்கள் அவரவர் கன்ம பலன்களைக்கண்டு புசிக்கும், இதுவன்றி, எண்ணேன் சிவன் அசத்தை இன்று — அந்த ஆன்மாக்கள் புசிக்கும் பொய்ப் போகமாகிய உலக பதார்த்தங்களைக் கர்த்தாவாகிய பரமசிவன் தனக்கென்றறிய வேண்டுவதில்லை என்று அறிவாயாக என்றவாறு. ஆனால், அந்தச் சிவ சந்நிதானத்திலே நின்று கன்ம பலன்களைக் கண்டு புசிக்கும் ஆன்மாக்களைக் காண்பது எப்படி ? என்னில், அநுமானப்பிரமாணத்தால் அறியலாமென்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல — மெய்யவனிற்

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டேனய் மன்னுதலைக் காண்.

(இ–ள்) வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது— ஆதித்தனுடைய சந்நிதானத்திலே நட்சத்திரமானது இருக்கிறதென்று விளங்கினதுமல்ல, இல்லையென்று பேரினதுமல்ல, ஆதித்தனய்த்தான் போயிற்ரே? வெய்யோனை ஆகாத மீன்போல — ஆதித்தனையாகாத நட்சத்திரங்களைப்போல, மெய்யவனில்—மெய்யவனுகிய ஆன்மாவினுலே, கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனைக் கண்டு — கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றுப் பொருந்திவருகிற பஞ்சேந்திரியங்களையும் உனக்கு வேறென்றறிந்துவிட்டு, உடனய் மன்னுதலைக் காண்—உன்னெடுங் கூடி நிலைபெற்றிருக்கிற கர்த்தாவை அறிவாயாக என்றவாறு.

இனி, சூரியனுடைய பிரகாசத்திலே நட்சத்திரங்கள் விளங்காமல் ஒடுங்கி நின்று சஞ்சரித்துக்கொண்டு சூரியனுகாமல் தனித்தனியே நிற்பதுபோல ஆன்மாக்களும் மெய்யவனுகிய கர்த்தாவினுடைய ஞானப்பிரகாச சந்நிதானத்திலே ஒடுங்கிநின்று அந்த ஞானங்காட்டக் கன்ம பலன்களைக் கண்டுங் கேட்டும் உண்டுமுயிர்த்தும் பரிசித்தும் சஞ்சரித்துக்கொண்டு நிற்கும். இப்படிக் கர்த்தாவின் சந்நிதானத்திலே ஆன்மாக்கள் கூடிநின்று புசித்து நிற்கும் நிலைமையை அறிவாயாக என்றவாறு.

ஆனல், கர்த்தாவையன்றி ஞானசக்தி புறம்போ? என்னில், புறம்பாயிராது குணியும் குணமுமாய்ச் சூரியனும் கிரணமும்போலச் சிவமும் சத்தியும் ஒன்ருயிருக்குமென்று உணர்த்துகிருர் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
அருளு மவனன்றி யில்லை — அருளின்
றவனன்றே யில்லை யருட்கண்ணோர் கண்ணுக்
கிரவிபோ னிற்குமர னேய்ந்து.

*(இ—ள்) அருள் உண்டாம் ஈசற்கு — கர்த்தாவுக்குக் கிருபையுண்டாம், கிருபையாவது எது? அது சத்தி — அது கர்த்தாவினுடைய சத்தியாயிருக்கும், அந்தச் சத்திதான் எப்போது உள்ளது? அன்றே — அநாதியிலே உள்ளது, அதுதான் பின்னமோ? அபின்னமோ? அருளும் அவன் அன்றி இல்லை — கர்த்தாவில்லையோ சத்தியுமில்லை, அருள் இன்று அவன் அன்றே இல்லை— சத்தியில்லையோ கர்த்தாவுமில்லை, அதனாலே பிரயோசனமென்ன? அருட்கண்ணோர் கண்ணுக்கு — கிருபைக்கண்ணையுடைய ஞாதாக்கள் ஊனக்கண்ணுக்கு, இரவிபோல் நிற்கும் அரன் ஏய்ந்து — கண்ணையும் ஆதித்தனையும் போலக் கர்த்தா இரண்டறப்பொருந்தி நிற்பன் என்றவாறு.*

*இனி, அந்த அருட்சத்தியானது கர்த்தாவினுடைய பேரறிவாகிய ஞானமாய் அநாதியிலே தொடுத்து ஒன்றாயிருக்கும். அந்த அருட்சத்தியும் கர்த்தாவையின்றித் தனியேயிராது: கர்த்தாவும் அந்த அருட்சத்தியைவிட்டுத் தனியேயிருக்கிறவரல்ல: மலந்தீர்ந்து ஞானக்கண் பெற்ற ஆன்மாக்களுக்குப் படலம் தீர்ந்த கண்ணுக்குச் சூரியனும் கிரணமும் கண்ணிற் கலந்து எங்கும் பிரகாசமாய்த் தோன்றி நிற்பதுபோல அந்தச்சிவமும் சத்தியும் கலந்து*

நின்று பிரியாமல் தெரிசனை கொடுத்து நிற்பர்கள் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

ஐந்தாஞ் சூத்திரம் உடற்படு பிரமமே அறிவது என்று சொன்னதை மறுத்த கருத்து முற்றியது.

## ஐந்தாஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.

---

இங்ஙனம் அறிவித்த அனுக்கிரக வசனங்களைக் கேட்ட சீடனை உன் அநுபவம் என்னென்று கேட்க, தத்துவங்களெல்லாம் சடமென்றும், என்னாலே செயற்படுகிறதென்றும் கண்டேன், என்னையன்றி வேறே நீர் சொன்ன சிவமும் சத்தியும் தோன்றக்காணேன் என்று பாசஞானவடிவாய் நின்று மயங்கிப் பிரமம் அன்றி ஆன்மா வேறே இல்லை என்று சொல்ல, நீ இந்த உலக மெல்லாம் கலந்து நின்றும் ஒன்றோடும் ஒட்டாமல் நிற்கிற பிரமம் ஆகாய்; உனக்கு வேறாய்ப் பிரமம் ஒன்று உண்டு என்றறிவாயாக என்று ஆறாஞ் சூத்திரம் உணர்த்து கிறார். இதில் அநுபவம் தத்துவ தெரிசனம்.

## ஆறாஞ் சூத்திரம்

**உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்**
**இருதிற னல்லது சிவசத் தாமென**
**இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.**

(இ—ள்) உணர் உரு அசத்து — உன் அறிவினாலே சுட்டியறியப்பட்டதெல்லாம் அசத்தாய்ச் சடமாய் அழிந்துபோம், எனின் — என்று சொல்லுவீரானால்,

உணராதின்மையின் — என்னறிவினாலே சுட்டியறியப் படாத பொருளொன்று உண்டாமேயானால் அதனாலே ஆகிற பிரயோசனமென்ன? இரு திறன் அல்லது........ முயற்கோடு ஆகாயப்பூப்போல இல்லாத பொருளுமல்ல, சிவசத்தாமென்ன இரண்டு வகையின் இசைக்கும் மன் உலகே — இந்த இரண்டு முறைமைகளினாலும் சத்தாகிய சிவமென்று நிலைபெற்ற அறிவான் மிக்க ஞாதிர்க்கள் திருவுளம்பற்றுவார்கள் என்றவாறு.

— என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின் — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங் கிற்றோ எனின், சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த் துதல் நுதலிற்று — சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பாசத்தையும் பகுத்துச் சொல்லத்தொடங்கிற்று,

இனி, தத்துவதெரிசனைப்பட்டு நின்ற சீடன் நீர் சொல்லுகிற கர்த்தா என்னால் அறியப்படுகிறவரோ? என்னால் அறியப்படாதவரோ? என்று கேட்க, உன் அறிவினாற் சுட்டியறியப்பட்டதெல்லாம் அசத்தாய் அழிபொருளாய் அழிந்துபோம்: உன்னால் அறியப்படாத தெல்லாம் முயற்கோடு ஆகாயப்பூப்போல என்றுமில்லாத பொய்ப்பொருளாம்: அந்த இரண்டு வகையும் அல்லாம லிருப்பது சிவ சத்தாகிய மெய்ப்பொருளென்று சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பாசத்தையும் வரைசெய்து உணர்த்துகிறார் என்றவாறு என்பது ஓர் உரை.

இதற்கு, **முதற் சூரணி** வருமாறு:

*கண்டு அறிவினாலறியப்பட்ட சுட்டு அசத்தென்றது.* இவ்விடத்திலே என் அறிவினாலே சுட்டியறியப்பட்ட தெல்லாம் அசத்தாய்ச் சடமாய் அழிந்துபோம் என்று

சொல்விற்றே! அது எந்த ஏதுவினாலே? அவை தாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான் — அந்தப் பிரபஞ்சத்தை நீ பொருந்தினவிடத்துப் பிரகாச மாயும் அல்லாதவிடத்து அப்பிரகாசமாயும் நிற்கையி னாலே சொன்னது.

இனி, இவ்விடத்தில் உன் அறிவினாலே சுட்டி யறியப்பட்ட தேகாதிப் பிரபஞ்சமெல்லாம் ஆன்மாப் பொருந்தி யறிந்தபோது பிரகாசமாய் ஆன்மாக் கூடி யறியாதபோது அப்பிரகாசமாய்ச் சடமாயுங் கிடந்து அழிந்துபோகையால் உன் அறிவினாற் சுட்டியறியப்பட்ட தெல்லாம் அசத்தாகிய பொய்ப்பொருளாய்த் தோன்றி யழிந்துபோமென்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த தெல்லாம்
அசத்தாகு மெய்கண்டா னாயின் — அசத்தலாய்
நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரினவை யின்றாமா றேப்பு.

(இ-ள்) அசத்து அறியாய்கேள் நீ — பொய்யைப் பொய் என்று அறியாதவனே! நீ கேட்பாயாக, அறி வறிந்ததெல்லாம் அசத்தாகும் — உன் அறிவினாலே சுட்டியறியப்பட்டதெல்லாம் அசத்தாய்ச் சடமாய் அழிந்துபோம், மெய்கண்டானாயின்—சத்தியத்தைத் தெரி சித்தவன் விசாரித்தறியுமிடத்து, அசத்தலாய் — அசத் தாகிய பாசத்திலே ஒன்றல்லாதவனே, நீரில் எழுத்தும்— தண்ணீரிலே எழுதின எழுத்தும், நிகழ் கனவும் — விளங்காநின்ற சொப்பனமும், பேய்த்தேரும் — ஊரா

நின்ற கானற்றேரும், ஓரில் — விசாரிக்குமிடத்து, அவை இன்று ஆம் ஆறு ஒப்பு — அவையில்லாத முறைமை போல என்றவாறு.

இனி, அசத்தாகிய தேகாதிப் பிரபஞ்சத்தைப் பொய்யென்று அறியாமல் மெய்யென்று இருக்கிறவனே! கேட்பாயாக. உன் அறிவினாற் சுட்டியறியப்பட்ட பொருளெல்லாம் அசத்தாய் அழிந்ததுபோல் பொய்யாய்த் தோன்றும். நீ சிவஞானத்தைத் தெரிசித்த அதனால் அறிந்தாயாகில் நீயோ அந்த அசத்துப் பொருள்போல அழிகிறவனல்ல. அந்தந்தத் தேகாதிப் பிரபஞ்சமெல்லாம் உனக்கு எப்படிப் பொய்யாய்த்தோன்றும் என்னில், நீர்மேல் எழுத்துப்போலவும் கனவிற்கண்ட பொருள் போலவும் தண்ணீர்போலத் தோன்றுகிற கானற்சலம் போலவும் பொய்யாய்த் தோன்றுமென்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

என் அறிவினாற் சுட்டியறியப்பட்ட பொருளெல்லாம் பொய்யாய் அழிந்துபோமானால் நீர் சொன்ன ஞான வடிவாகிய சிவத்தை அறிகிறது எப்படி? என்னில், அறிகிற வகை இப்படி என்பதற்கு,

இரண்டாஞ் சூரணி வருமாறு :

இனிப் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவதின்மையானும் — பிரகாசமாகிய கடபடாதிகளுக்குப் பிரகாசிப்பிக்கவேண்டுவதின்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும் — அப்பிரகாசமாகிய முயற்கோடு ஆகாயப்பூவிற்கு உண்டாந்தன்மை இல்லாதாகையினாலேயும், இவ்விரண்டு தன்மையுமின்றி — இந்த இரண்டு முறைமைகளுமில்லாமல், வாக்கு மனாதீத

கோசரமாய் நின்ற அதுவே — மனம் வாக்குக் காயங்களுக்கு எட்டாமல் கோசரித்துக்கொண்டு நிற்கிற பொருளே, சத்தாயுள்ள சிவம் என்று உணரற்பாற்று— சத்தாகிய சிவமென்று விசாரித்தறியு முறைமையினையுடைத்து என்றவாறு.

இனி, இனிப் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவதின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும் இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று உணரற்பாற்று. பிரத்தியட்சமாய் இடைவிடாமல் அழிந்துகொண்டுவருவதே பிரகாசமாய் எங்குங் காட்டிக்கொண்டு நிற்கிற தேகாதிப்பிரபஞ்சத்தை நாம் பிரகாசித்துக் காட்டவேண்டுவதின்மையானும் அப்பிரகாசமாய் என்றுமில்லாத முயற்கோடு ஆகாயப்பூப்போல ஒரு காலமும் பிரகாசித்துத் தோன்றுவதின்மையானும் இந்த இரண்டு தன்மையுமின்றி இந்தத் தேகாதிப் பிரபஞ்சத்தை ஆன்மாக்களுக்காக உண்டாக்குகிறவராய்ச் சகல ஆன்மாக்களுடைய அறிவுக்கறிவாய் உயிர்க்குயிராய் ஆன்மாக்களுடைய மன வாக்குக் காயங்களுக்கு எட்டாத அதீதகோசரமாய்ச் சகங்களுக்கெல்லாம் ஆதாரமாய் என்றும் உண்டாய்ப் பிரமேயமாய்க் காணப்படுகிற பொருளே நாம் சத்தென்று சொன்ன சிவம் என்று அறிவாயாக என்பது ஒருரை.

**உதாரண வெண்பா :**

எண்ணிய சத்தன் றசத்தன்று மென்றுலென்
கண்ணி யுளதென்றன் மெய்கண்டான் — எண்ணி
அறிய விரண்டா மசத்தாதல் சத்தாம்
அறிவறியா மெய்சிவன்று ளாம்.

(இ—ள்) எண்ணிய சத்து அன்று — என் அறிவி ஞலே சுட்டியறியப்பட்டதெல்லாம் சத்தாகிய சிவமல்ல அசத்தாகிய பாசம் என்றீர், அசத்து அன்ரும் — என் அறிவிஞலே சுட்டியறியப்படாததெல்லாம் அசத்தாகிய பாசமல்ல சத்தாகிய சிவம் என்றீர், என்ருல் — என்று சொல்லுவீராஞல், என் கண்ணி உளது என்றல் — என்னத்தைக் கருதியோ இப்படி ஒரு பொருள் உண் டென்று திருவுளம்பற்றினது, மெய்கண்டான் எண்ணி அறிய இரண்டாம் அசத்து — சத்தியத்தைத் தெரிசித்த வன் விசாரித்தறியுமிடத்து நீ என்றும் பாசமென்றும் இரண்டாயிருக்கும், ஆதல் — ஆகையிஞலே, சத்தாம் — சத்தாகிய சிவமோ அப்படி இரண்டாயிராது, அறிவறியா மெய் சிவன் தாளாம் — உன் அறிவிஞலே சுட்டியறியப் படாத சத்தியமானது கர்த்தாவினுடைய திருவடித் தாமரையாம் என்றவாறு.

இனி, எண்ணிய சத்தன்று அசத்தன்று ஆம் என் ருல் — என் அறிவிஞல் காணப்பட்டதும் சிவமல்ல அறி விஞல் காணப்படாததும் சிவமல்ல என்ருல், என் கண்ணி உளது என்றல் — என்னத்தைக்கருதிச் சத்தா கிய சிவம் ஒன்றுண்டென்று சொன்னதென்று நீ கேட் கிருயாஞல், மெய்கண்டான் எண்ணி அறிய இரண் டாய் அசத்தாதல் சத்தாம் அறிவு அறியா மெய் சிவன் தாள் ஆம் — முன் மெய் என்றிருந்த தேகாதிப் பிரபஞ்ச மெல்லாம் இப்போது பொய்யென்று உனக்கு வேருய்த் தோன்றுமாஞல் அதற்கு வேருகி நீங்கி நின்ற நீ ஆன்மா வாகிய சத்தாம்; இப்போது அந்த ஆன்மாவாகிய உனக் கும் பிரபஞ்சத்தை யெல்லாம் சத்தென்று காட்டிக் கொண்டு நிற்கிற ஞானமே சிவமாகிய சத்தாம்: அது உன் அறிவிஞற் சுட்டி அறியப்படாத மெய்யாய் நிற்குமென்று

சிவனுடைய பாத தாமரையை அறிந்துகொள்வாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

நீ சொன்ன சத்தாகிய சிவத்தை என் அறிவினாலே அறியப்படாமல் போனால் அவராலே எனக்குப் பிரயோசனம் ஏது? என்று கேட்க அவர் உன் அறிவினால் அறியப் படுகிறவர் அல்ல அவன் அருளாலே அவன் தாள்வணங்க வேண்டும் என்று உணர்த்துகிறார்.

**உதாரண வெண்பா :**

உணர்ப வசத்தாதல் ஒன்றுணரா தொன்றை
உணருநீ தானுணரா யாயின் — உணருமுனில்
தானிரண்டா மெய்கண்டான் தன்னால் உணர்தலால்
தானிரண்டாய்க் காணான் றமி.

(இ-ள்) உணர்ப அசத்து — உன் அறிவினாலே சுட்டி அறியப்பட்டதெல்லாம் அசத்தாய் சடமாய் அழிந்துபோம். அப்படி அழிந்துபோவானேன்? ஒன்று உணராது ஒன்றை — ஓர் இந்திரியம் அறிந்த விடயத்தை ஓர் இந்திரியம் அறியாது, ஆதல் — ஆகையினாலே, அப்படி அறியாதிருப்பானேன்? உணரும் நீதான் உணராயாகில் — விசாரித்தறிகிற நீ விசாரித்தறியாய் ஆகையினாலே, உணரும் உனில்தான் இரண்டாம் — அறிகிற நீ விசாரித்தறியவே நீயென்றும் பாசமென்றும் இரண்டாயிருக்கும், மெய்கண்டான் தன்னால் உணர்தலால் — சத்தியத்தைத் தெரிசித்தவன் கர்த்தாவினுடைய திருவருளினாலே விசாரித்தறியுமிடத்து, தான் இரண்டாய்க் காணான் தமி — ஒப்பற்ற கர்த்தாவைத் தான் இரண்டாகக்காணான் என்றவாறு. அப்படிப் பொருளைப் பாவிப்பன்.

இனி உணர்ப அசத்தாதல் ஒன்று உணராது—உன் அறிவினால் உனக்குக் கருவி என்று அறியப்பட்ட மனாதி கரணங்களெல்லாம் அசத்தாகிய சடம்: ஆகையால் சிவத்தை அறிவித்தால் அறியமாட்டாது, ஒன்றை உணரும் நீதான் உணராய் ஆயின் — ஒன்றை அறிவித்தால் அறிகிற நீயும் சிவத்தை அறியாதேபோனால், உணரும் உனில்தான் இரண்டாம்—அந்த அசத்துக்கு வேறாய் காணப்படாமல் நின்ற சிவம் உனக்கும் அறியப்படாதவனாய் வேறாகி இரண்டுபடும், மெய்கண்டான் தன்னால் உணர்தலால் — இப்போது முன் ஒன்றும் அறியாமல் இருந்த நீ பாசத்தையும் உன்னையும் சிவத்தையும் அறிவிக்க அறிகையால் அந்தச் சிவஞானமாய் நின்றே அறிந்தாயானால் அப்பாசத்தை வேறாக அறிந்ததுபோலக் கர்த்தாவையும் வேறாக அறியலாமோவென்னில்? தான் இரண்டாய் காணான் தமி — அப்படி இரண்டாய் அறியப்படாது அநந்நியமாய் ஒன்றாய் நின்றே காணவேண்டும் என்று அறிவாயாக என்றவாறு.

இங்ஙனம் சொன்ன உண்மை தெரியாமல் நீர் சொன்ன கர்த்தா எனக்குத் தோன்றவில்லை; அவரைப் பாவித்தறியலாமோவென்னில், பாவகத்துக்கு எட்டான் என்று மறுத்து உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

பாவகமேற் றானசத்தாம் பாவனா தீதமேனிற்
பாவகமா மன்றென்னிற் பாழதுவாம் — பாவகத்தைப்
பாவித்த றானென்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ்.

(இ-ள்) பாவகமேல் தான் அசத்தாம் — உன் பாவனையாலே பாவிக்கப்பட்டதெல்லாம் அசத்தாய் சடமாய் அழிந்துபோம், பாவனாதீதமெனில்—என்னுடைய பாவனைக்கு எட்டாத பொருள் என்றே பாவிப்பன் என்று சொல்லுவையானால், பாவகம் ஆம் — அதுவும் உன்னுடைய பாவனையல்லவோ, அன்று என்னில்—என் பாவனையாலே பாவிக்கப்பட்ட பொருளும் அல்ல என் பாவனையினாலே பாவிக்கப்படாது ஆகையினாலே முயற் கோடு ஆகாயப் பூப்போல இல்லாத பொருளுமல்ல என்று பாவிப்பன் என்று நீ சொல்லுவையானால், பாழ் அதுவாம் — சூனியமாம், பாவகத்தை பாவித்தல் தான் என்னில்— அந்தப் பொருள் தானே வந்து ஆவரித்துக்கொள்ளும் என்று பாவிப்பன் என்று சொல்லுவையானால், பாவகம் ஆம் — அதுவும் உன்னுடைய பாவனை தான் அல்லவோ, பின்னைத்தான் எப்படி? தன் அருளால் பாவிப்பது பரம்— கர்த்தாவினுடைய திருவருளைப் பொருந்தி பாவிக்கிறதே மேலானது, இல் பாழ் — இப்படி இல்லாததெல்லாம பாழ் என்றவாறு.

இனி, பாவகமேல் தான் அசத்தாம் — நீ பாவித்து அறிகிறேனென்று சொல்லுகிறாயானால் உன்னால் சுட்டியறிந்ததெல்லாம் அசத்தாய் அழிந்துபோம், பாவனாதீதம் எனில் பாவகம் ஆம் — பாவகத்துக்கு எட்டாமல் நிற்பனென்று தியானிப்பேன் என்கிறாயானால் ஒரு பிரயோசனமும் அற நின்றதே உன் பாவகமாய்ப் போம், அன்றென்னில் பாழது ஆம் — பாவிக்கிற அறிவும் தோன்றாமல் பாவிப்பேன் • என்று சொல்லுகிறாயானால் அப்போது உனக்குக் கேவலாவத்தை யானேன் என்றும் தெரியாத பாழாம், பாவகத்தை பாவித்தல் தான் என்னில் பாவகமாம் — இப்படி பாவிப்பமே என்ற என்னையே சிவ

மென்று பாவிப்பன் என்னில் அதுவும் உன்னுடைய போதத்தின் பாவகம்தான் அல்லவோ, பின்னை எப்படி என்னில்? தன் அருளால் பாவிப்பது பரமில் பாழ்— ஞானசத்தி அநுக்கிரகத்தினாலே சிவஞானத்துள் தற்போதம் தோன்றாமல் அடங்கி ஞாதுரு ஞான ஞேயம் தோன்றாமல் சிவமாய் நின்று சிவானுபவமாகிப் பேரின்பத்தைப் பெறுவதே ஆன்மாவுக்குப் பிரயோசனமாகிய மோட்சமாம், நீ சொன்ன பாவகமெல்லாம் பிரயோசனமற்ற பாழ் என்றறிவாயாக என்றவாறு. ஆனால், என் அறிவுக்கு அறியப்படாமல் இரண்டற எப்படி நிற்பர் என்னில் இப்படி நிற்பர் என்று திட்டாந்தமிட்டு உணர்த்துகிறார் என்பது ஓர் உரை,

**உதாரண வெண்பா :**

அறிய விரண்டல்ல னாங்கறிவு தன்னால்
அறியப் படானறிவி னுள்ளான் — அறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு.

(இ-ள்) அறிய இரண்டு அல்லன் — உன் அறிவினாலே சுட்டியறிகிறதற்குக் கர்த்தா இரண்டாயிருக்கிறவனுமல்லன், ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான் — அவ்விடத்திலே உன் அறிவினாலே சுட்டி அறியப்படுகிறவனுமல்லன், அறிவின் உள்ளான் — உன் அறிவுக்கறிவாயிருக்கிற கர்த்தா தான், அறிவுக்குக் காட்டாகி நின்றானை — அறிவுக்கு அறிவாய் நின்று காட்டிக்கொண்டு நிற்கிற கர்த்தாவை, அறியாதிருப்பானேன்? கண் அறியா மெய் என்ன — கண்ணை அறியாத அவயவங்களைப்போல,

காட்டாது அறிவறிந்து கண்டு — உன்னைப் பேதமாக இரண்டாகிக் காட்டாத அறிவை அறிந்து கண்டுகொள் வாயாக என்றவாறு.

இனி, அறிய இரண்டு அல்லன் — நீ அறிவதற்கு உனக்கு வேறாகி இரண்டாயிரான், ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான் அறிவின் உள்ளான் — ஆனதினால் உன் அறிவினால் சுட்டி அறியப்படான்: உன் அறிவுக்குள்ளே அறிவாய் நிற்பன், அறிவுக்குகாட்டாகி நின்றானை — அப்படி உனக்கு அறிவுக்கு அறிவாய் உயிர்க்குயிராய்ச் சகலமும் அறிவித்துக்கொண்டு நிற்கிற கர்த்தா உனக்குத் தோன்றாமல் நிற்கிறது எப்படி என்னில்? கண் அறியாமெய் என்ன காட்டாத அறிவு அறிந்து கண்டு — உன்னுடைய சரீரமாகிய கால் கை முதலான அவயவங்கள் உன் கண்ணானது காட்ட ஓர் இடத்துக் குழூமி அறிந்தும் நடந்தும் ஓடியும் பதார்த்தங்களிருக்கிற விடத்தை அறிந்து எடுத்து ஈந்தும் ஒருவனுடனே பேசியும் தொழிற் பட்டிருந்தவிடத்தும் அவையெல்லாம் உன் கண்ணை அறியாமல் இருப்பதுபோல கர்த்தாவினாலே செயற்பட்டிருக்கிற நீயும் கர்த்தாவை இவரென்று அறிந்து காட்டமாட்டாய் என்று அறிவாயாக என்றவாறு.

ஆனால், நீர் சொன்ன கண் கால் கை முதலான சரீரம் சடமல்லவோ? அப்படி நான் சடமல்லவே ஆனதினாலே என் அறிவு வேறே சிவனறிவு வேறே இரண்டாய்த் தோன்றக்காணோமே, ஓர் அறிவாயல்லவோ தோன்றுகிறது என்று சொல்ல இப்போது தேகத்துடனே கூடாமல் உன் அறிவை அடக்கிக் கர்த்தாவினுடைய அறிவே பிரகாசித்து நிலையாய் நிற்கிறது என்று உணர்த்துகிறது என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
அதுவென் றறியறிவு முண்டே — அதுவென்
றறிய விரண்டல்ல னங்கறிவு ணிற்றல்
அறியுமறி வேசிவமு மாம்.

(இ-ள்) அது என்னும் ஒன்று அன்று — அது இது என்று சுட்டியறிகிறதற்குக் கர்த்தா ஒன்றல்ல, அது அன்றி வேறே — அது அல்லாமலும் வேறே, அது என்று அறி அறிவும் உண்டே — அது இது என்று சுட்டியறிந்து வருகிற ஆன்மா ஒன்றுண்டே, அது என்று அறிய இரண்டல்லன் — ஆன்மாவினாலே சுட்டி யறிகிறதற்குக் கர்த்தா இரண்டாயிருக்கிறவனல்லன், ஆங்கு அறிவுள் நிற்றல் — அவ்விடத்திலே உன் அறிவுக்கறிவாயிருக்கிற கர்த்தாதான், அறியும் அறிவே சிவமும் ஆம் — கர்த்தாவையறிகிற அறிவே சிவமுமாம் என்றவாறு.

இனி, அது என்னும் ஒன்றன்று — அந்தச் சிவமானது அது இது சிவமென்று தேடி நிற்கிற உன்னறிவு ஆகாது, அது அன்றி வேறே — அப்படித் தேடுகிற அறிவையுடைய உனக்கு வேருயே இருக்கும், அது என்று அறி அறிவும் உண்டே — அது என்று தேடுகிற மட்டும் உன்னையும் புறம்பென்றே சொல்லப்படும், அது என்று அறிய இரண்டல்லன் — தற்போதம் ஒடுங்க நான் என்கிற உன்னை இழந்து சிவமாகியே நின்ருயானுல் உனக்கு அதுவென்று சுட்டியறிய இரண்டாயிரான், ஆங்கு அறிவுள் நிற்றல் — உன்னுடைய அறிவாகியே இரண்டற நிற்பன் அப்போது, அறியும் அறிவே சிவமும் ஆம் — அப்படி ஆன்மபோதம் தோன்ருமல் சிவாநுபவம் ஒன்றை

யும் அறிந்து நிற்கிற உன்னையே அந்தச் சிவமென்று சொல்லலாம் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஒருரை.

ஆறாஞ் சூத்திரம் சத்தாகிய பதியையும் அசத்தாகிய பாசத்தையும் பிரித்தறிவித்த கருத்து முற்றியது என்பது ஓர் உரை.

## ஆறாஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.

---

முன் சொன்ன ஐந்தாஞ் சூத்திர முடிவில் தத்துவ தெரிசனைப்பட்டு நின்ற சீடன் இந்த ஆறாஞ் சூத்திரம் கேட்ட முடிவில் தத்துவசுத்திபட்டுப் பாசத்தை வேறாகக் கண்டு நீங்கி முன்பு தேகமே தானாய்த் திரிவுபட்டு நின்றதுபோல, இப்போது பிரமமாகிய பதியே தானாகத் திரிவுபட்டுக் கடமுடைந்தாற் கடத்துக்குள் வளைபட்ட கடாகாசமும் எங்கும் வியாபகமாய் நிற்கிற ஆகாசமும் ஒன்றாய்த் தோன்றுவதுபோலத் தன்னைக் கண்டு நானே சகத்துக்கு வேறாய்ப் பரிபூரணமாய் நிற்கிற அகண்டப் பிரமமென்றும் எனக்கு வேறாய் நீர் சொல்லுகிற ஆன்மா இல்லையென்றும் முன் பிரமம் ஒன்று என்றே சொன்னவன் பாசமும் பதியும் என்று இரண்டு சாதியுண்டென்று உடன்பட்டுச் சொல்லக்கேட்ட ஆசாரியர் நீ அகண்டப் பிரமமாகிய சிவமல்ல: உன்னைத் தேகத்துக்கு வேறாய்க் காட்டினதுபோலப் பிரமத்துக்கு வேறாய்க் காட்டுகிறோம் என்று ஏழாஞ் சூத்திரம் உணர்த்துகிறார்.

## ஏழாஞ் சூத்திரம்

**யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராதலிற்**
**சத்தே யறியா தசத்தில தறியா**
**திருதிற னறிவுள திரண்டலா வான்மா.**

(இ-ள்) சத்து எதிர் ஆதலில் — சத்தாகிய சிவம் எதிர்த்தவிடத்து, யாவையும் சூனியம் — சர்வமும் நாசமாம், சத்தே அறியாது — சத்தாகிய சிவத்துக்குப் பொய்யைப் பொய்யென்று விசாரித்தறிய வேண்டுவதில்லை, அசத்து இலது அறியாது — அசத்தாகிய பாசம் சடமாகையினாலே ஒன்றையும் அறியமாட்டாது, இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா — சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பாசத்தையும் விசாரித்தறிந்து இந்த இரண்டும் அல்லாமல் நிற்கிறது ஆன்மாவாம் என்றவாறு.

— என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின் — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங்கிற்றோ எனின், மேலதற்கோர் புறநடை யுணர்த்துதல் நுதலிற்று. சத்தாகிய சிவத்துக்கும் அசத்தாகிய பாசத்துக்கும் அடுத்த சதசத்தாகிய ஆன்ம இலக்கணத்தையே சொல்லத் தொடங்கிற்று.

ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது என்றது – இவ்விடத்திலே சத்தாகிய சிவத்தின் முன்னே அசத்தாகிய பாசம் நில்லாதென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே? மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான் — மெய்யாகிய சத்தியத்தின் முன்னே பொய்யாகிய அசத்தியம் நில்லாது ஆகையினாலே சொன்னது.

இனி, என்பது சூத்திரம் என்னுதலிற்றோவெனின்? மேலதற்கோர் புறநடையுணர்த்துதல் நுதலிற்று. சத்தாகிய சிவத்தின் முன்பு அசத்தாகிய பாசமெல்லாம் எதிர் நில்லாததினால் அப்பாசத்தைப் பொய்யென்று கர்த்தா அறியவேண்டுவதில்லை. அந்தக் கர்த்தாவை அவர்முன் தோன்றாத சூனியமாகிய பாசம் அறியவேண்டுவதில்லை. ஆனதினால், இப்போது பாசத்தையும் சிவத்தையும் அறிவிக்க அறிகிற அறிவொன்றுண்டு. ஆகையால், அதுவே ஆன்மாவாகிய நீயாம்.

இதற்கு, முதற் சூரணி வருமாறு:

ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப்பிரகாசியாதென்றது மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான் இவ்விடத்திற் சத்தாகிய சிவத்தின் முன் அசத்தாகிய பாசம் பிரகாசித்துத் தோன்றாதென்று நாம் சொன்னது. எந்த ஏதுவினாலே? என்னில், மெய்யாகிய சத்தியத்தினிடத்திலே அசத்தியமாகிய பொய் அப்பிரகாசமாய் நிற்கிறதினால் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா:

அந்நிய மிலாமை யரற்கோன் றுணர்வின்றும்
அந்நியமி லானசத்தைக் காண்குவனேல் — அந்நியமாக்
காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று.

(இ-ள்) அந்நியம் இலாமை அரற்கு ஒன்று உணர்வின்றும் — ஆன்மாவுக்கு அந்நியமாயில்லாமல்

அநந்நியமாயிருக்கிற கர்த்தாவுக்கு ஒன்றை விசாரித்தறிய வேண்டுவதில்லை, அந்நியமிலான் அசத்தைக் காண்குவனேல் — அந்நியமில்லாமல் அநந்நியமாய் நிறைந்திருக்கின்ற கர்த்தா அசத்தாகிய பாசத்தைக் காணுமிடத்து, அந்நியமா காணான் — இரண்டாகக் காணான், அது எப்படிப்போல? கதிர் முன் இருள்போல — ஆதித்தன் முன்னே அந்தகாரம் நில்லாததுபோல, மாணா — பிள்ளாய்! அவன் முன் அசத்தின்மை மற்று — கர்த்தாவினுடைய சந்நிதானத்திலே அசத்தாகிய பாசம் நில்லாததும் இந்த முறைமைத்தாம் என்றவாறு.

இனி, அந்நியமிலாமை அரற்கு ஒன்று உணர்வின்றும் — கர்த்தா பிரபஞ்சத்துக்கு அந்நியமாயிராமல் அநந்நியமாய் நிற்றலால் பாசம் ஒன்று உண்டென்று நூதனமாய் அறியவேண்டுவதில்லை. ஆனால், அந்தப் பிரபஞ்சமாகிய பாசம் கர்த்தாவினிடத்திலே அந்நியமாயிருத்தலால் கர்த்தாவும் அறிந்து கூடியிருப்பன் என்னில், அந்நியமா காணான் — அப்படியிருந்தாலும் பாசத்தைக் கர்த்தா அறியவேண்டுவதில்லை. அதெப்படி? அவன் முன் கதிர் முன் இருள்போல — சூரியன் சந்நிதானத்திலே இருளானது அப்பிரகாசமாய்க் கிடந்தும் அந்த இருளைச் சூரியன் அறியாததுபோல, மாணா அசத்தின்மை மற்று — சீடனே! பாசத்தையும் கர்த்தா அறியாமலிருப்பது இப்படி என்று அறிவாயாக என்றவாறு என்பது ஒருரை.

இனி, அந்த அசத்தாகிய பாசம் கர்த்தாவை அறியமாட்டாது என்பதற்கு,

**இரண்டாஞ் சூரணி வருமாறு :**

இனி அசத்தினுக் குணர்வின்று என்றது. அசத்தாகிய பாசத்திற்கு அறிவில்லையென்று சொல்லிற்றே; அது எந்த ஏதுவினாலே? அதுதான் நிரூபிக்கில் இன்றாகலான் — அது மெய்தான், விசாரிக்குமிடத்து இல்லாதாகையினாலே சொன்னது.

இனி, இனி அசத்தினுக்கு உணர்வின்று என்றது அதுதான் நிரூபிக்கில் இன்றாகலான். அசத்தாகிய பாசம் சடம் ஆகையால் கர்த்தாவை அறியும் அறிவு அதற்கில்லை என்று நாம் சொன்னது. எந்த ஏதுவினாலென்னில், அப்பாசமாகிற பிரபஞ்சமெல்லாம் சிவஞானத்தினாலே தீர்க்கமாய் விசாரித்து நிரூபித்துப் பார்க்கில் இல்லாத பொய்யாய்த் தோன்றும் என்பதனால் என்று அறிவாயாக.

உதாரண வெண்பா :

பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின் — வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை
கண்டுணர்வா ரில்லதெனக் காண்.

(இ—ள்) பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு— அதிவேகமாய் ஊராநின்ற கானற்றேரைத் தண்ணீரென்று கருதி வருகிற அறிவில்லாதவனுக்கு, மற்று அணைந்த பேய்த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின் — மீளவும் பொருந்தப்பட்ட கானற்றேர் பொய்யாய்ப்போன முறைமை போல, வாய்த்ததனை — வாய்த்த தேகாதிப் பிரபஞ்சத்தை, கண்டு உணர்வார் இல்வழியில் காணும் அசத்தின்மை—மெய்யென்று காட்டியறிகிற பேர்களுக்கு

மெய்யாயிருக்கும், கண்டு உணர்வார் இல்லதெனக் காண் — பொய்யென்று சுட்டியறிகிற பேர்களுக்குப் பொய்யாயிருக்கும் என்றவாறு.

இனி, பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு — பேய்த்தேராகிய கானலைத் தண்ணீர் என்று கருதிக் குடிக்கச்சென்ற பேதைக்கு, மற்று அணைந்த பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின் — அவன் தீர்க்கமாய் விசாரித்தறிந்தபோது அது தண்ணீராகாமற் பொய்யாய்ப் போன முறைமைபோல, வாய்த்ததனை கண்டுணர்வார் இல்வழியில் காணும் அசத்து — இங்ஙனம் சொன்ன திட்டாந்தம்போலப் பிரமாதிகள் வாழ்க்கை முதலாகிய சகல பிரபஞ்சமும் பாசபந்திகளுக்கு மெய்போலக் காணும், இன்மை கண்டு உணர்வார் இல்லதெனக்காண்— பாச மயக்கமின்றிச் சிவஞானத்தினால் தீர்க்கமாய் விசாரித்தறிகிற நீ பிரமமல்ல ஆன்மா என்று அறி என்றவாறு என்பது ஓர் உரை.

இதற்கு மூன்றுஞ்சூரணி வருமாறு:

இனி, இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா என்றது — சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பாசத்தையும் விசாரித்தறிந்து இந்த இரண்டுமல்லாமல் நிற்கிறது ஆன்மாவென்று சொல்லிற்றே, அது எந்த ஏதுவினாலே? இவ்விரண்டினையும் அறிவதாய சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பாசத்தையும் விசாரித்தறிவதாய் உபதேசியாய் உபதேசிக்கப்படுவதாய் நின்ற அறிவு இரண்டின்பாலும் உளதாய் நிற்கிற அறிவு சத்தாகிய சிவத்தினிடத்திலேயும் அசத்தாகிய பாசத்தினிடத்திலேயும் அறிவாய் உள்ள அதுவே அவ்வான்மா

வாம் என்றது — உண்டாய் நிற்கிற அதுவே அவ்வான் மாவாம் என்று சொன்னது.

இனி, இனி இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா என்றது — இவ்விரண்டையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அறிவு இரண்டின்பாலும் உள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது.

இப்போது பாசத்தையும் பதியையும் நாம் அறிவிக்க உபதேசியாய் அவ்விரண்டின்பாலும் அதுவதுவாய் நின்று அறிகிற நீயே அவ்வான்மாவாம் என்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
அருவுருவ மன்றாகு முண்மை — அருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றேக்கு.

(இ-ள்) ஆய் இழையாய் — பெண்ணே! அரு உருவம் தான் அறிதல் ஆன்மா — அருவாகிய சிவத்தையும் உருவாகிய பாசத்தையும் விசாரித்தறிகிறது ஆன்மா, அருஉருவம் அன்றாகும் உண்மை — ஆன்மாவினுடைய சுபாவமோ அருவாகிய சிவமும் அல்ல உருவாகிய பாசமும் அல்ல, அருஉருவாய் — அருவாகிய சிவமாய்ச் சிவமல்லாமலும் உருவாகிய பாசமாய்ப் பாசமல்லாமலும், தோன்றி உடன் நில்லாது — தோன்றி எதிரிட்டு நில்லாது, தோன்றாது நில்லாது — அப்பிரகாசமாய் நிற்கிற பொருளுமல்ல, தோன்றல் — தோன்றி நிற்கிறது எப்படி

என்னில், மலர் மணம்போல் — பூவினிடத்திலே வாசனை பொருந்தியிருக்கிற முறைமைபோல, தொக்கு — சரீரத்தினிடத்திலே ஆன்மா பொருந்தியிருக்கிற முறைமை என்றவாறு.

இனி, அருவுருவம் தான் அறிதல் ஆயிழையாய் ஆன்மா — அருவ ஞானரூபமாகிய சிவத்தையும் உருவச் சடரூபமாகிய பாசத்தையும் நாம் அறிவிக்க அதுவதுவாய் நின்று அறிகிற நீயே பெண் தன்மையுடைய ஆன்மாவாம், அருவுருவம் அன்றாகும் உண்மை — உன்னுடைய உண்மையை விசாரிக்கில் நீ தனித்து நிற்கிறவனல்ல, சார்போதனைக் கூடின பொருளின் தன்மையாய் நிற்கிறவன் ஆனதினால் அதுவதுவாய் நின்றாலும் சிவனுமாகமாட்டாய் பாசமுமாகமாட்டாய். இது உன்னுடைய சுபாவமானாலும், அருவுருவாய்த் தோன்றியுடன் நில்லாது தோன்றாது நில்லாது — இப்போது நீ சிவத்துடனே கூடினால் உன் போதம் தோன்றாமல் சிவஞானத்துக்குள்ளே மறைபட்டுச் சிவத்துக்குக் கீழ்ப்பட்டு நிற்பாய்; பாசத்துடனே கூடினால் உன் போதம் பிரகாசித்து விளங்கப் பாசத்துக்கு மேலாய்த்தோன்றி நிற்பாய், தோன்றல் மலர் மணம்போல் தொக்கு — முன் தேகமே ஆன்மாவாமென்று தோன்றாமலிருந்த நீ இப்போது அரும்பிலே அடங்கி நின்ற வாசம் பருவம் முதிர்ந்து அலர்ந்தபோது மலருக்குள்ளது மேலாய் விளங்கி நிற்பதுபோல நீயும் பக்குவமிகுதியினாலே தேகாதிப்பிரபஞ்சத்துக்கு மேலாய் நிற்பாய்; இப்படி உன் போதமும் நீயும் நிற்கும் தன்மையை அறிவாய் என்றவாறு. ஆனால், இப்போது சத்தையும் அசத்தையும் அறிந்து சதசத்தாய் நிற்கிற நீ பிரமமல்ல ஆன்மாவே என்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசில் — அசத்துமலே
நீயறிந்து செய்வினைகள் நீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

(இ—ள்) மயக்கமது உற்றும் — பசி முதலாகிய வியாதிகளினாலே மயங்கியும், மருந்தில் தெளிந்தும் — அன்னம் முதலாகிய ஔடதங்களினாலே தெளிந்தும், பெயர்த்து உணர் நீ சத்தாகாய் — இப்படி மயங்கி அறிந்து வருகிற நீ சத்தாகிய சிவம் ஆகாய், பேசில் — சொல்லுமிடத்து, அசத்தும் அலே—அசத்தாகிய பாசமும் அல்லை, நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி — நீ ஆர்ச்சித்த வினைகளை நீயே அறிந்து புசிக்கவேண்டுமே அல்லாமல், வேறு அசத்து தான் அறிந்து துய்யாமை தான் — உனக்கு வேறாய் இருக்கிற பாசம் அறிந்து புசியாது என்றவாறு.

இனி, மயக்கம் அது உற்று மருந்தில் தெளிந்தும் — நீ இப்போதும் பசி நோய்களினால் மயங்கி வருந்தி மருந்தினாலும் அன்னத்தினாலும் தீர்ந்து தீர்ந்து தெளிகையினாலும், பெயர்த்து உணர்நீ சத்து ஆகாய் பேசில்—பெயர்ந்து பெயர்ந்து மறந்து நினைக்கையினாலும் நீ சத்தாகிய சிவம் ஆகமாட்டாய் பேசுமிடத்து, அசத்தும் அலே — அந்த அசத்தாகிய பாசமும் ஆகமாட்டாய், நீ அறிந்து செய் வினைகள் நீ அன்றி வேறு அசத்துத்தான் அறிந்து துய்யாமைதான்—நீ அறிந்து செய்த இரு வினைப்பயன்களை நீயே அறிந்து புசிப்பதன்றி உன்னையல்லாமல் அசத்தாகிய பாசம் அறிந்து புசியாது என்றறிவாயாக என்றவாறு.

முன் தானே பிரமம் என்று மயங்கிப் பேசினை சீடன் இப்போது பிரமம் என்கிற மயக்கம் நீங்கிப் பதி பசு பாசம் மூன்று சாதியும் நித்தியமாயுண்டு என்று உடன்பட்டு, இப்படி முப்பொருளையுந் தெரியாமல் மறைத்தது என்னை? மயக்கி அசத்தாகிய ஆணவமலம் கர்த்தாவைத் தொடாமல் என்னைப்பற்றி நின்றது எப்படி? அதற்கு இப்படியிருக்குமென்று திட்டாந்த மிட்டு உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாதல்
அஞ்ஞான முள்ள மணைதல்காண் — மெய்ஞ்ஞானம்
தானே யுளவன்றே தண்கடனீ ருப்புப்போல்
தானே யுளவுளவாய்த் தான்.

(இ—ள்) மெய்ஞ்ஞானம் தன்னில் விளையாது அசத்து — சிவஞானத்தினிடத்திலே அஞ்ஞானம் உண்டாகாது, ஆதல் — ஆகையினாலே, அந்த அஞ்ஞானம் எங்கே பொருந்தி நிற்கும் என்னில்? அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண் — அஞ்ஞானமோ ஆன்மாவைப் பொருந்தியிருக்கும் காண், அந்த அஞ்ஞானம் எப்போதுள்ளது? மெய்ஞ்ஞானம்தானே உளவன்றே — சிவஞானமுண்டானபொழுதே அஞ்ஞானமும் உண்டானது, அது பொருந்தி நிற்கிறது எப்படியென்னில்? தண்கடல் நீர் உப்புப்போல் தானே உள உளவாய்தான்—குளிர்மை பொருந்திய சமுத்திரத்தினிடத்திலே உப்பும் தண்ணீரும் பொருந்தி நிற்கிறதுபோல மலம் ஆன்மாவை மறைத்துக் கொண்டிருக்கிறதும் இந்த முறைமைத்தாம் என்றவாறு.

இனி, மெய்ஞ்ஞானந்தன்னில் விளையாது அசத்தாதல்—பதி பசு பாசம் முப்பொருளும் அநாதியிலே அத்துவிதமாயிருந்தாலும் மெய்ஞ்ஞான வடிவாகிய கர்த்தாவைப்பற்றி விளைந்து பாசம் பொருந்ாது, அஞ்ஞானம் உள்ளம் அணைதல் காண்—பற்றுங்குணத்தையுடைய ஆன்மாக்கள் அறிவையே பற்றி மறைத்து மயக்கும், மெய்ஞ்ஞானம் தானே உள அன்றே—இந்த அஞ்ஞானம் எப்போதுண்டானது என்னில்? மெய்ஞ்ஞான வடிவாகிய கர்த்தா உண்டான அன்றே உண்டானது, அன்று என்பது அநாதியென்றறிக. இப்படி முப்பொருளும் ஓரிடத்திலே நிற்பதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில்? தண் கடல் நீர் உப்புப்போல் தானே உளஉளவாய்த்தான்—குளிர்ச்சி பொருந்திய கடலும் தண்ணீரும் உப்பும் மூற்பிற்பாடில்லாமல் ஓரிடத்திற்றோன்றி உப்பு கடல் வெளியைப் பற்றாமல் தண்ணீர் வியாபகத்தையெல்லாம் பொருந்தி நிற்பதுபோல் என்று அறிவாயாக என்றவாறு.

ஏழாஞ்சூத்திரம் புறநடையுணர்த்தி ஆன்மாவுண்டென்று அறிவித்த கருத்து முற்றியது.

## ஏழாஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.

---

ஏழாஞ்சூத்திரங் கேட்ட முடிவில் ஆன்மரூபந் தோன்றக்கண்ட சீடனை இனி நீ சிவஞானத்தில் உன் போதச் செயலற ஒடுக்கி ஞேயத்திலழுந்திச் சிவாநுபவம் பெற்று நில் என்று சொல்ல, என் பாசத்தையெல்லாம் நீக்கித் தாய்போலஎன்னை உண்டாக்கின திருவருளுடனே கூடி நின்றாற் குற்றமுண்டு; என் போத சத்தியுடனே

கூடியே நின்று இன்பத்தைப் புசித்துக் களித்துச் சிவத்துக்கு வேருய் நிற்பனென்று சமப்பிரமவாதியாய்ப் பேச நீ பாசஞானத்தன்மையும், பசுஞானத்தன்மையும் பதிஞானத்தன்மையும் பகுத்தறியாமற் பேசுகிருய்; உன் போதம் பாசஞானத்துடனே கூடி விளங்கி உனக்குப் பழையபடி பிறப்பிறப்பையே உண்டுபண்ணும்; சிவஞானம் பிறப்பிறப்பையே நீக்கி மோட்சத்தைக்கொடுக்கும். ஆனதனுல், தாயைச்சேர்ந்த கைக்குழந்தைபோலத் திருவருள் வசப்பட்டுப் பக்குவநாயகிபோலக் கர்த்தாவைக் கூடி அநுபவிப்பதே மோட்சமென்று சொல்லக்கேட்டுச் சம்மதித்துத் தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம் இந்நான்கும் அறிந்து நீங்கி நின்மல சாக்கிரம் பிறந்து பரவசப்பட்டு மோட்ச தாகியாய் நிற்பது கண்டு முந்தின மும்மலத்தினுடைய வாதனை தீரும்படிக்கு நிருவாணதீட்சை பண்ணி விதிப்படி சுத்த பஞ்சாக்கரத்தை உபதேசித்துச் சாயுச்சிய மோட்சம் பெறும்படிக்கு உபதேசக்கிரமம் உணர்த்துகிருர். இதற்கு எட்டாஞ்சூத்திரம் வருமாறு என்பது ஓர் உரை.

## எட்டாஞ் சூத்திரம்

**ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்**
**டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே.**

ஐம்புல வேடரின் என்பதற் கந்நுவயம்; தவத்தினில் — முன்னே செய்யப்பட்ட சரியை கிரியா யோக முதிர்ச்சியினலே, தம் முதல் குருவும் ஆய் — தமக்கு முதன்மையாகிய கர்த்தாத்தானே ஆசாரிய மூர்த்தமாகத்

திருமேனி கொண்டு எழுந்தருளிவந்து, ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து என — பஞ்சேந்திரியங்களாகிய வேடரிடத்திலே மயங்கி வளர்ந்தாய் என்று, உணர்த்த— அறிவிக்க, விட்டு — பஞ்சேந்திரியங்களையும் தனக்கு வேறென்று விட்டு, அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே — அந்நியமில்லாமல் அநநியமாய் நிறைந்திருக்கிற கர்த்தாவினுடைய திருவடித்தாமரையைப் பொருந்துவன் என்றவாறு.

— என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின் — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங்கிற்றோ எனின், ஞானத்தினை உணர்த்தும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று — சிவஞானத்தில் அநுக்கிரகம் பண்ணுகிற முறைமையைச் சொல்லத் தொடங்கிற்று.

ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தால் ஞானம் நிகழும் என்றது. இவ்விடத்திலே இவ்வான்மாக்களுக்கு முன்னே செய்யப்பட்ட சரியை கிரியாயோக முதிர்ச்சியினாலே சிவஞானம் விளங்குமென்று சொல்லிற்றே, அது எந்த ஏதுவினாலே? மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி இ— மேலாகிய சரியை கிரியா யோகங்களைச் செய்தவிடத்து, நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது — நல்வழியாகிய மேலாகிய சிவ ஞானத்தை அறிவித்தல்லது, மோட்சத்தைக் கொடா ஆகலான் — மோட்சத்தைக் கொடாது ஆகையினாலே சொன்னது.

இனி, — என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின், ஞானத்தினை உணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

இந்தச் சூத்திரக்கருத்து ஐந்து வகையாய் அந்நிய சாதியாய் வேடரைப்போல நின்று சுரோத்திராதியாகிய ஐந்து இந்திரிய அறிவும் உன் அறிவாகிய பசுபோதத்தைத் தானாக மயக்கிச் சத்த பரிச ரூப ரச கந்தவடிவான ஐம்புலனையும் மெய்யென்று காட்டி மல ரூபமாய் நின்று இந்நாள்வரைக்கும் மயக்கிற்று. நீயும் சிவனாகிய இராச குமாரனாயிருந்தும் பிதாவை மறந்து குழந்தைப்பருவம் போன்ற அபக்குவ மயக்கத்தால் தாயாகிய திருவருளையும் விட்டுப் பிரிந்து பாசஞானமாகிய ஐம்புல ரூபமாய் நால் வகைச் சராயுசம் அண்டசம் சுவேதசம் உற்பீசமாகிய யோனிகளில் எழுவகைப் பேதமான எண்பத்து நான்கு நூறாயிரம் தேகபேதத்தான் மாறிமாறிப் பிறந்திறந்து காற்றாடி கொள்ளிவட்டம்போலச் சுற்றித்திரிந்து அளவில்லாத துன்பங்களைப் புசித்து அயர்ந்து கிடந்தாய். அநாதி தொடுத்து அந்தச் சிவசத்தியான திருவருளும் கிணற்றிலே தவறிவிழுந்த பிள்ளையையெடுக்க உடனே கூடவிழுந்த தாய்போல நீ பிறந்திறந்து சுற்றின இடமெல்லாம் கூடத் தொடர்ந்து திரிந்து பக்குவப்படுத்திப் பிறவி சாகரத்தை விட்டு எடுத்துவந்து பிதாவாகிய கர்த்தாவினிடத்திலே கூட்டின ஏதுவினாலே இப்போது அந்த ஞானசத்தி ரூபமாகிய கர்த்தாவும் ஞானாசாரியராய் எழுந்தருளியிருந்து தீட்சாக் கிரமத்தினாலே உன்னைச் சுத்திப்படுத்திச் சிவமாக்கி அநுக்கிரகம் பண்ணுகிற ஞானத்தினை நீ உணரும் முறைமையினை இந்தச்சூத்திரம் சொல்லத் தொடங்கிற்று என்று அறிவாயாக என்றவாறு.

இதற்கு முதற் சூரணி வருமாறு :

ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தால் ஞானம் நிகழும் என்றது. மேற்சரியை கிரியா யோகங்

களைச் செய்துழீஇ நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோட்சத்தைக் கொடா ஆகலான்.

முன் உன்னைப் பக்குவப்படுத்தி எடுத்ததென்று சொன்ன திரோதான சத்தியின் திருவருள் உபாயத்தி ஞலே சிவ புண்ணியங்களை உன்னைக்கொண்டு நாளடை விலே அபுத்திபூருவத்திலும் புத்திபூருவத்திலும் உபா யச்சரியையாதியிஞலும் செய்வித்து உன் அறிவிலே அந்தச் சத்திநிபாதம் ஒரு பங்கு மந்தமாய்ப் பதிந்தும் உண்மைச்சரியை செய்து முற்றின அளவில் ஒரு பங்கு மந்ததரமாய்ப் பதிந்தும் உண்மைக்கிரியை செய்து முற்றின அளவில் ஒரு பங்கு தீவிரமாய்ப் பதிந்தும் முன் னிருந்த சினந்தீர்ந்து அந்தத் திரோதான சத்தியே அப் போது கருணைத் திருவருள் வடிவாய் உன்னிடத்திலே பிரகாசித்து நின்றதிஞலே முன் அந்தச் சத்தி பதிந்த படியே உனக்கு இருவினையொப்பு மலபரிபாகமும் பிறந்து மோட்ச இச்சை உண்டானது. இனி உனக்கு முந்தின மலவாதனையெல்லாம் நாம் பண்ணின சட்சு தீட்சையிஞ லும், மந்திர தீட்சையிஞலும், பாவக தீட்சையிஞலும், யோக தீட்சையிஞலும், பரிச தீட்சையிஞலும் தீர்த்த நாம் சாத்திர தீட்சை அநுக்கிரகம் பண்ணுகிறும். அதஞலே உனக்கு ஞானம் பிரகாசித்து மோட்சத்தைப் பெறும் தன்மை உண்டாமென்று அறிவாயாக என்ற வாறு என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத் — தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்ருர்சூழ் சொல்லுமாங் கண்டு.

(இ-ள்) தவம் செய்தார் என்றும் — எப்பொழுதும் சரியை கிரியா யோகங்களைச் செய்தபேர்கள், தவலோகம் சார்ந்து – அதற்கேற்ற சாலோக சாமீப சாரூபம் என்னும் பதமுத்திகளைப் பொருந்தி, பவம் செய்து பற்றறுப்பாராக — ஒரு செனனத்தை எடுத்துப் பிறப்பை நீக்கிக்கொள்ளுவாராக, தவம் செய்த நல் சார்பில் வந்து உதித்து—நல்ல தவத்தைச் செய்கிற குலத்திலே பிறந்து, ஞானத்தை நண்ணுதலே — சிவ ஞானத்தைப் பொருந்துகிற முறைமையை, கற்றூர் சூழ் சொல்லுமாம் கண்டு — வேதாகமங்களை ஓதியுணர்ந்த அறிவான் மிக்க ஞாதாக்கள் கண்டு திருவுளம்பற்றுவார்கள் என்றவாறு.

சரியை கிரியா யோகங்களை அநுட்டித்து மோட்சத்தை அடையவேண்டுமோ? எக்ஞாதி கன்மங்களைச் செய்து மோட்சத்தை அடைவேன் என்னில்,

இனித், தவஞ்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து — முன் சொன்ன சிவபுண்ணியங்களைச் செய்த ஆன்மாக்கள் சுத்தமாயா புவனமாகிய தவலோகங்களிற் சாலோக சாமீப சாரூபமென்னும் பதமுத்திகளில் அடைந்து இச்சையுள்ள மட்டும் அங்குள்ள சுத்த போகங்களைப் புசித்து, பவம் செய்து பற்றறுப்பாராக — அந்தச் சுத்த மாயா போகத்திலும் வெறுப்பு வந்து பூமியிலே பிறந்து பற்றும்படிக்கு, தவம்செய்த நல்சார்பில் வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலே — தவத்துக்கு உரித்தான நல்ல சார்புகளிலே வந்து பிறந்து பிறந்து கர்த்தாவினுடைய அநுக்கிரகத்தினாலே சிவஞானத்தைப் பெற்றுச் சாயுச்சிய மோட்சத்தைப் பெறுமென்று, கற்றூர்சூழ் சொல்லுமாம் கண்டு — மகாத்மாக்கள் கற்றறியப்பட்ட சிவாகமங்களெல்லாம் சொல்லும் என்று அறிவாயாக என்றவாறு.

சிவபுண்ணிய மிகுதியினாலே மோட்சத்தைப் பெறுவதல்லது தானங்கள், யாகங்கள், தீர்த்தங்கள், ஆச்சிரமங்கள், தவங்கள், சாந்திகள், விரதங்கள், கன்மயோகங்கள் முதலானவை செய்தால் ஞானத்தைப் பெறப்படாதோ? என்னில், அவைகளும் சிவனை நோக்கிச் செய்தால் சிவபுண்ணியமாய் வந்துகூடும். சிவனை மறந்து செய்தாற் பசுபுண்ணியமாய்ச் சுவர்க்க முதலாகிய அசுத்த மாயா போகத்துக்கு ஏதுவாம்; ஞானத்துக்கு ஏதுவாகாது என்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும்
இசைத்து வருவினையி லின்பம் — இசைத்த
இருவினை யொப்பி லிறப்பில் தவத்தான்
மருவுவனு ஞானத்தை வந்து.

(இ—ள்) இசைத்து வருவினையில் இன்பம் — நீ சொல்லுகிற எக்ஞாதி கன்மங்களினாலே வருகிற இன்பம், பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் — பசித்தவன் புசித்து மீளவும் பசிக்கிறதற்குச்சமானம், இசைத்த இருவினை ஒப்பில் — சொல்லப்பட்ட புண்ணியபாவம் இரண்டும் ஒத்தவிடத்து, இறப்பில் தவத்தால் — கெடாத சரியை கிரியா யோக முதிர்ச்சியினாலே, மருவுவன் ஆம் ஞானத்தை வந்து — சிவஞானத்தை வந்து பொருந்துவன் என்றவாறு.

இனி, இவ்வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும் என்றது — இங்ஙனம் சொல்லி

வருகிற ஆன்மாக்களுக்குத் தமக்கு முதன்மையாகிய கர்த்தா தானே ஆசாரிய மூர்த்தமாய்த் திருமேனி கொண்டெழுந்தருளி வந்து அநுக்கிரகம் பண்ணுவ ரென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே? அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலால் — அந்தக் கர்த்தா அந்நியமில்லாமல் அநந்நியமாய் அறிவே சொரூபமாய் நிற்கையினாலே சொன்னது.

இனி, பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் இசைத்து வருவினையில் இன்பம் — பசியினால் நிறைய உண்டவனுக்குத் திரும்பவும் பசி உண்டாவதுபோலப் பசு புண்ணியங்களைச் செய்தபேர்கள் சுவர்க்காதி போகத்தை அடைந்து கொஞ்சநாள் இருந்து புசித்துத் தொலைந்தவுடனே திரும்பவும் பிறந்து பாவத்தைச் செய்யாமல் வருத்தப்பட்டுப் புண்ணியங்களைச் செய்து பெறுவதன்றி மற்றப்படி அதுவுங்கிடையாது. ஆனதினால் பசு புண்ணியம் ஞானத்துக்கு ஏதுவல்ல. மிசைத்த இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தான் மருவுவன்ஆம் ஞானத்தை வந்து—ஆனதினாலே அந்தப் பசு புண்ணியத்தினால் உண்டாகிற சுவர்க்காதி போகங்களையும் பாவ பலனாகிய நரகவாதனைபோலக் காணுகிற இருவினை யொப்புப்பிறந்து இறவாத சிவபுண்ணிய மிகுதியினாலே சிவஞானத்தைப் பெறுவதன்றி மற்றப்படி கூடாது என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

இங்ஙனம் சொன்னபடி சிவபுண்ணிய முதிர்ச்சியையுடைய ஆன்மாக்களுக்கே கர்த்தா ஞானாசாரிய ரூபமாய்த் திருமேனிகொண்டு எழுந்தருளி வந்து ஞானத்தை அறிவித்து மோட்சத்தைக் கொடுப்பர் என்று உணர்த்துகிறார்.

இதற்கு, **இரண்டாஞ் சூரணி** வருமாறு :

*இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்றது: அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான். இப்படிச் சிவ புண்ணிய முதிர்ச்சியால் பக்குவமான ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம் பண்ணி இரட்சிக்க உயிர்க்குயிராய் அவர்கள் சரியை கிரியா யோகப் பணிவிடையை ஏற்றுக் கொண்டு நின்ற முதலாகிய கர்த்தாவே ஞானசாரியராய்த் திருமேனி கொண்டு எழுந்தருளின தென்று நாம் சொன்னது, எந்த ஏதுவினுல் என்னில்? அவன் அந்நிய மின்றி ஞானப்பிரகாச சொரூபியாய் அவர்கள் உள்ளத் திலே பிரகாசித்து நின்று பிறவிக்கிலேசத்தினுல் அவர்கள் உயிர்படும் துன்பமெல்லாம் அறிந்த கருணை மிகுதியினுல் இரங்கி அந்தக் கிலேசம் தீர்ப்பதற்காக வந்ததென்று அறிவாயாக என்பது ஓர் உரை.*

**உதாரண வெண்பா :**

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய் — மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.

*(இ-ள்) மெய்ஞ்ஞானம் தானே விளையும் விஞ் ஞான கலர்க்கு — ஆணவமலத்தினையுடைய விஞ்ஞான கலருக்கு அறிவுக்கறிவாய் நின்று அந்த ஆணவமலத்தை நீக்கி ஞானத்தை அநுக்கிரகம் பண்ணி மோட்சத்தை அடைவிப்பன், அன்றிப் பிரளயாகலருக்கு முன் உணர்த் தும் தான் குருவாய் முன் — ஆணவமலத்தையும் கன்ம*

மலத்தையுமுடைய பிரளயாகலருக்கு அவர்களைப்போலே மானும் மழுவும் சதுர்ப்புயமும் காளகண்டமும் திரிநேத்திரமுமாக எழுந்தருளிவந்து ஆணவமலத்தினையும் கன்மமலத்தினையும் நீக்கிச் சிவஞானத்தை அநுக்கிரகம் பண்ணி மோட்சத்தை அடைவிப்பன், அஞ்ஞான அசகலர்க்கு அ குருவாய் மெய்ஞ்ஞானம் பின் உணர்த்தும்— ஆணவம் மாயை காமியம் என்னும் மூன்று மலத்தினையுமுடைய சகலர்க்கு அவர்களைப்போல மானிடச்சட்டை சாத்திக்கொண்டு ஆசாரிய மூர்த்தமாய் எழுந்தருளிவந்து மும்மலங்களையும் நீக்கி ஞானத்தை அநுக்கிரகம்பண்ணி மோட்சத்தை அடைவிப்பன் என்றவாறு.

இனி, மெய்ஞ்ஞானம் தானே விளையும் விஞ்ஞானகலர்க்கு — அநாதியிலே உள்ள மூவகை ஆன்மாக்களில் ஆணவமலம் ஒன்றையும் உடைய விஞ்ஞானகலரில் பக்குவான்மாக்களுக்கு உள்ளே ஞானவடிவாகத் தோன்றி நின்று அநுக்கிரகித்து ஒரு மலத்தையும் போக்கி இரட்சிக்கும், அன்றி, பிரளயாகலருக்கு முன் உணர்த்தும் தான் குருவாய் முன் — அவர்க்கு அல்லாமல் ஆணவ கன்மம் இரண்டு மலத்தையுமுடைய பிரளயாகலரில் பக்குவான்மாக்களுக்கு மானும் மழுவும் சதுர்ப்புயமும் காளகண்டமும் திரிநேத்திரமும் உடைய திருமேனி கொண்டு முன்னின்று இரண்டு மலத்தையும் போக்கி இரட்சிக்கும், மெய்ஞ்ஞானம் அஞ்ஞான அசகலர்க்கு அ குருவாய் பின் உணர்த்தும் — ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலத்தையுமுடைய சகலரில் பக்குவான்மாக்களுக்கு மானைக் காட்டி மானைப் பிடிப்பது போலத் திபக உருவாய் மானிடச்சட்டை சாத்திக் கொண்டு வந்து போதித்து மும்மலத்தையும் போக்கி இரட்சிக்கும் என்று அறிவாயாக என்றவாறு.

அந்தக் கர்த்தாவையின்றி ஆன்மாக்களில் கற்றுணர்ந்த பேர்கள் அறிவிக்கமாட்டார்களோ? என்னில், யான் எனது என்று தேகத்தையும் போகத்தையும் பற்றியிருக்கிற ஆன்மாக்களினாலேயும் அவர்கள் சொல்லியிருக்கிற பசு நூல்களினாலேயும் மலத்தை நீக்கி மோட்சம் கொடுக்கக்கூடாது. கர்த்தா மலந்தீர்ந்த முத்தான்மாக்களுடைய திருமேனியையே தம்முடைய திருமேனியாகக் கொண்டு எழுந்தருளி முன் ஆதியிலே தாம் உரைத்த வேதாகமத்தின் உண்மைகளை அனுக்கிரகம் பண்ணப் பெற்றுக்கொண்டவர்களே மோட்சத்துக்கு உரித்தானவர்கள் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைகள் — நெறியிற்
குறையுடைய சொற்கோள்ளார் கோள்பவத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கோள் பவர்க்கு.

(இ-ள்) அறிவிக்க அன்றி அறியா உளங்கள் — ஆன்மாக்கள் அறிவித்தாலல்லது அறியச் செய்யார்கள், செறியும் ஆம் முன் பின் குறைகள் — முன்னே விட்டதவக்குறையிலே பின் சென்று பொருந்தா நிற்பர்கள், நெறியில் — இந்த முறைமையிலே, குறை உடைய சொல் கொள்ளார்' — குறைந்த சொல்லைக் கொள்ளார்கள், கொள் பவத்தில் வீடு என் — எடுத்த செனனத்திலே மோட்சம் உண்டாம், குறைவு இல் சகன் கொள்

பவர்க்கு — எவ்விடத்திலும் நிறைந்திருக்கிற செகந்நாதனாகிய கர்த்தாவினுடைய வேதாகமங்களை ஓதியுணர்ந்து அறிவான்மிக்க ஞாதாக்களுக்கு என்றவாறு.

இனி, *அறிவிக்க அன்றி அறியா உளங்கள்* — ஆன்மாக்களெல்லாம் அறிவிக்க அறிகிறதல்லாமல் தானாய் ஒன்றை அறியமாட்டாது, *செறியுமாம் முன்பின் குறைகள்* — ஆன்மாக்கள் அறிந்ததுபோலச் சமயஞ் சாதித்துச் சிறிது நூல் பண்ணிப் போதிக்கிற சொல் முன்னொடு பின் மலைவாய் முற்றுப்படாமல் கேட்டபேரை மயக்குமல்லாமல் தெளிவிக்கமாட்டாது, *நெறியில் குறையுடைய சொல் கொள்ளார்* — ஆனதினாலே அபக்குவராயுள்ள அஞ்ஞானிகள் கற்றுக்கொண்டு மயங்கித் திரிகிற பசுநூற் குற்றச் சொற்களைப் பக்குவமுடைய மகாத்மாக்கள் நெறியல்லாத சொல்லென்று கொள்ளார்கள், *கொள் பவத்தில் வீடென் குறைவில் சகன் சூழ் கொள்பவர்க்கு* — ஆனதினாலே என்றும் குறைவில்லாத செகந்நாதன் அருளிச்செய்த பதிநூலாகிய சிவாகமஞானங்களை அந்தக் கர்த்தாவே பரம்பரையாய் ஞானாசாரியராய் எழுந்தருளிவந்து உபதேசிக்கச் சுருதி குருவாக்குச் சுவானுபவம் மூன்றும் ஒத்திருக்கக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடின பேர்களுக்கு இந்தச் செனனத்திலே தானே சாயுச்சிய மோட்சம் உண்டென்று நீயும் அறிந்து சொல்வாயாக என்றவாறு.

அருவமாய் மனம் வாக்குக் காயத்துக்கு எட்டாத ஞான சொரூபியாய் நிற்கிற கர்த்தா உருவமாய்த் திருமேனி கொண்டு வருவது எப்படி என்னில், கருணை மிகுதியினாலே திருமேனி கொள்ளுவரென்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபால்
நல்லா யுளவாமால் நீர்நிழல்போல் — இல்லா
அருவாகி நின்றானை யாரறிவார் தானே
உருவாகித் தோன்றானே லுற்று.

(இ—ள்) நல்லாய் — பெண்ணே ! இல்லா முலைப்பாலும் — முலையிலே இல்லாத முலைப்பாலும், கண்ணீரும்— கண்ணிலே இல்லாத கண்ணீரும், ஏந்திழை பால் — ஒரு பெண்ணிடத்திலே, உள ஆம் ஆல் — உருக்கத்தினாலே உண்டாகிறதுபோல, நீர் நிழல்போல — தண்ணீருக்குள் நிழல்போல, இல்லா அரு ஆகி நின்றானை — தோன்றாத் துணையாயிருக்கின்ற கர்த்தாவே, தானே உரு ஆகி தோன்றானேல் — அவன் தானே ஆசாரியமூர்த்தமாய்த் திருமேனிகொண்டு வாராதிருந்தானேயானால், ஆர் அறிவார்— ஆர்தான் அறியப்போகிறார், உற்று — பொருந்தி என்றவாறு.

இனி, இவ்வான்மாக்கள் ஐ உணர்வுகளால் மயங்கித் தம்மை உணரா என்றது. இங்ஙனம் சொல்லப்பட்ட ஆன்மாக்கள் பஞ்சேந்திரியங்களினாலே மயங்கித் தம்முடைய சுபாவத்தை அறியார்கள் என்று சொல்லிற்றே. அது எந்த ஏதுவினாலே ? அவை தாம் பளிங்கிலிட்ட வன்னம்போல்— தன்னைக் காட்டாமல் தன்னிடத்திலே பொருந்தியிருக்கிற பல வன்னங்களையும் காட்டிக் கொண்டு நிற்கிற படிகத்தைப்போல, காட்டிற்றைக் காட்டி நிற்றலான்— ஆன்மாக்களும் பஞ்சேந்திரியங்கள் வழித்தாய் நிற்கையினாலே சொன்னது.

இனி, இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழை பால் நல்லாய் உளவாமால்—பெற்ற தாயினுடைய தேகத்தில் இன்ன இடத்தில் இருக்கிறதென்று காணப்படாத முலைப்பாலும் கண்ணீரும் பிள்ளையின்மேல் வைத்த கிருபை மிகுதியால் பிள்ளை பசிநோய் வருத்தந்தீர்க்க எப்படிச் சீக்கிரத்திலே கண்ணுக்குத் தெரிய உருவாய்த் தோன்றுவதோ அப்படிக் கர்த்தாவும் ஆன்மாக்களுடைய பிறவித்துன்பம் தீர்ப்பதற்கு இரங்கிக் கிருதகடினம் போலத் திருமேனிகொண்டு எழுந்தருளுவார், நீர் நிழல் போல் இல்லாது அருவாகி நின்றானை ஆர் அறிவார் தானே உரு ஆகி தோன்றானேல் உற்று — தண்ணீருடைய நிழல் தண்ணீர் நிற்கிற பூமியில் தோன்றாமல் எப்படி ஒளித்து நிற்கிறதோ ? அப்படி ஆன்மாக்கள்தோறும் தோன்றாமல் நிற்கிற அருவமாகிய கர்த்தாவை யார்தான் அறியப் போகிறார் ? அவர் தானே திருவுளமாகி ஞானாசாரியரூபமாய் எழுந்தருளிவந்து இரட்சியாதேபோனால் என்றவாறு என்பது ஓர் உரை.

இப்படித் திருமேனித்தெளிவு உணர்த்தக் கேட்டு உணர்ந்த சீடன் ஐயம் திரிபுஅறத் தேறிநிற்கிற அன்பு மிகுதி கண்டு பாசஞானத்தை நீக்கிச் சிவஞானத்துட் சேர்ந்து அடங்கி நிற்கும் முறைமை உணர்த்துகிறார்.

இதற்கு, மூன்றாஞ் சூரணி வருமாறு :

இனி இவ்வான்மா ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை உணரா என்றது; அவை தாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான். இந்நாள்வரைக்கும் உன் அறிவு பாசஞானமாகிய ஐந்து இந்திரிய அறிவுடனே கூடி அது அதுவாய் மயங்கிச்

சத்தாதி விடயவடிவான தேகாதிப்பிரபஞ்சத்தைப்பற்றி நிற்கிறது; அது எப்படிப்போல? என்னில், பளிங்கு ஒளியானது பஞ்சவன்னத்தைப்பற்றிப் பஞ்சவன்னத்தை யுடைய பதார்த்தவடிவாய்த் தோன்றுவதுபோல. ஆனதினால் உன்னுடைய சுபாவவடிவை அறியாமல் நிற்கிறாய். இனி, மத்தியான காலத்தில் பஞ்சவன்னத்தை விட்டுச் சூரியனைப்பற்றி நிற்கும் படிகவொளிபோல உன் அறிவு பஞ்சேந்திரிய உணர்வை விட்டுச் சிவஞானத்திற் செயலற ஒடுங்கி அந்தச் சிவஞான வடிவாய் நின்று கண்டால் உடனிகழ்ச்சியாய்ச் சிவரூபத்துக்குள்ளே உன்னைத் தெரிசித்து அறிவாய் என்றவாறு என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து — பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யாய் மெய்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு. [கண்டான்

(இ-ள்) பல் நிறம் காட்டும் படிகம்போல் — தன்னைக் காட்டாமல் தன்னிடத்திலே பொருந்தியிருக்கிற பல வன்னங்களையும் காட்டிக்கொண்டு நிற்கிற படிகத்தைப்போல, இந்திரியம் தன் நிறமே காட்டும் தகை நினைந்து — ஆன்மாவும் பஞ்சேந்திரியங்களினாலே மயங்கி நிற்கிற முறைமையை விசாரித்தறிந்து, பல் நிறத்து பொய் புலனை வேறு உணர்ந்து — பல வன்னங்களையும் போன்றிருக்கிற பொய்யாகிய பஞ்சேந்திரியங்களையும் தனக்கு வேறு என்று அறிந்து, பொய் பொய்யாய் — அசத்தியத்தை அசத்தியமாகவே, மெய்கண்டான் — சத்தியத்தைத் தெரிசித்தவன் விசாரித்தறியுமிடத்து,

மெய்ப்பொருட்கு தைவம் ஆம் — மெய்ப்பொருளாகிய கர்த்தாவுக்கு அடிமையாம், வேறு — அந்தப் பஞ்சேந்திரியங்களுக்கு ஆன்மா வேறு என்றவாறு.

இனி, இவ்வான்மா — இங்ஙனம் சொல்லப்பட்ட ஆன்மா, தன்னை இந்திரியத்து வேருவான் காணவே — பஞ்சேந்திரியங்களைத் தனக்கு வேறென்று அறிந்து விட்டு நீங்கவே, தமது முதல் சீபாதத்தை அணையும் என்றது — தமக்கு முதன்மையாகிய கர்த்தாவினுடைய திருவடித் தாமரையைப் பொருந்தும்; என்று சொல்லிற்றே, அது எந்த ஏதுவினாலே? ஊசல் கயிறு அற்றால் தாய் தரையே ஆம் துணையால் — ஆடுகின்ற ஊசல் கயிறற்றவிடத்துப் பூமி ஆதாரம் ஆனதுபோல் ஆன்மா பஞ்சேந்திரியங்களை நீங்கவே கர்த்தாவினுடைய திருவடித் தாமரையைப் பொருந்தும் என்று சொன்னது.

இனி, பன்னிறம் காட்டும் படிகம்போல் இந்திரியம் தன்னிறமே காட்டும் தகை நினைந்து — பஞ்ச வன்னங்களுடனே கூடி அந்த இந்திரிய வடிவாய்ப் பஞ்சபுலனாகிய தேகாதிப்பிரபஞ்சத்தைப்பற்றி மயங்கி நிற்கிரும் என்று அறிந்து, பல் நிறத்து பொய்ப்புலனை வேறு உணர்ந்து—அந்த ஐந்து இந்திரிய உணர்வையும் அதனைப் பற்றி யான் எனது என்று மயங்கி நின்றே சத்தாதி விடயமான தேகாதிப் பிரபஞ்சத்தையும் வேறென்று அறிந்து நீங்கி, பொய் பொய்யாய் மெய்கண்டான் — அந்தப் பஞ்சேந்திரிய மயமாய் மயங்காமல் அதனால் பற்றி நிற்கிற சத்தாதி விடயமான பிரபஞ்சத்தையும் வெறும் பொய் என்று கண்டு நீங்கி மெய்யாகிய சிவஞானத்தைக் கண்டு கூடி நிற்பையே யானால், மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு — அப்படிக் கண்டவுடனே அந்த மெய்ப்

பொருளாகிய கர்த்தாவுக்கு நீங்காத அடிமையாய்ப் போவாய்; உன்னைப்பற்றி நின்ற பாசமெல்லாம் வேறு பட்டு நீங்கிப்போம் என்று அறிவாயாக என்றவாறு.

இந்த உபதேசப்படிக்கு ஆத்மபோதம் தோன்றா மல் சிவஞானமாய் ஒடுங்கினால் வேறே சாதகம் தேவை யில்லை என்று உணர்த்துகிறார்.

இதற்கு, நாலாஞ்சூரணி வருமாறு :

இனி இவ்வான்மா தன்னை இந்திரியத்துக்கு வேறா வான் காணவே தமது முதல் ஸ்ரீபாதத்தை அணையும் என்றது; ஊசல் கயிறற்றால் தாய் தரையே ஆம் துணை யால் — இங்ஙனம் உபதேசித்தபடிக்கு ஆன்மா தன்னை இந்திரியத்துக்கு வேறாய் நிற்பது அநுபவமாய்க் கண்டு நிற்குமேயானால் தனக்கு முதலாகிய கர்த்தாவினுடைய ஸ்ரீபாதகமலமாகிய திருவருளைப்பெற்று மோட்சத்தை யடையும். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில்? ஐந்து ஊசற் கயிற்றிலே மாறி மாறி ஏறியிருந்து அலைந்து கொண்டிருந்த ஒருவன் அந்த ஊசற் கயிறு அற்றவுடனே எப்படித் தப்பாமல் விழுந்து பூமியில் அசையாமற் கிடப் பனோ அப்படிப் பஞ்சேந்திரிய மயக்கமற்று வேறாய் ஆன்மா நீங்கினவுடனே அந்தப் பூமிபோல் தாயாகிய திருவருள் உன்னைத் தாங்கிக்கொள்ளப் பிறந்து இறந்து திரிந்தலைகிற துன்பமெல்லாம் நீங்கிச் சுகம் பெற்றுக் கிடப்பாய் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து — சிறைவிட்

டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

(இ-ள்) சிறை செய்ய நின்ற செழும் புனலின் — அணைத்தேக்கப்பட்டு நின்ற வளப்பத்தையுடைய தண்ணீ ரானது, சிறைவிட்டு அலைகடலில் சென்று அடங்குமாறு போல் — அணையை முறித்துவிட்ட விடத்து ஆரவாரத் தையுடைய சமுத்திரத்திலே போய் விழுந்து மீளவும் ஆற்றுவழிச் செல்லாத தண்ணீரைப்போல, உள்ளம் சிறைசெய் புலன் உணர்வில் தீர்ந்து — பஞ்சேந்திரியங் களினாலே கட்டுப்பட்டு நிற்கிற ஆன்மாவும் பஞ்சேந்திரி யங்களையும் தனக்கு வேறென்று அறிந்துவிட்டு நீங்கின இடத்து, மீளாது உலைவில் அரன் பாதத்தை உற்று — போக்குவரவில்லாத கர்த்தாவினுடைய திருவடித்தாம ரையைப் பொருந்தி மீளவும் பஞ்சேந்திரியங்கள் வழித் திலே வாரான் என்றவாறு.

இனி, சிறை செய்ய நின்ற செழும்புனலின் — ஒரு குளத்திலே சிறைப்படுத்தக் கட்டுண்டு நின்ற தண்ணீர் போல, உள்ளம் சிறைசெய் புலன் உணர்வில் தீர்ந்து — உன்னுடைய ஆன்மபோதமானது பாசஞானமாகிய பஞ்சேந்திரிய வடிவிற் கட்டுண்டு தியங்கி நின்றது, சிறை விட்டு அலைகடலில் சென்று அடங்குமாறு போல — அந்தக் குளத்திற் கட்டுண்டு நின்ற தண்ணீரை ஒருவர் உடைத்துவிட அது எப்படிக் கரையை இடித்து இடம் பண்ணிக்கொண்டு விரைவில் ஓடி அலையையுடைய கடலிற் சென்று கூடிக் கலந்து திரும்பி அந்தக்குளத்துக்கு ஏறுமலே அடங்கி நிற்குமோ அப்படி, மீளாது உலகில் அரன் பாதத்தை உற்று — இப்போது நாம் உணர்த்தின சிவஞான உபதேசம் அந்தப் பஞ்சேந்திரியமான பாச

ஞானக்கரையை இடித்துவிட்ட வழியே நீயும் புடை பெயர்ந்து அதிவேகத்துடனே இடித்துத்தள்ளிக்கொண்டு பரிபூரணமாகிய கர்த்தாவினுடைய சீபாத கமலத்தைப் பெற்று வியாபகமாய் அசையாமல் ஒடுங்கி நின்றுயானல் உன் போதம் திரும்பவந்து அந்த ஐந்து இந்திரிய ஞானத் திற் கட்டுண்டு மயங்காது என்று அறிவாயாக என்ற வாறு.

இந்த உபதேசப்படி போதம் அடங்கித் திருத்தி பிறவாமற் கர்த்தா எல்லா ஆன்மாவினும் உயிர்க் குயிராய் நிறைந்திருக்கிறவரை இப்போது நூதனமாய்க் கூடி அடங்கி நிற்கச் சொன்னதென்ன? என்று கேட்க, நீ இந்நாள்வரைக்கும் கர்த்தாவினுடைய வடிவையறிந்து கூடி நின்றவனல்ல என்று உணர்த்துகிறுர் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

எவ்வுருவுந் தானென்னி னெய்துவா ரில்லைதாள்
இவ்வுருவின் வேறே லிறையல்லன் — எவ்வுருவும்
கண்போ லவயவங்கள் காணுவக் கண்ணில்லார்
கண்பேறே காணுக் கழல்.

(இ-ள்) எ உருவும் தான் என்னில் — எல்லா வுருக்களும் கர்த்தாத் தானேயாம் என்று சொல்லுவா யானல், எய்துவார் இல்லை தாள் — கர்த்தாவினுடைய திருவடித்தாமரையைப் பொருந்துவாரில்லை, இ உருவின் வேறேல் இறை அல்லன் — இந்த உருக்களுக்கெல்லாம் வேருயிருப்பான் என்றுல் அவன் கர்த்தா அல்லன், எ உருவும் — சர்வான்மாக்களிடத்திலேயும் பொருந்தியிருக்

கிறது எப்படி ? என்றால், உடலும் உயிரும்போல; அப்படி உடலும் உயிரும்போலிருக்கிற கர்த்தாவை அறியாதிருப்பானேன் ? கண்போல் அவயவங்கள் காணு— கண்ணைப்போலே மற்றை அவயவங்கள் காணச்செய்யாது; ஆனால், அறிகிறது எப்படி என்னில் ? அ கண் இல்லார் கண் பேறே காணு கழல் — கண்ணில்லாத அந்தகன் கண் பெற்றவிடத்துக் கண் ஆதித்தனைக் கூடினது போல மலத்திலே தடைப்பட்ட ஆன்மா மலம் நீங்கின விடத்துக் கர்த்தாவினுடைய திருவடித் தாமரையைப் பொருந்தினதும் இந்த முறைமைத்தாம் என்றவாறு.

இனி, எ உருவும்தான் என்னில் எய்துவார் இல்லைதாள் — எல்லா ஆன்மாக்களும் கர்த்தாவினுடைய பாதத்திலே தானல்லவோ நிற்கிறது; நூதனமாய்க்கூடச் சொல்லுவானேன் என்று நீ கேட்கிறாயானால் சரியை கிரியா யோகங்களைச் செய்து ஞானத்தைப்பெறும் ஆன்மாக்கள் இல்லையாகவேண்டும்; இ உருவின் வேறேல் இறை அல்லன் — ஆனால் கர்த்தா ஆன்மாக்களுக்கு வேறாயிருக்கிறவரோ என்று நீ கேட்கிறாய்; ஆனால் அவர் பரிபூரணராய் எங்கும் நிறைந்து நிற்கிற கர்த்தாவென்று சொல்லுவதில்லையாம், எ உருவும் கண்போல் அவயவங்கள் காணு — ஆனால் கூடி நிற்கச்செய்தேயும் ஆன்மாக்களுக்குத்தோன்றாமல் நிற்பது எப்படி ? என்னில் தேகத்தில் உண்டான அவயவங்களுக்கெல்லாம் சூரியகிரணம் எங்கும் நிறைந்து நின்றும் காணுந்தன்மையில்லை; கண்ணுக்கே காணுந்தன்மை உண்டானதுபோல என்று அறிவாயாக. ஆனால் அவயவங்கள் போலவும் கண்போலவும் ஆன்மாக்கள் இரண்டு விதமாய் இருக்குமோ ? என்னில், அ கண் இல்லார் கண் பேறே காணு கழல் — பிறக்கச் செய்தே படலத்தினால் மறைபட்டுத்தோன்றின கண்ணும்

அவயவங்கள்போலக் காணுந் தன்மையின்றிக் கிடக்கும்; படலம் தீர்ந்த கண்ணே காணுந் தன்மையும் சூரிய னுடனே கலந்துகொண்டு நிற்கும் தன்மையும் பெறும்; அதுபோல அநாதியிலே ஆணவமலத்துடனே கூடத் தோன்றி அதனால் மறைபட்டுக் கிடக்கிற உயிர்களுக் கெல்லாம் தன்னையும் அறியக்கூடாது; அந்த ஆணவ மலத்தையும் அறியக்கூடாது; எங்கும் பரிபூரணனாய் ஞானப்பிரகாசனாய் நிற்கிற கர்த்தாவையும் அறியக் கூடாது; படலம் நீங்கின கண்போல் ஆணவமலம் நீங்கின உயிருக்கே பாசத்தையும் ஆன்மாவையும் கர்த்தா வையும் அறிந்து கர்த்தாவுடனே கலந்துகொண்டு நிற்கும் தன்மை உண்டாம். ஆனதினாலே நீயும் நாம் அறிவித்த சிவஞானத்தினாலே திரிபதார்த்தத்தினுடைய உண்மை களை அறிந்து செயலறச் சிவஞானத்தில் ஒடுங்கி நில் என்றவாறு.

இப்படி அநுக்கிரகம் பண்ணக் கேட்ட சீடன் இப்போது என்னுடைய பசுபோதமாகிய இச்சா ஞானக் கிரியை ஒடுங்கச் சிவனுடைய இச்சா ஞானக் கிரியா சொரூபமாய்ச் சிவமாய் நிற்கையால் எனக்குச் சர்வஞ் ஞத்துவமும் பஞ்சகிருத்தியத்துவமும் உண்டாகவேண்டு மே என்று கேட்க உன் அறிவு என்றும் சிற்றறிவு; சிவனுடைய அறிவு என்றும் பேரறிவு; நீ இப்போது சிவஞான வடிவாய் நின்றாலும் சிவஞானம் ஆகாய்; அந்தச் சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத்தியத்துவமும் உனக்கு உண்டாகாது. அது எப்படிப்போல என்னில், சூரியகிரணவொளியுடனே கூடிக் கலந்துகிடக்கும் கண் ணொளியானது சூரியனைப்போல இருளை நீக்குந் தொழி லும் எல்லாக் கண்ணுக்குங் காட்டுந்தொழிலும் பெறா மல் அடங்கிக்கிடக்குந் தன்மைபோல் என்று அறிவித்து

உனக்கு இன்னும் மலவாதனையும், ஆன்மபோத நிகழ்ச்சியும் தீரவில்லை. இனி, அவை தீருமாறு சொல்லுகிறோம் என்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

ஐம்போறியி னல்லையெனு மந்த தரசிவனை
ஐம்பொறியை விட்டங் கணைசகலன் — ஐம்பொறியின்
நீங்கானீர்ப் பாசிபோ னீங்கிமல கன்மம்வரின்
நீங்கானை நீங்கு நினைந்து.

(இ-ள்) ஐம்பொறியின் அல்லை எனும் அந்ததர — பஞ்சேந்திரியங்களிலே ஒன்றல்லாத அதிதீவிரதரசத்திநிபாதத்தையுடையவனே, ஐம்பொறியை விட்டு அங்கு — பஞ்சேந்திரியங்களையும் தனக்கு அந்நியமென்று விட்டு, சிவனை அணை சகலன் — கர்த்தாவினுடைய திருவடித் தாமரையைப் பொருந்தின ஆன்மாவானவன், ஐம்பொறியின் நீங்கான் — பஞ்சேந்திரியங்களிலேயும் பொருந்தான் சிவனையும் விட்டு நீங்கான், நீர்ப் பாசிபோல் நீங்கி மல கன்மம் வரின் — தண்ணீருக்குட் பாசிபோல மலமாயா கன்மங்கள் விட்டும் பற்றியும் வருமேயானால், நீங்கானை நீங்கு நினைந்து — உன்னை விட்டு நீங்காத கர்த்தாவை நீ நினைந்து நீங்கிக்கொள்வாயாக என்றவாறு.

இனி, ஐம்பொறியின் அல்லை எனும் அந்ததர — பஞ்சேந்திரிய அறிவுக்கு வேறானேன், இனி அவை ஆகேன் என்று சொன்ன தீவிர சத்திநி பாதத்தையுடைய பிள்ளாய்! சிவனை ஐம்பொறியை விட்டு அங்கு அணை சகலன் — நீ ஐம்பொறி அறிவுகளுக்கு வேறாய்ச் சிவஞானத்தைப் பெற்று நின்றாலும் முன் நெடுங்காலம் மும்மலத்துடனே

கூடி நின்ற சகலன் ஆகையால், ஐம்பொறியின் நீங்கான்—முந்தின மலப்பழக்க வாதனையினாலே ஐம்பொறியுடனே யுங்கூடின தேகாதிப்பிரபஞ்சத்தைக்குறித்து மயங்குவாய், நீர்ப்பாசிபோல் நீங்கி மல கன்மம் வரில் — தண்ணீரை மறைத்து நின்ற பாசியானது கல்லை விட்டெறிந்தபோது பரந்து வந்து தண்ணீரை மறைப்பதுபோலவும் முன் பழகின மும்மலவாதனை சாத்திரவிசாரம்பண்ணிச் சிவனை நினைந்து நின்றபோது உன்னை விட்டு நீங்கியும் நினையாதபோது உன்னை வந்து கூடி மறைத்து மயக்கி நிற்கும்படி மும்மல வாதனையுடனே கூடி மயங்காமல், நீங்கானை நீங்கு நினைந்து — உனக்கு உயிர்க்குயிராய் நிற்கிற கர்த்தாவை இடைவிடாமற் சாத்திரவிசாரத் துடனே அன்பு செய்து நினைந்து நீங்கிக்கொள்வாயாக என்றவாறு.

இந்த எட்டாஞ்சூத்திரம் சிவஞானத்தை உணருமுறைமை அறிவித்த கருத்து முற்றியது.

## எட்டாஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.

---

இந்தச் சூத்திர முடிவு ஆன்மதெரிசனையும் சிவனுடைய இச்சா ஞானக்கிரியா சொரூபமாகிய சிவரூபமும் உடனிகழ்ச்சியாய்த் தோன்றினது என்று அறிக. இவை அறிந்து நின்றவிடம் நின்மல சொப்பனமாம். இனி, நின்மல சுழுத்தியாவது முன் இந்தச்சூத்திரத்துள் நான் சிவரூபமாய் அடங்கினதால் எனக்குச் சிவனுடைய பஞ்சகிருத்தியத்தொழிலும் சர்வஞ்ஞத்துவமும் உண்டாகவேண்டுமென்று கேட்ட மயக்கமொன்றுமேயாம். ஆனதினாலே இந்தச் சுழுத்தியவத்தைக்குச் சூத்திரமுமில்லை; அதிலடங்குந் தசகாரியமுமில்லை என்று அறிக.

இங்ஙனம் பஞ்சகிருத்தியமும் சர்வஞ்ஞத்துவமும் உண்டாகவேண்டுமென்ற கெற்சிதம் நீங்கி நின்ற சீடனுக்குத் திருவருளாகிச் சிவதெரிசனை பண்ணியதில் ஆன்மா உடனிகழ்ச்சியாய் அடங்கி நின்று சுத்தியாகும் முறைமைக்கு உபாய சாதகமாகிய ஒன்பதாம் சூத்திரம் உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

## ஒன்பதாஞ் சூத்திரம்

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத்
தண்ணிழ லாம்பதி விதி யெண்ணுமஞ்
[செழுத்தே.

(இ-ள்) ஊனக்கண் பாசம் உணரா பதியை — பாசஞானத்தினாலும் பசுஞானத்தினாலும் கர்த்தாவை அறியப்போகாது, ஞான கண்ணினில் சிந்தை நாடி தண் நிழல் ஆம் பதி — சிவஞானத்தினிடமாகக் கர்த்தாவை விசாரித்து அறியவே தனக்குக் குளிர்ந்த நிழலாம் கர்த்தா, இத்தன்மை வாராதிருந்தால்; உராத் துனை தேர்த்து என பாசம் ஒருவதண் நிழல் ஆம் பதி — அதிவேகமாய் ஊராநிற்கிற கானற்றேர் போலத் தேகாதிப் பிரபஞ்சம் எல்லாம் பொய் என்று விட்டு நீங்கவே தனக்குக் குளிர்ந்த நிழலாம் கர்த்தா; இத்தன்மையும் வாராதிருந்தால், விதி எண்ணும் அஞ்செழுத்தே தண் நிழல் ஆம் பதி—விதிப்படி பஞ்சாக்கரத்தை உச்சரிக்கவே தனக்குக் குளிர்ந்த நிழலாம் கர்த்தா என்றவாறு.

— என்பது சூத்திரம் என்னுதலிற்றோ? எனின், இந்தச் சூத்திரம் என்னத்தைச்சொல்லத்தொடங்கிற்றோ எனின், ஆன்மசுத்திபண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று — ஆன்மாவைச் சுத்திபண்ணுகிற முறைமையைச் சொல்லத்தொடங்கிற்று.

ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க என்றது—இவ்விடத்திலே ஞானத்துக்கு முதன்மையாகிய கர்த்தாவைச் சிவஞானத்தினிடமாக விசாரித்தறிய வேண்டுமென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே?— அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான் — அந்தக் கர்த்தா மனவாக்குக்காயங்களுக்கு எட்டாமலிருக்கிற விடயமாய் நிற்கையினாலே சொன்னது.

இனி, — என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின், ஆன்மசுத்தி பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று. ஊனக்கண்ணாகிய பாசஞானம் பசுஞானம் சிவனை அறிவிக்கமாட்டாது; சிவஞானத்தினாலே சிவனை உயிர்க்குயிராய் நிற்கும் தன்மை தெரிசித்து தன் வசத்தழிந்து அந்தக்கர்த்தாவின் வசத்தாய் நிற்கவே கர்த்தாவினுடைய பாதமானது ஆன்மாவுக்குக் குளிர்ந்த நிழலாகும். அதுவன்றியும் ஓடும் தண்ணீர்போல் தோற்றும் பேய்த்தேரானது மெய்யாய் விசாரித்தபேருக்குப் பொய் எப்படி இல்லாமற் போகிறதோ அப்படிப்போல இந்தப் பூமியிலுள்ள வாழ்வும் சுவர்க்கங்களிலுள்ள வாழ்வும் மற்றப் பூதபேத யோனிகளின் தோற்றரவுகளும் அவையெல்லாம் சிவஞானத்துடனே கூடி நின்று பொய்யென்று கண்டு நிற்கவே அப்போதும் கர்த்தாவினுடைய பாதமானது ஆன்மாவுக்குக் குளிர்ந்த நிழலாகும். அதுவன்றியும் ஓடும் தண்ணீர்போல் தோற்றும் பேய்த்தேரானது மெய்யாய் விசாரித்தபேருக்குப் பொய் எப்படி இல்லாமற்

போகிறதோ அப்படிப்போல இந்தப் பூமியிலுள்ள வாழ்வும் சுவர்க்கங்களிலுள்ள வாழ்வும் மற்றப் பூதபேத யோனிகளின் தோற்றரவுகளும் அவையெல்லாம் சிவ ஞானத்துடனே கூடி நின்று பொய்யென்று கண்டு நிற்கவே அப்போதும் கர்த்தாவினுடைய பாதமானது ஆன்மாவுக்குக் குளிர்ந்த நிழலாம். அதுவன்றியும், ஸ்ரீ பஞ்சாக்கரத்தை ஆசாரியர் அநுக்கிரகம் பண்ணின உபதேச விதிப்படிக்குச் சிந்தித்து நிற்கவே அப்போதுங் கர்த்தாவினுடைய பாதமானது ஆன்மாவுக்குக் குளிர்ந்த நிழலாமென்று அறிவாயாக என்றவாறு.

இதற்கு **முதற்சூரணி** வருமாறு :

ஈண்டு, அம்முதலை ஞானக்கண்ணினாற் காண்க என்றது: அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்– இவ்விடத்திலே முன் சொன்ன ஞானத்துக்கு முதலாகிய சிவனை அவன் அநுக்கிரகம் பண்ணின ஞானத்தினாலே காணவேண்டுமென்று சொன்னது; ஏதனால்? என்னில், அந்தக் கர்த்தா பாசஞானமாகிய கருவிகளுக்கும் பசு ஞானமாகிய சிற்றறிவுக்கும் எட்டாமல் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்கிற ஏதுவினால் என்று அறிவாயாக என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை — நாடியரன்
தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்
என்னா மெனவறிவா ரின்று.

(இ–ள்) நாடியோ — நாடிதானோ, என்போ — எலும்புதானோ, நரம்பு சீ கோழையோ — நரம்புதானோ

சீதானோ கோழைதானோ, தேடி எனை அறியேன் — விசாரிக்குமிடத்து என்னைக் காணேன், தேர்ந்தவகை நாடி — விசாரிக்கிற முறைமையிலே விசாரித்தறிந்து, அரன் தன்னாலே தன்னையும் கண்டு — கர்த்தாவினுடைய கிருபையினாலே ஆன்மாவையுங் கண்டு கர்த்தாவையுங் கண்டு, தமைகாணார் — தம்மைக் காணாதவர்கள், என் நாம் என அறிவார் இன்று — என்னத்தை நாம் ஒரு முதலுண்டு என்று அறிந்தவர்களாகப் போகிறார் இப்பொழுது என்றவாறு.

இனி, நாடியோ என்போ நரம்பு சீ கோழையோ— நாம் அறிவியாததற்கு முன்னெல்லாம் நீ திரிவு காட்சியாய்த் தேகமே தானாய் நின்றும் ஐயக்காட்சியாய்த் தேகத்துக்குள்ளே ஆன்மா உண்டென்று சொல்லுகிறார்களே அது வாத பித்த சிலேத்துமமாகிய நாடிதானோ அல்லது எலும்புதானோ அல்லது நரம்புகள்தாமோ அல்லது சீயோ அல்லது கோழைதானோ என்று மயங்கினதல்லாமல் உன்னை நீ அறியாயே! மெய்தான் என்னை அறியேன், தேடி எனை அறியேன் தேர்ந்தவகை — முன் உன்னை அறியாமல் தேடி நின்ற நீ இப்போது உன்னை எப்படி அறிந்து தேர்ந்துகொண்டாய்? நாடி அரன் தன்னாலே தன்னையும் கண்டு — பரமசிவரூபமாய் எழுந்தருளி வந்து தேவரீர் அநுக்கிரகம் பண்ணின ஞானத்தினாலே என்னையும் சிவனையும் கண்டேன், தமைகாணார் என் நாம் என அறிவார் இன்று — இப்படிச் சிவஞானத்தினாலே தன்னையும் தலைவனையும் அறியாதபேர்கள் கர்த்தாவையும் ஆன்மாவையும் எப்படி உண்டென்று அறியப் போகிறார்கள்? என்று சீடன் சொல்லக்கேட்டு, இப்போது நீ சிவஞானத்தைக் கருவியாகக்கொண்டு உன் போதத்தினாலே அறிந்தேனென்றல்லவோ சொல்லு

கிருய் உனக்குச் சிவஞானம் கருவியாகாது உன்னைக் கருவியாகக்கொண்டு உணர்த்தும் என்று அநுக்கிரகம் பண்ணுகிருர் என்பது ஒருரை.

**உதாரண வெண்பா :**

காட்டிய கண்ணே தனைக்காணு கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணு — காட்டிய
உள்ளந் தனைக்காணு வுள்ளத்தின் கண்ணுய
கள்வன்ரு னுள்ளத்திற் காண்.

(இ-ள்) காட்டிய கண்ணே தனைகாணு — எல்லாவற்றையும் காட்டிக்கொண்டு நிற்கிற கண்ணனது தன்னை அறியச்செய்யாது, கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண்காணு — கண்ணுக்குக் காட்டிக்கொண்டு நிற்கிற ஆன்மாவையும் கண்ணனது அறியச்செய்யாது, காட்டிய உள்ளம் தனை காணு-எல்லாவற்றையுங் காட்டிக்கொண்டு நிற்கிற ஆன்மாவும் தன்னை யறியச்செய்யாது, உள்ளத்தின் கண்ணுய கள்வன்தான் — உள்ளத்திலே ஒளித்திருக்கிற கள்வனுகிய கர்த்தாவைத்தான், உள்ளத்தில் காண் — அறிவினுலே அறிந்து கண்டுகொள்வாயாக என்றவாறு.

இனி, காட்டிய கண்ணே தனைகாணு — உனக்கு ரூபவிடயத்தைக் காட்டின கண்ணனது தன்னைக் காணமாட்டாது, கண்ணுக்கு காட்டாய உள்ளத்தை கண்காணு — அந்தக் கண்ணனது தன்னைக் காணுமல் நிற்பதன்றியும் தனக்காதாரமாய்க் கூடிநின்று இவ்விடயத்தைக் காட்டிக் காண்கிற ஆன்மாவையும் காணமாட்டாது, காட்டாய உள்ளம் தனை காணு — அந்தக் கண்ணுக்குக்

காட்டாய் நின்ற உன் பசுபோதமாகிய உள்ளமும் கண்ணுடனே கூடினால் அந்தக் கண்ணறிவாகிய பாசஞானமாய்ப் போம் அல்லது தன்னை வேறாய் அறியமாட்டாது, உள்ளத்தின் கண் ஆய கள்வன் தான் உள்ளத்தில்காண் — ஆனதினால் பாச பசுஞானத்தினால் உன்னையும் சிவத்தையும் அறியமாட்டாய்; அந்த இரண்டு ஞானத்தையும் பகல் விளக்குப்போலப் பிரகாசமாய் நிற்கும்படி விட்டுச் சிவஞானத்துக்கு நீ கருவியாக நின்றாயானால் அந்தச் சிவஞானக் கண்ணானது உனக்கு உயிராய் நின்று இந்நாள் வரையும் ஒளித்துநின்ற கள்வனாகிய கர்த்தாவையும் காட்டி உன்னையுங் காட்டுமென்று அறிவாயாக என்றவாறு.

இப்படிச் சிவஞானமாயடங்கிச் சிவத்தைத் தெரிசிக்கும்போது தேகாதிப் பிரபஞ்சவாதனை தோற்றினால் அதை நீக்கிக்கொள்ளுவது எப்படி? என்னில், அந்த ஞானப்பிரகாசத்துக்குள்ளே தான் தோன்றாமல் ஒளித்து நின்று அந்தக் கண்ணினாற் பார்க்கவே தன்னை வாதியாதென்று இரண்டாஞ்சூரணி உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

இதற்கு, இரண்டாஞ் சூரணி வருமாறு :

இனி, அசத்தாயுள்ள வன்னபேதங்களை — பொய்யாகிய தத்துவக்கூட்டங்களை, அசத்தென்று காண — பொய்யென்று விட்டு நீங்கவே, உளதாய் நிற்பது — அவ்விடத்திலேயுண்டாய் நிற்பது, ஞானசொரூபம் என்று உணரற்பாற்று — சிவஞானத்தினுடைய சொரூபம் என்று விசாரித்தறியும் முறைமைத்து என்றவாறு.

இனி, அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபம் என்று உணரற்பாற்று — முன்பு உன்னை யான் எனதென்று சொல்லி மயங்கும்படி தோற்றின தேகாதிப் பிரபஞ்சமாகிய வன்னபேதங்களெல்லாம் இப்போது உனக்கு அசத்தாய்ப் பேய்த்தேர் போலவும், கனாப்பொருள்போலவும், இந்திரசால வித்தைபோலவும் பொய்யாய்த் தோன்றுமேயானால் அப்போது உன்னைச் சிவஞானரூபமாய் நிற்கிறோம் என்று அறிந்துகொள்வாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரனாய் நின்ற தனிமுதல்வன் — அற்புதம்போல்
ஆனா வறிவா யளவிறந்து தோன்றானே
வானே முதல்களையின் வந்து.

(இ–ள்) நிர்க்குணனாய் — குணரகிதனுமாய், நின்மலனாய் — மலரகிதனுமாய், நித்தியானந்தனாய் — அழியாத சுகசொரூபியுமாய், தற்பரனாய் நின்ற தனிமுதல்வன் — எல்லாவற்றிற்கு மேலாயிருக்கின்ற ஒப்பற்ற கர்த்தாவானவன், அற்புதம்போல் — ஆச்சரியம்போல, ஆனா அறிவாய்—அமையாத பேரறிவாய், அளவு இறந்து தோன்றானே — மனவாக்குக்காயங்களை இறந்து தோன்றானே, வானே முதல் களையின் வந்து — பிருதிவி முதல் நாதம் ஈறாக முப்பத்தாறு தத்துவங்களையும் பொய்யென்று விட்டு நீங்கினவிடத்துத் தோன்றானோ? கர்த்தாத் தோன்றுவன் என்றவாறு.

இனி, நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியானந்தனாய் — குணாதீதனாய் மலாதீதனாய் நித்தியானந்த ஞான சொரூபியாய், தற்பரனாய் நின்ற தனி முதல்வன்—அந்த மேலான பராபரனாய் நின்ற ஒப்பற்ற கர்த்தாவானவர், அற்புதமாய் — என்றுங்காணாத அதிசயமாக, ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானோ — நீங்காத பேரறிவாய் ஆன்மாவுக்கு அளவுபடாமல் பரிபூரண சொரூபியாய் அந்த ஆன்மாவாகவே தோன்றானோ? தோன்றுவன், வானே முதல் களையின் வந்து – ஆகாய முதலாகிய முப்பத்தாறு தத்துவமான சகல பிரபஞ்சத்தையும் பொய் என்று கண்டு ஞானவடிவாய்ப் பற்றற்று நின்ற ஆன்மாவுக்குள் வந்து என்றவாறு.

இங்ஙனஞ் சொன்னவர் சிவதெரிசனை தோன்றுவதற்குப் பின்னும் ஓர் உபாயம் சொல்லுகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட வினியுளது சத்தேகாண் — சுட்டி
உணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் போய்விட்டுப் போம்.

(இ–ள்) சுட்டி உணர்வதனை — இதுவென்று சுட்டியறியப்பட்ட தேகாதிப்பிரபஞ்சத்தை, சுட்டி அசத்து என்ன — பொய்யென்று சுட்டியறியவே, சட்ட இனி உளது சத்தேகாண் — சட்டமாகிய சரீரத்தினிடத்திலே நிலைபெற்று நின்றது சத்தாகிய சிவமேகாண், சுட்டி உணர்ந்த நீ சத்து அல்லை — இப்படிச் சுட்டியறிந்து

வருகிற நீ சத்தாகிய சிவம் அல்லை, உண்மையை — கர்த்தாவை, தைவம் — ஆன்மாவானவன், புணர்ந்ததனால் — அடிமையாகப் பொருந்துகையினாலே, பொய்விட்டுப் போம் — பொய்யாகிய தேகப்பிரபஞ்சம் விட்டுப்போம் என்றவாறு.

இனி, சுட்டி உணர்வதனை சுட்டி அசத்து என்ன—அது இது என்று விடயத்தைப்பற்றி அறிகிற உன் போதத்தைச் சிவன் ஞானத்தினாலே சுட்டி வெயில் விளக்குப்போல அசத்தாய்ச் சடமாய் அடங்கிக்கிடக்கக் காண்பையேயானால், சட்ட இனி உளது சத்தேகாண் — அப்போது உன்னுடைய தேகமுங் கருவியும் தொழிலும் சத்தாகிய சிவஞானவடிவாய்ச் சிவகரணமாய்ச் சிவத் தொழிலிலே செய்துகொண்டு ஆன்மாவும் சிவமாயே நிற்கும், சுட்டி உணர்ந்த நீசத்தல்லை—அப்படி நின்றாலும் அந்தக் கர்த்தா உன்னைத் தானாக்கிக்கொண்டு நிற்பதேயன்றிச் சுட்டும் உணர்வையுடைய நீ அந்தச் சத்தாகிய சிவம் ஆகாய், உண்மையை தைவம் புணர்ந்ததனால் பொய் விட்டுப்போம் — உண்மைப்பொருளாகிய கர்த்தாவுக்குரிமை அடிமையாய்ப் பொருந்தி யான் எனதென்னும் செருக்கற்றுக் கர்த்தாவினுடைய பெருமை தெரிசித்து நிற்றலான் முன் உன்னைப்பற்றி நின்ற பிறவித் துன்பமாகிய பொய்யெல்லாம் உன்னைவிட்டு நீங்கியோடிப் போம் என்று உணர்வாயாக என்றவாறு.

இன்னும் சிவதெரிசனையாவதற்கோர் உபாய சாதகம் உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்
அண்டனை யான்மாவி லாய்ந்துணரப் — பண்டணைந்த

ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனி லோண்கருட
சானத்திற் றீர்விடம்போற் றான்.

(இ-ள்) கண்டதை அன்று அன்று என விட்டு— காணப்பட்ட தேகாதிப்பிரபஞ்சத்தை இது நான் அல்ல இது நான் அல்ல என்று விட்டு நீங்கி, கண்ட அசத்தாய்— காண்கின்ற அசத்தாகிய ஆன்மாவேயாய், அண்டனை — கர்த்தாவை, ஆன்மாவில் ஆய்ந்து உணர — ஆன்மாவினிடத்திலே விசாரித்தறிந்து, பண்டு அணைந்த ஊனத்தை தான் விடுமாறு — அநாதியிலே பொருந்தியிருக்கப்பட்ட மலத்தை நீக்கிக்கொள்ளுகிற முறைமை எப்படியென்றால், உத்தமனில் ஓண்கருட சானத்தில் தீர்விடம்போல் தான்— உத்தமனாகிய பிடாரன் ஒள்ளிய கருடதியானம் பண்ணவே விடம் நீங்குகிறதுபோல உத்தமனாகிய சீடன் சிவனைத் தியானம்பண்ணவே மலம் நீங்கிப்போம் என்றவாறு.

இனி இவ்விடத்து சீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது — இவ்விடத்திலே சிறப்புப் பொருந்திய பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கவேண்டுமென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே? வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்கும் — வேம்பிலே தின்ற புழுவைக் கரும்பிலே கொண்டுபோய் விட்டாலும் மீளவும் வேம்பையே நோக்கிக்கொண்டு நிற்கிறதுபோல, இவ்வான்மாக்களுக்கு — இங்ஙனம் சொல்லப்பட்ட ஆன்மாக்களுக்கு, ஞானம் பிரகாசித்தும்— சிவஞானம் விளங்கியும், அஞ்ஞானத்தை — அஞ்ஞானத்தையே நோக்கிக்கொண்டு நிற்கும், ஆதலின் —

* ஒப்பிட்ட நான்கு பிரதிகளில் ஒன்றில் 'சானத்திற்றீர் விடம்' என்றுளது; இது மிகப் பழைய பிரதி. மற்றை மூன்று பிரதிகளிலும் 'தியானத்திற்றீர்விடம்' என்றுளது.

ஆகையினாலே, அது நீக்குதற்கு எனக்கொள்க — அது நீக்கிக்கொள்ளுதற்கென்று அறிவாயாக.

இனிக், கண்டதை அன்று அன்று என விட்டு கண்டு அசத்தாய் — உன்னால் தியானித்துக் கண்ட பொருளை எல்லாம் இது நானல்ல என்று விட்டு அத்தையும் பொய் யென்று கண்டு நின்ற சத்துரூபத்தையே ஆன்மா என் றறிந்து, அண்டனை ஆன்மாவில் ஆய்ந்து உணர — அண்ட நாயகனாகிய கர்த்தாவை ஆன்மாவுக்கு அறிவுக்கறிவாய். உயிர்க்குயிராய் நிற்கிறார் என்று விசாரித்தறிந்து காண் பானும் காட்சியுமற உன்னைப் பாவனையிறந்த பாவனை யாய்ச் சிவமாக்கண்டு சோகம் பாவனை செய்து நிற்பையே யானால், பண்டு அணைந்த ஊனத்தை தான் விடுமாறு உத்தமன் நின் — உன்னைப்பற்றி நின்ற மலமாயா கன்மங் களாகிய ஊனமெல்லாம் கர்த்தாவாகிய உத்தமன் உன் னைத் தானாக்கிக்கொண்டு நிற்பதனாலே முறிந்து விடு பட்டுக் கெட்டோடிப்போம், அது எப்படிப்போல? என்னில், ஒண் கருடசானத்தில் தீர்விடம்போல் தான்— பன்னகவயிரியாகிய கருடனைத் தன்னைத் தியானித்து நிற்கிறவனுக்குப் பாம்புவிடம் ஏறுவதுபோலவும் பாம்பு கடிக்கும் என்னும் பயம் அற்றுப்போனது போலவும் அவன் பார்வையினாலே பிறருடைய விடம் விட்டு நீங்கிப் போவது போலவும் என்று அறிவாயாக என்றவாறு.

இப்படிச் சோகம்பாவனை செய்தன்றியும் பஞ்சாட் சரத்தினாலும் சிவதெரிசனையாகும் என்று மூன்றுஞ் சூரணி உணர்த்துகிறார்.

இனி இவ்விடத்துப் பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது. இவ்வாத்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல

நோக்கிற்றை நோக்கி நிற்கும் ஆதலான் அது நீக்குதற்கு எனக்கொள்க. இவ்விடத்தில் ஆசாரியர் அநுக்கிரகம் பண்ணின முத்திபஞ்சாக்கரத்தை விதிப்படி அறிவே நாவாகச் செபித்து முன் சொன்ன நிட்டை பிரியாமல் நிற்கவேண்டும் என்றது எதுக்காக? என்னில், இவ்வாத்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தாலும் வேம்புதின்ற புழுவைக் கரும்பில் எடுத்து விட்டாலும் முன்புசித்த வேம்பிலையை நினைந்து கரும்பை மறந்து நிற்பதுபோல நெடுநாட் பழகின வாதனையினாலே முன் புசித்த மாயா போகங்களை நினைந்து சிவத்தை மறந்து நிற்கும்: அந்த வாதனாதோஷம் திரும்படிக்கென்று அறிவாயாக என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தில் — அஞ்செழுத்தால்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கில்
அண்டனாஞ் சேடனா மங்கு.

(இ-ள்) அஞ்செழுத்தால் உள்ளம் அரன் உடைமை கண்டு — பஞ்சாக்கரத்தினாலே ஆன்மாவைக் கர்த்தாவுக்கு அடிமையாகிய உடைமையென்று விசாரித்தறிந்து, அரனை அஞ்செழுத்தால் அர்ச்சிந்து இதயத்தில் — கர்த்தாவைப் பஞ்சாக்கரத்தினாலே இதயத்தானத்திலே அர்ச்சனை பண்ணி, அஞ்செழுத்தால் குண்டலியில் செய்து ஓமம் — பஞ்சாக்கரத்தினாலே நாபித்தானத்திலே ஓமத்தை வளர்த்து, கோதண்டம் சானிக்கில் — பஞ்சாக்கரத்தினாலே புருவமத்தியிலே சிவனைத் தியானம் பண்ணவே, அண்டன் ஆம் — அவ்விடத்திலே கர்த்தா

வெளிப்படுவன், சேடன் ஆம் — ஆன்மா அடிமையாம், அங்கு — அந்தக் கர்த்தாவுக்கு என்றவாறு.

இனி, அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டு — பஞ்சாக்கரத்தின் பதப்பொருளான சிகார வடிவாகிய சிவம் வகாரவடிவாகிய திருவருளைக் கொண்டு தனக்கு அநாதி அடிமையாய்ப் பிரியாமற் பொருந்தி நிற்கிற யகாரவடிவாகிய ஆன்மாவுக்கு மும்மல மயக்க வாதனை தாக்காமல் இப்போது கருணைவடிவாய் நிற்கிற நகாரவடிவாகிய திரோதானசத்தியின் மறைந்து நின்று மகாரவடிவாகிய ஆணவ மலசத்தியைக் கொடுத்தருளு கிறார் என்னும் விதியை ஆசாரியர் அநுக்கிரகத்தினால் கேட்டறிந்து, அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில்— அந்தப் பஞ்சாக்கரத்தினாலே கர்த்தாவை இதயகமலத் திலே தியானித்து அர்ச்சித்து உள்ளும்புறம்புங் கண்டு பூசித்து, அஞ்செழுத்தால் குண்டலியில் செய்து ஓமம் கோ தண்டம் சானிக்கில்—அந்தப் பஞ்சாக்கரத்தினாலே நாபித் தானத்திலே குண்டலிசத்தியாகிய பிரணவ ஓமகுண்டத் தில் சிவாக்கினியைச் சொலிப்பித்து அதிலே தன்னுடைய கன்மபலன்களெல்லாம் நாசமாகும்படிக்குப் பஞ்சாக்கரத் தினாலே ஆகுதிபண்ணித் தேகமே சிவாதனமாகக் கோதண் டமாகிய புருவமத்தியினின்று பஞ்சாக்கரத்தை நினைந்து செபிக்கில், அண்டன் ஆம் சேடன் ஆம் அங்கு — அப் போதும் அண்டனாகிய கர்த்தா உன்னை ஞானப்பிரகாச சொரூபமாகிய அடிமையாக்கிப் பாதமூலில் வைத்து நிற்கும் தன்மை தெரிசிக்கப்படும் என்று அறிவாயாக என்றவாறு.

பின்னும் அந்தப் பஞ்சாக்கர செபத்தினால் சிவாநு பவப்படும் தெரிசனைக்குத் திட்டாந்தமிட்டு உணர்த்து கிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

இந்துவிற் பானுவி லிராகுவைக் கண்டாங்கு
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு — முந்தவே
காட்டாக்கிற் றேன்றிக் கனல்சே ரிரும்பென்ன
ஆட்டானு மோதஞ் செழுத்து.

(இ–ள்) இந்துவில் பானுவில் இராகுவை கண்டாங்கு — இராகு கேதுக்களைக் காணகவேண்டுமென்றால் சந்திர சூரியரிடத்திலே காண்கின்றதுபோல, சிந்தையில் காணில் சிவன் கண் ஆம் — ஆன்மாவினிடத்திலே சிவ ஞானத்தினாலே விசாரித்தறியவே கர்த்தா வெளிப்படுவன்; அது எப்படிப்போல? முந்தவே காட்டாக்கில் தோன்றி — முன்னே காட்டத்திலிருக்கின்ற அக்கினியைக் கடைந்தவிடத்து அந்தக் காட்டத்துக்கு வேறாக நெருப்பு வெளிப்பட்டதுபோலக் கர்த்தா ஆன்மாவினிடத்திலே வெளிப்படுவன், ஆன்மா கர்த்தாவைப் பொருந்தி நிற்கிறது எப்படியென்னில்? கனல் சேர் இரும்பு என்ன — அக்கினியைச்சேர்ந்த இரும்பைப்போல ஆன்மா கர்த்தாவைப் பொருந்திநிற்பன், ஆனால் கர்த்தா செய்கிற கிருத்தியங்களெல்லாம் ஆன்மா தானே செய்வானோ? என்னில், ஆள் தான் ஆம் — ஆன்மா கர்த்தாவுக்கு அடிமையாம், ஓது அஞ்செழுத்து — விதிப்படி பஞ்சாக்கரத்தை உச்சரிக்க என்றவாறு.

இனி, இந்துவில் பானுவில் இராகுவை கண்டாங்கு — சந்திர சூரியரிடத்தில் அரூபமாகிய இராகு கேது என்னும் பாம்பைக் கிராணம் தீண்டும் வேளையில் அவர்கள் கிரணத்தையடக்கி மேலாய் நிற்கக் காண்பது

போல முன் சொன்ன இலாடத்தானத்திலே, சிந்தையில் காணில் சிவன் கண் ஆம் — பஞ்சாட்சர சொரூபமாய் நிற்கிற ஆத்மாவினிடத்திலே சிவம் பிரகாசித்துத் தோன்றி ஆத்மாவை உள்ளடக்கி நிற்கும் தன்மை தெரிசிக்கப்படும். அது எப்படித் தோன்றுவது என்னில்? முந்தவே காட்டாக்கில் தோன்றி கனல்சேர் இரும்பு என்ன — முன்னே காட்டத்தில் தெரியாமல் ஒளித்து நின்ற அக்கினி ஒருவர் ஆணிகொண்டு முறுகவாங்கிக் கடையும்போது எப்படி வெளிப்படுகிறதோ அப்படி ஆத்மாவில் தெரியாமல் ஒளித்து நின்ற சிவஞானவர் அன்புடனே காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவாரிடத்திலேயிருந்து தோன்றி அக்கினியானது இரும்பைக் கெடாமல் தன்னிறமாக்கி உள்ளடக்கி மேற்கொண்டு எப்படி விளங்குகிறதோ அப்படி அந்த அடிமையாகிய ஆத்மாவையும் சிவமாக்கித் தம்முடைய பரிபூரண வியாபகத்துக்குள்ளே ஆத்மா வியாபகமாய் நிற்கும் தன்மையுங் காட்டித் தம்மைத் தெரிசனை கொடுத்து நிற்பர், ஆன் தான் ஆம் ஓது அஞ்செழுத்து — அப்போது ஆன்மா சிவனுக்கு அடிமையாய்ச் சிவானுபவத்துக்குரித்தாய் நிற்கும் என்பதை நீயும் அறிந்து பஞ்சாட்சர செபம் பண்ணுவாய் என்றவாறு. பின்னும் ஓர் உபாய சாதகத்தியானம் உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

மண்முதற் ளமலர் வித்தை கலாரூபம்
எண்ணிய வீசர் சதாசிவமும் — நண்ணிற்
கலையுரு வாஞ்சத்தி நாதமதன் கண்ணும்
நிலையதிலா மச்சிவன்றாள் நேர்.

(இ-ள்) மண் முதல் நாளம் — பிருதிவி முதல் ஆன்மதத்துவம் இருபத்துநாலும் தாமரைத்தண்டாகவும், மலர் வித்தை — வித்தியாதத்துவங்கள் ஏழும் சுத்த வித்தை ஒன்றும் ஆக எட்டும் எட்டு இதழாகவும், கலா ரூபம் எண்ணிய ஈசர் சதாசிவமும் — நினைக்கப்பட்ட மகேசுரதத்துவமும் சாதாக்கிய தத்துவமும் கேசர ரூப மாகவும், நண்ணில் கலை உரு ஆம் சத்தி — பொருந்தப் பட்ட சத்திதத்துவம் காயாகவும், நாதம் அதன் கண் ஆம் — நாததத்துவம் அதனுடைய விதையாகவும், நிலை அதில் ஆம் அ சிவன் தாள் நேர் — இதிலே நிலைபெற்றிருக் கிற கர்த்தாவினுடைய திருவடித்தாமரையிலே நேரே அர்ச்சித்து வழிபாடு பண்ணுவாயாக என்றவாறு.

இனி, மண் முதல் நாளம் மலர் வித்தை — ஆணவ மலமென்னும் தடாகத்தில் கன்மமலம் என்னும் சேற் றைப்பற்றி மாயையாகிய விதையின் முளைத்தெழுந்த ஆன்மதத்துவம் இருபத்துநாலும் தாமரைத்தண்டாகவும், வித்தியாதத்துவம் ஏழும் சிவதத்துவத்திற் சுத்தவித்தை யும் அந்தத் தாமரை நாளத்தின்மேற் பூத்து விரிந்திருக் கிற எட்டு இதழாகவும், கலாரூபம் எண்ணிய ஈசர் சதா சிவமும் — அந்தத் தாமரை இதழுக்குட் சூழ்ந்திருக்கிற கேசரம் மகேசுரமும் சாதாக்கியமாகவும், நண்ணில் கலை உரு ஆம் நாதம் ஆம் சத்தி அதன் கண் ஆம் — விந்து சத்தி அந்தத் தாமரைப்பூவினுடைய பொகுட்டாகவும் நாதமாகிய சிவதத்துவம் அந்தப்பொகுட்டிற் பதிந்திருக் கிற விதைக் கண்ணாகவும் உன்னுடைய தேகத்தைப் பஞ்சாக்கரத்தினால் சுத்திப்படுத்திச் சிவனுக்குப் பத்மா சனமாகவும் தியானித்து, நிலை அதில் ஆம் அ சிவன் தாள் நேர் — அந்தப் பத்மாசனத்தில் உன்னைத் தாணுக்கிக் கொண்டு நிற்கும் கர்த்தாவினுடைய பாதகமலமாகிய

சிவஞானரூபத்தைத் தெரிசித்து நேராகக் கண்டு பூசிப்பாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

ஒன்பதாஞ்சூத்திரம் ஆன்மசுத்தி பண்ணுமாறு உணர்த்திய கருத்து முற்றியது.

## ஒன்பதாஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.

---

இந்தச் சூத்திர முடிவில் ஆன்மசுத்தியும் சிவதெரிசனமும் உடனிகழ்ச்சியாய்த் தோன்றினது என்று அறிக. இப்படிச் சிவதெரிசனை பண்ணின சீடனுடைய ஆன்மபோதம் மனவாக்குக்கெட்டாத சிவத்தைத் தெரிசிக்கப்பெற்றேமென்று கெற்சித்து நிற்கையால் அந்தக் கெற்சிதம் அடங்கும்படிக்குச் சிவயோக சாதகம் உணர்த்துகிறார். இதற்குப் பத்தாஞ்சூத்திரம் வருமாறு :

## பத்தாஞ் சூத்திரம்

**அவனே தானே யாகிய வந்நெறி**
**ஏக னாகி யிறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.**

(இ-ள்) அவனே தானே ஆகிய அநெறி—கர்த்தா ஆன்மாக்கள் தானேயாய் நின்ற முறைமைபோல, ஏகன் ஆகி — ஆன்மாக்கள் கர்த்தாவுடனே ஒன்றுபட்டு, இறை பணி நிற்க — கர்த்தாவுக்கு அடிமைத்திறம் வழுவாமல் நிற்கவே, மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே.— மலமும் மாயையும் அதனோடுங்கூடிய கொடிய வினைகளும் இல்லை என்றவாறு.

— என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின் — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங்கிற்றோ என்னின், பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று — பாசத்தைக் கெடுக்கிற முறைமையைச் சொல்லத் தொடங்கிற்று. ஈண்டுப் பரமேசுரன் இவ் வான்மாவாய் நின்ற முறைமையால் — இவ்விடத்திலே கர்த்தா ஆன்மாவாய் நின்ற முறைமைபோல, அவனிடத்து ஏகனாய் நிற்க என்றது — ஆன்மாவும் கர்த்தாவினுடனே ஒன்றுபட்டு நிற்கவேண்டுமென்று சொல்லிற்றே, அது எந்த ஏதுவினாலே? அவ்வாறு நிற்கவே — கர்த்தா நின்ற முறைமையிலே நிற்கவே, யான் எனது என்னும் செருக்கற்று — யான் என்கிற தேகமும் எனது என்கிற போகமும் விட்டு நீங்கி, அவனது சீபாதத்தை அணையும் — கர்த்தாவினுடைய திருவடித்தாமரையைப் பொருந்தும், ஆதலான் — ஆகையினாலே சொன்னது.

இனி, என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின், பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று — கர்த்தா முன் பெத்த காலத்தில் ஆத்மாவுடனே ஒன்றாய் நின்றும் தான் தோன்றாமல் நின்ற முறைமைபோல இப்போது ஆத்மாவினுடைய முதன்மையை ஒடுக்கிச் சகலமும் தானாய் நிற்கும் தன்மையைத் தெரிசனை கொடுத்துப் பிரகாசித்து நிற்கிற கர்த்தாவே முதன்மையாக நீ உன் போதம் தோன்றாமல் அவருடைய பாததாமரைக்குள் ஒடுங்கிக்கிடப்பையேயானால் உன்னுடைய பாசமெல்லாம் நசித்துப்போம் என்று அறிவாயாக:

இதற்கு, முதற் சூரணி வருமாறு :

ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையால் அவனிடத்து ஏகமாய் நிற்க என்றது.

அவ்வாறு நிற்கவே யான் எனது என்னும் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையுமாகலான். இப்போது பரமேசுவரன் உனக்குத் தன்னியல்பு பிறந்து ஆன்மசுத்தி யாம்படிக்கு அநுக்கிரகம்பண்ணி ஆத்மாவே தானாகத் தோன்றி நிற்றலால் அந்தக் கர்த்தாவுடனே ஒன்றுபட்டு முன் பெந்தத்தில் சிவம் தோன்றாமல் நின்றதுபோல இப்போது உனக்குப் போதம் தோன்றாமல் ஏகமாய் உன்னை நிற்கச்சொன்னது. அவ்வாறு நிற்கவே நீ யான் எனது என்னும் செருக்கும் கெற்சிதமும் அற்றுக் கர்த்தாவினுடைய சீபாதகமலமாகிய திருவருள் ஞானமாய் ஒடுங்கிப் பேரானந்த முத்தியைப் பெறுவதற்கு என்று அறிவாயாக என்றவாறு என்பது ஒருரை.

உதாரண வெண்பா :

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாதல்
தானெனவோன் றின்றியே தானதுவாய் – நானெனவோன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானு மிறை.

(இ–ள்.) நான் அவன் என்று எண்ணினர்க்கு நாடும் உளம் உண்டு — நான் என்றும் அவன் என்றும் இரண்டாக விசாரிக்கிறவர்களுக்கு விசாரிக்கிற ஆன்மா ஒன்று உண்டு, ஆதல்—ஆகையினாலே, தான் என ஒன்று இன்றியே — தான் என்கிறது சற்றுமில்லாமல், தான் அதுவாய் — தான் அந்தக் கர்த்தாத்தானே ஆய், நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரை — நான் என்கிறது சற்றுமில்லை கர்த்தாத்தானே என்று சொல்லுகிறவர்களை, தன் அடி வைத்து — தன்னுடைய திருவடித்

தாமரையை அவர்களிடத்திலே பதிவித்து, இல் என்று தான் ஆம் இறை—அவர்களுக்கு வருகிற தேகமும் போகமும் இல்லையென்று கர்த்தா தானே ஏற்றுக்கொள்ளுவன் என்றவாறு.

இனி, அம் முதல் பணி வழுவாது நிற்க என்றது—அம்முதலாகிய கர்த்தாவினுடைய அடிமைத்திறம் வழுவாமல் நிற்கவேண்டுமென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே? அவன் அருளால் அல்லது ஒன்றையும் செய்யாளுகவே — கர்த்தாவினுடைய திருவருள் செய்கிறதேயல்லாமல் தான் ஒன்றையும் செய்யாமலிருக்கவே, அஞ்ஞான கன்மம் பிரவேசியா — அஞ்ஞானமும் கன்மமும் வந்து பொருந்தாது, ஆதலான் — ஆகையினாலே சொன்னது.

இனி, நான் அவன் என்று எண்ணினர்க்கு நாடும் உளம் உண்டாதல் — நான் அன்றிச் சிவமானேன் என்று எண்ணினும் அப்படி எண்ணுகிறதற்கு ஆன்மபோத கெற்சிதம் உண்டாகும். ஆன்மபோதம் என்பது உண்டாகவே மும்மலவாதனையும் போகாது. ஆனதினால், தான் என ஒன்று இன்றியே தான் அதுவாய்—தான் என்று ஒரு முதல் தோன்றாமல் தான் அந்தச் சிவஞானமாய் அடங்கி, நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரை — இனி நான் என்று ஒரு முதலில்லை எல்லா உண்டி முயக்கம் பயம் இன்பம் முதலான எல்லாம் அந்தச் சிவஞானத்தின் செயலே என்று கண்டு அப்படிக் கண்ட உன்னையும் மறந்து அதுவாய் நிற்பையேயானால், தன் அடி வைத்து இல் என்று தான் ஆம் இறை — அப்போது கர்த்தா உன்னைத் தம்முடைய குளிர்ந்த பாத தாமரை நிழலிலே வைத்துக்கொண்டு உனக்குச் சிவ

போகத்தைக் கொடுத்து உன்னுடைய பிராரத்துவபோகம் முதலான எல்லாம் தாம் ஏற்றுக்கொண்டு நிற்பர். உனக்கு ஒரு வினையுமில்லை என்று அறிவாயாக என்றவாறு. இந்த நிட்டை கூடுதற்கு இன்னும் ஒரு சாதகம் சொல்லுகிறோம் என்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

இதற்கு, இரண்டாஞ் சூரணி வருமாறு :

இனி, அம்முதல் பணி வழுவாது நிற்க என்றது அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா ஆகலான் — இனி அந்த ஞான முதலாகிய கர்த்தாவுக்கு வேண்டிய சிவபணிவிடை செய்துகொண்டு சற்றும் வழுவாமல் நிற்கவேண்டும் என்று சொன்னது மன வாக்குக் காயம் மூன்றும் ஞானாசாரியராய் எழுந்தருளிக் கர்த்தா அருளிச்செய்தபடியே செய்துகொண்டு வேறொன்றும் செய்யாமல் அந்த ஞானச் செயலாகவே உன் செயல் நிற்க வருமையானால் அப்போதும் உன்னிடத்திலே முந்தின அஞ்ஞான கன்மங்கள் வந்து பொருந்தாது என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

நாமல்ல விந்திரியம் நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமு மரனுடைமை — ஆமென்னில்
எத்தனுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

(இ-ள்) நாம் அல்ல இந்திரியம் — நாம் பஞ்சேந்திரியங்களிலே ஒன்றல்ல, நம் வழியின் அல்ல — பஞ்சேந்

திரியங்கள் நம்முடைய வழித்தோ அதுவும் நம்முடைய வழித்தல்ல, வழி நாம் அல்ல — நாம் தாம் நம்முடைய வழித்தோ நாமும் நம்முடைய வழித்தல்ல, நாமும் அரன் உடைமை—நாமும் கர்த்தாவுக்கடிமையாகிய உடைமை, ஆம் என்னில்—இப்படி நிற்க வருமேயானால், எதனுவில் நின்றும்—எந்தெந்தச் சரீரத்திலே பொருந்தி நின்றாலும், இறை பணியார்க்கு இல்லை வினை — கர்த்தாவினுடைய அடிமைத்திறம் வழுவாமல் நிற்கிற பேர்களுக்கு வினையோ இல்லை, முன் செய் வினையும் — முன்னே செய்யப்பட்ட வினையோ, தருவான்முன் — கூட்டி முடித்த கர்த்தாவே ஏற்றுக்கொள்ளுவன் என்றவாறு.

இனி, நாம் அல்ல இந்திரியம் நம் வழியின் அல்ல—தேகாதிக் கூட்டமாகிய தத்துவங்கள் எல்லாம் நாமல்ல; அவை நம்முடைய வழித்தாய் நடப்பதுமல்ல, வழி நாம் அல்ல — நாமுமோ நம்முடைய வழித்தாய் நடப்பதுமல்ல, நாமும் அரன் உடைமை ஆம் என்னில் — அந்தத் தத்துவங்களும் நாமாகிய ஆத்மாவும் கர்த்தாவுக்கு உடைமையும் அடிமையும் ஆம் என்றறிந்து அவ்விரண்டு வகையும் கர்த்தாவினுடைய ஏவற்பணிவிடை செய்ய அடிமைத்திறம் வழுவாமல் நிற்க வருமேயானால், எ தனுவில் நின்றும் இறை பணியார்க்கு இல்லை வினை — எந்தெந்த வடிவாய் நின்றாலும் கர்த்தாவுக்கு வேண்டிய பணி செய்துகொண்டு நிற்கிற மகாத்மாக்களை ஒரு வினையுங் கூடாது: அவர்களுக்குத் தேகமுமில்லை; முற்செய் வினையும் தருவான் முன் — செய்த வினைப்பயன்களை ஆத்மாவுக்குக் கூட்டின கர்த்தாவே இப்போது ஆத்மாவுக்கு முன்னின்று தேகத்தையும் போகத்தையும் தாமாக ஏற்றுக்கொள்வர் என்று அறிவாயாக என்றவாறு.

அநாதியே சகல ஆன்மாக்களும் சகல உலகமும் அந்தக் கர்த்தாவுக்கு அடிமையும் உடைமையும் ஆகையால் எல்லா ஆன்மாக்கள் வினையையும் ஏற்றுக்கொள்ளலாகாதோ என்னில், யான் எனது என்னும் செருக்கையுடைய ஆன்மாக்கள் வினையை ஏற்றுக்கொள்ளார் என்று உணர்த்துகிருர் என்பது ஓர் உரை.

*உதாரண வெண்பா :*

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனுய்ச் — சார்ந்தடியார்
தாந்தானுய்ச் செய்துபிறர் தங்கள்வினை தாங்கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையு மாங்கு.

(இ-ள்) சார்ந்தாரை காத்தல் தலைவர் கடன் — தன்னை வந்தடைந்த பேர்களைக் காத்து இரட்சிக்கிறது பெரியோர்களுக்கு முறைமை, ஆதல் — ஆகையினுலே, சார்ந்தாரை காத்தும் — தன்னை வந்தடைந்த அடியார்களைக் காத்து இரட்சித்தும், சலம் இலனுய் — பெத்தாத்மாக்களிடத்திலே பட்சப்பிரதிபட்சமில்லாதவனுய், சார்ந்தடியார் தாம் தானுய்ச் செய்து — தன்னை வந்தடைந்த அடியார்களைக் கர்த்தா தானுகச்செய்தும், பிறர் தங்கள் வினை தாம் கொடுத்தல் — அவரவர் விரும்பப்பட்ட போகத்தை அவரவர்களுக்குக் கூட்டி முடிப்பன், ஆய்ந்தார் முன் செய்வினையும் — தன்னை அடைந்த ஞாதாக்களுக்குக் கூட்டி முடிக்கிறது எப்படி? யென்ருல், ஆங்கு — அந்த பெத்தாத்மாக்களுக்குக் கூட்டி முடிக்கிறதுபோல் என்றவாறு.

இனி, சார்ந்தாரை காத்தல் தலைவர் கடன் ஆதல்— தன்னை முழுவதும் நம்பிச் சார்ந்தபேரைக் காப்பது தலைவனாகிய கர்த்தாவுக்குக் கடனுமாதலால், சார்ந்தாரை காத்தும் சலம் இலனாய் — அப்படிச் சார்ந்தபேரைக் காப்பதன்றியும் மற்ற ஆத்மாத் தன்மேலும் வெறுப்பின்றி வேண்டுவார் வேண்டுவதே செய்வன், அது எப்படி? என்னில், சார்ந்தடியார் தாம் தானாய்ச்செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் — கர்த்தா தன்னைச் சார்ந்த மகாத்மாக்கள் தேகத்தையும் போகத்தையும் வெறுத்துத் தன்னை இச்சித்து நிற்கும் கருத்தறிந்து அவர்களைத் தானாக்கிக்கொண்டு பேரின்பத்தையே கொடுப்பன்: மற்றப் பெத்தாத்மாக்கள் தேகத்தையும் போகத்தையும் இச்சித்துத் தமக்கு ஏன்ற வினைகளைச் செய்துகொண்டு நிற்கையால் அவர்கள் நினைவின்படி அவரவர் வினைக்கேற்ற பலன்களையே கொடுத்துப் பருவப் படுத்துவன், ஆய்ந்தார் முன் செய்வினையும் ஆங்கு — இவை அல்லாமலும் என் செயலெலாம் உன் செயலே என்றும் உயிர்க்குயிராய் நின்று நீயே என்னைத் தொண்டு செய்வித்தும் செய்கிறாய் என்றும் எனக்கொரு செயல் வேறே இல்லை என்றும் இடைவிடாமல் நினைந்து தோத்திரங்கள் செய்து ஏன்ற பணிவிடை செய்து நிற்கிற பேர்களுக்கும் இரங்கி அவர்களையும் வினை சாராமல் ஏன்றுகொண்டு இரட்சிப்பர் என்று அறிவாயாக என்றவாறு.

ஆனால், சிவஞானத்தைப்பெற்ற மகாத்மாக்கள் திருமேனியில் இன்பதுன்பம் தாக்காமலிருக்கவேண்டுமே தாக்குவானேன்? என்னில், அதனால் அவர்களுக்கு ஆணியில்லை என்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையுட னில்லாது மற்றவன்றன் மெய்ப்பொருளே
ஆயவத னுவுணரு மச்சு.

*(இ-ள்) இங்குளி வாங்கும் கலம்போல—பெருங் காயமிருந்து எடுத்துவிட்ட பாண்டம்போல, ஞானிபால்—ஞானவானிடத்திலே, முன் செய்வினை மாயை மூண்டிடினும் — முன்னே ஆர்ச்சிக்கப்பட்ட வினையானது மாயா தேகமாய் வந்து பொருந்தினாலும், பின் செய்வினை மாயை உடல் நில்லாது — இப்போது ஆர்ச்சிக்கப்பட்ட ஆகாமியம் மாயா சரீரமாய் வந்து பொருந்தாது, மற்று அவன் தான் — மற்றவனாகிய ஆன்மாத்தான், மெய்ப்பொருளே ஆய் — மெய்ப்பொருளாகிய கர்த்தாவாய் நிற்க, அதனால் உணரும் அச்சு—அப்படி நிற்கவே பிராரத்துவம் தேகத்திலே வந்துபோம் என்றவாறு.*

*இனி, இங்குளி வாங்கும் கலம்போல — பெருங் காயமிட்டிருந்த பானையிலே அந்தப் பெருங்காயமெல்லாம் ஒருவர் எடுத்துவிட்டாலும் அப்பானையிருக்கு மட்டும் நாறிக்கொண்டிருப்பதுபோல ஞானசாரியர் ஆறு அத்துவாவையும் சோதித்து அதிற் கட்டுப்பட்டிருந்த வினையெல்லாம் ஞானக்கினியினால் சுட்டுவிட்டபடியினால் சஞ்சித வினை இல்லையாம், ஞானிபால் முன் செய் வினை மாயை மூண்டிடினும் — அந்தச் சஞ்சிதத்தின் முன் கட்டுப்பட்டிருந்ததில் பாகப்பட்டிருந்த வினையைப் பிரித்துப் புசிப்புக்கு அமைத்த பிராரத்துவம் இன்பதுன்பமாய்*

மாயாதேகம் இருக்குமட்டும் வந்து பொருந்தினும், முன் செய் வினை மாயையுடல் நில்லாது — அதினாலே ஞானவான்களுக்கு முன்போலப் புசிப்பும் ஆகாமிய வினையும் தேகமும் உண்டாகாது, அது எப்படிப்போல? பெருங்காயநாற்றம் பாண்டையைப் பற்றி நாறுவதன்றிக் கறிக்கு எடுத்துப் புசிக்கக் கூடாததுபோல ஞானவான் களுக்கும் இன்பதுன்பமென்று அந்தப் பெருங்காய நாற்றம்போல அறிந்திருப்பதேயன்றிப் புசிக்குந் தொழி லாகாது, மற்று அவன் தான் மெய்ப்பொருளே ஆய அதனால் உணரும் அச்சு — ஞானவான்கள் முன்போல மாயா தேகத்தைப்பற்றி நில்லாமல் ஞானவடிவான சிவ மாய் நிற்கையால் பிராரத்துவபோகம் தேகத்தளவாய் நின்று கழிந்துபோம்; ஆகாமியமெல்லாம் திருவருட் செயலாகப் போம் என்று அறிவாயாக என்றவாறு.

இப்படிச் சிவயோக முதிர்ச்சியைப் பெற்ற மகாத் மாக்கள் சீவன் முத்தராய் இந்தத் தேகத்துடனே தானே சாயுச்சிய முத்தியைப் பெற்று நின்மல சாக்கிராதீதராய் விடயவாதனை தாக்காமல் நிற்பர் என்பதற்குத் திட்டாந்த மிட்டு உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும் — எண்ணி
அரனடி யோர்பவ ரைம்புலனிற் சென்றும்
அவர்திற நீங்கா ரதற்கு

(இ-ள்) நண் அனல் வேவாத நல் தவர் தம்மினும்- பொருந்தப்பட்ட அக்கினியிலே கை வேவாத நல்ல அக் கினித்தம்பனை வல்ல பேர்களைப்போலவும், பண் அமர

மா செலுத்தும் பாகரினும் — பண்ணுக்குப் பொருந்தக் குதிரையை நடத்துகிற பாகரைப்போலவும், எண்ணி — விசாரித்து, அரன் அடி ஓர்பவர் — கர்த்தர்வினுடைய திருவடித்தாமரையை விசாரித்தறிந்தவர்கள், ஐம்புலனில் சென்றும் — பஞ்சேந்திரியங்களிலும் பொருந்தினாலும், அவர் திறம் நீங்கார் — கர்த்தாவினுடைய திருவடித் தாமரையை விட்டு நீங்கார்கள், அதற்கு — அந்தப் பஞ்சேந்திரியங்கள் வழித்திலே வாரார்கள் என்றவாறு.

இனி, நண் அனல் வேவாத நல்தவர் தம்மினும்— இவ்விடத்திலே அக்கினிஸ்தம்ப மந்திர வித்தையை உடையவர்கள் அக்கினிச்சூடு தாக்காமல் அக்கினியை எடுத்து விளையாடுவது போலவும், பண் அமர மா செலுத்தும் பாகரினும் — கல்லணை அமைந்த குதிரை எத்தனை வேகமுடையதானாலும் ஏறி நடத்தும் ராவுத்தன் வசப்பட்டிருப்பதுபோலவும், எண்ணி அரன் அடி ஓர்பவர் ஐம்புலனில் சென்றும் — ஆசாரியர் அநுக்கிரகம் பண்ணின உபதேச மந்திரங்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடித் திருவருள் வடிவாயிருக்கிற ஞானவான்கள் தேகாதிப்பிரபஞ்சமாகிய இன்பதுன்ப விடயத்தைப் பஞ்சேந்திரியங்களுடனே கூடி அறிந்தாலும் அந்த இந்திரிய வசப்பட்டு மயங்கார்கள் கெம்பீரமாய், அவர் திறம் நீங்கார் அதற்கு — அவர்க்குச் சார்பாமென்று ஏற்றுக்கொண்டு நிற்கிற சிவஞானத்திறத்தினாலே அந்த விடயவாதனையெல்லாம் தன் வசப்படுத்திக் கொண்டு சிவமாய்க் கவலையற்று நிற்பார்கள் என்று அறிவாயாக என்றவாறு.

இப்படி நிட்டைகூடின மகாத்மாக்கள் சத்துடனே கூடிச் சத்தாய்ச் சத்தையறிவதுபோல அசத்தையும்போத

சத்தோடு கூடி அசத்தாய்ப் போகார்களோ என்னில், போகார்கள் என்று உணர்த்துகிறுர் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணின்
இதமித்தல் பாசத்தி லின்றிக் — கதமிக்
கெரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தின்
அருகணையார் சத்தணைவ ராங்கு.

(இ–ள்) சதசத்து ஆம் மெய்கண்டான்—சதசத்த ஞகிய சத்தியத்தினைத் தெரிசித்த ஆன்மாவானவன், சத்து அருளில் காணில் — சத்தாகிய சிவத்தை அவன் அருளினுலே காணுமிடத்து, இதமித்தல் பாசத்தில் இன்றி — பாசத்திலே சற்றும் பந்தமில்லாமல், அது என் போல எனில், கதம் மிக்கு எரி கதிரின் முன் இருள் போல் — மிகுந்த கோபத்தொடும் எரிந்துவருகிற ஆதித் தன் முன்னே அந்தகாரம் நில்லாததுபோல, ஏலா—பாசம் இவர்களைப் பொருந்தாது, அசத்தின் அருகு அணையார் — அவர்களும் அசத்தாகிய பாசத்திலே பொருந்தார்கள், சத்து அணைவர் — சத்தாகிய சிவத்தையே பொருந்துவார் கள், ஆங்கு — அந்தப் போகத்துக்கு என்றவாறு.

இனி, சதசத்து ஆம் மெய்கண்டான் — சத்தின் தன்மையும் அசத்தின் தன்மையும் திடப்பட மெய்யாய் விசாரித்துக் கண்ட சிவஞானிகள், சத்து அருளில் காணில் — சத்தாகிய பேரின்ப சுகத்தைத் திருவருள் காட்டக்கண்டு ஞாதுரு ஞான ஞேயம் என்னும் திரிபுடி தோன்ருமல் புசித்து அறிந்தார்களேயானுல், இதமித்தல் பாசத்தில் இன்றி — இப்போது சற்றும்

பாசமாகிய பொய்ப்போகத்தில் இச்சைபற்றச் சிவாநுபவ போக இச்சையே மிகுதலால், கதம் மிக்கு எழ் கதிரின் முன் இருள்போல் ஏலா — மிகுத்த கோபத்துடனே பிரகாசித்து நிற்கிற சூரியன் முன்னே இருட்டு எதிர்ந்து தோன்றாததுபோலப் பாசவாதனையும் அவர்கள் முன் எதிர்ந்து தோன்றாது, அசத்தின் அருகு அணையார் சத்து அணைவர் ஆங்கு — ஆனதினால் சீட்கட கூடின மகாத்மாக்கள் அந்தப் பாசவாதனையருகே அசத்துடன் சாரார்கள்; இடைவிடாமற் சத்தாகிய சிவத்துள் அடங்கிச் சிவாநுபவம் ஒன்றுமே கண்டிருப்பார்கள் என்று அறிவாயாக என்றவாறு. பத்தாஞ் சூத்திரம் சிவபோக சாதனைக்குச் சொல்லிய கருத்து முற்றியது.

## பத்தாஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று

---

முன் சொன்ன ஒன்பதாஞ் சூத்திரமும் இப்போது சொன்ன பத்தாஞ் சூத்திரமும் நின்மல துரியமென்றே அறிக. இப்படித் துரியாநுபவம் அறிந்த சீடனை இனித் துரியாதீதமாகிய ஞேயத்தழுந்திச் சிவபோகமாகிய லாபம் பெறவேண்டுமென்று சொல்ல அப்போது நான் என்று ஒரு முதல் இல்லாமல் திருவருளாய்ப் போனேனே இந்தத் திருவருளுக்கு மேலே ஒரு ஞேயமாகிய பொருள் உண்டாமாகில் அதனைப் பொருந்துகிறது ஆர்? என்று சொல்ல, இப்படிச் சொன்னபோதே நீ முன் ஆன்மதெரிசனம் பண்ணினவன் அல்ல! முன் ஆணவ மலமாய் நெடு நாட் கிடந்தும் அறிவே பிறந்தவனல்லவே! இப்போது சிவஞானத்தில் ஒடுங்கினது கொண்டு இல்லாமல் இறந்து போவாயோ! போகாய். நீ நித்தியனல்லவோ? உன்னைத் தாய்போலமலத்தைக் கெடுத்துவந்த திருவருள் உன்னை

உண்டென்று காட்டித் தனக்கு முதலாகிய ஞேயத்தைக் கொடாதே போனால், அந்த ஞானத்தினாலே பிரயோசனம் ஏதிருக்கிறது? ஆனதினாலே அந்தத் திருவருளாகிய ஞானம் ஆத்மாவாகிய ஞாதுருவும் ஞேயமாகிய கர்த்தாவும் தோன்றாமல் தாடலைபோல ஏகிபவித்து நிற்கச் சிவபோகத்தைப் புசித்து நில் என்று பதினொராஞ் சூத்திரம் உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

## பதினொராஞ் சூத்திரம்

**காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்**
**காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்.**
**அயரா வன்பி னரன்கழல் செலுமே.**

(இ-ள்) காணும் கண்ணுக்கு காட்டும் உளம் போல் — காணவல்ல கண்ணுக்குக் காட்டி ஆன்மா புசிக்கிறதுபோல, காண உள்ளத்தை கண்டு காட்டலின் — காணவல்ல ஆன்மாவுக்குக் காட்டிக் கர்த்தா புசிக்கையினாலே, அயரா அன்பின் அரன்கழல் செலுமே — விட்டு நீங்காத அன்பினாலே கர்த்தாவினுடைய திருவடித்தாமரையைப் பொருந்துவன் என்றவாறு.

— என்பது சூத்திரம் என்னுதலிற்றோ எனின் — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத் தொடங்கிற்றோ? எனின், பரமேசுரனது சீபாதகமலங்களை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று — கர்த்தாவினுடைய திருவடித்தாமரையைப் பொருந்துகிற முறைமையைச் சொல்லத் தொடங்கிற்று.

ஈண்டு இவ்வான்மாக்கள் — இவ்விடத்திலே இங்ஙனம் சொல்லப்பட்ட ஆன்மாக்கள், அவனை இன்றி —

கர்த்தாவையல்லாமல், அமைந்து ஒன்றையும் விடயியா— பொருந்தி ஒரு விடயத்தையும் அறியச் செய்யார்கள், ஆதலான்—ஆகையினாலே, அவனும் அவற்றது விடயத்தை யுணரும் என்றது — கர்த்தாவும் ஆன்மாக்களுக்கு வருகிற போகத்தையறிந்து புசிப்பன் என்று சொன்னது.

இனி, என்பது சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், பரமேசுரனது சீபாதத்தை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று. இப்போது காணும் காட்சியுடைய கண்ணுக்கு உள்ளமாகிய ஆன்மா தன்னைக் காட்டிக் கண்ணுக்கு உரித்தான விடயத்தைக் கண்டுகொண்டு அந்தக் கண்ணாய் நிற்பதுபோலக் கர்த்தாவும் தன்னை ஆன்மாவுக்குப் பேரின்பமாய்க் கொடுத்து ஆன்மாவினுடைய தேகபோகங்களையெல்லாம் தாம் ஏற்றுக்கொண்டு அந்த ஆன்மாவாயே நிற்பர்.

இதற்கு முதற்சூரணி வருமாறு :

ஈண்டு இவ்வான்மா அவனை யின்றியமைந்து ஒன்றையும் விடயியா ஆகலான் அவனும் அவற்றது விடயத்தை யுணரும் என்றது — இவ்விடத்தில் இவ்வான்மா சிவபோக முதிர்ச்சியினால் திருவருளாய் அடங்கிச் சிவ போகம் ஒன்றையுமே இச்சித்துப் புசித்துத் தான் கர்த்தாவையின்றி வேறொன்றையும் அமைந்து இச்சியாமல் நிற்கையால் அந்தக்கர்த்தாவும் அவ்வான்மாவுக்கு அளவுபடாத பேரின்பத்தைக் கொடுத்துக்கொண்டு நின்று அந்த ஆன்மாவுக்குள்ள பிராரத்துவ விடய போகங்களை யெல்லாம் ஏற்றுக்கொண்டு அந்த வழியே மற்றுள்ள உயிர்களுக்கும் சிவபுண்ணியங்களைக் கொடுத்து இரட்சிப்பர் என்று அறிவாயாக என்பது ஓர் உரை.

*உதாரண வெண்பா :*

ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தும்போ னின்றுணரு மாதலான் — ஐந்தினையும்
ஒன்றேன்றாய்ப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகும்
ஒன்றொன்றாய்ப் பார்க்கு முணர்ந்து.

*(இ-ள்) ஐந்தையும் ஒக்க உணராது — சத்தாதி விடயங்கள் ஐந்தையும் ஆன்மா ஏககாலத்திலே அறியச் செய்யாது, அவற்று உணர்வது — அந்தச் சத்தாதி விடயங்கள் ஐந்தையும் ஆன்மா அறிகிறது எப்படி? என்றால், ஐந்தும்போல் நின்று உணரும்—பஞ்சேந்திரியங் களைப்போலச் சத்தாதி விடயங்கள் ஐந்தையும் அது அதுவாய் அறிந்து புசித்து வருவன், ஆதலான் — ஆகையி னாலே, ஐந்தினையும் ஒன்று ஒன்றாய் பார்த்து உணர்வது உள்ளமே — பஞ்சேந்திரியங்களிடமாக நின்று அதுவது வாகப் பொருந்தி அறிந்துவருகிற ஆன்மாவே, எ உலகும்— எல்லா ஞாதாக்களுடைய போகங்களையும், ஒன்று — ஒப்பற்றகர்த்தாவானவன், ஒன்றாய் பார்க்கும் உணர்ந்து— ஏக காலத்திலே அறிந்து புசித்து வருவன் என்றவாறு.*

*இனி, ஐந்தையும் ஒக்க உணராது அவற்று உணர்வு ஐந்தும்போல் நின்று உணரும் ஆதலால்—ஆத்மாவானது ஐந்து விடயத்தையும் ஒக்க ஒருகாலத்திலே அறியமாட் டாது: ஒவ்வொரு விடயமாய் அதுவதுவாய் நின்றே அவற்றை அறியும்: ஆதலினால், ஐந்தையும் ஒன்று ஒன்று ஆய் பார்த்து உணர்வது உள்ளமே — இவ்விடத்திலே ஐந்து விடயத்தையும் சிவபோகமாய் உடலும் உயிரும் போலக் கர்த்தா அறிவிக்க அறிந்து ஒன்றாய் நின்று சகல*

போகத்தையும் ஆன்மா சிவனுக்கே ஒன்ருன்ருய்க் கொடுத்துத் தானும் சிவபோகமாயே புசித்து நிற்கும், எ உலகும் ஒன்ருன்ருய் பார்க்கும் உணர்ந்து — ஒப்பில்லாத் தனி முதல்வனுகிய கர்த்தா ஓர் ஆன்மாவினிடத்திலே ஒற்றுமையாய் நின்று பிராரத்துவ போகங்களையும் ஏற்றுக்கொண்டு சிவபோகத்தைக் கொடுத்து நிற்பது போல அளவில்லாத உலகங்களிலிருந்து முத்தி பெற்றிருக்கிற அளவில்லாத மகாத்மாக்கள் பிராரத்துவபோகத்தையும் ஒக்க ஏககாலத்திலே கொடுத்துக்கொண்டும் மற்று முன்னிலைப்பட்ட உயிர்கள் மலங்களையும் போக்கி இரட்சிப்பர் என்று அறிவாயாக என்றவாறு.

இவ்விடத்திலே மாயாபோகமான சத்தாதி விடயம் ஞானவான்களுக்கு எப்படிச் சிவபோகமாயிருக்குமென்னில் உயிர் சிவமாய்ப் போனல் மாயையும் கன்மமும் சிவமாயே போம் என்று உணர்த்துகிருர் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் — ஏகமாய்
உள்ளத்தின் கண்ணுனு ளுள்குவா ருள்கிற்றை
உள்ளத்தாற் காணுனே வுற்று.

(இ-ள்) ஏகமாய் நின்றே இணை அடிகள் ஒன்று உணர — முத்தாத்மாக்கள் கர்த்தாவினுடைய திருவடித் தாமரையிலே ஒன்றுபட்டு விசாரித்தறிய, போகம் ஆய் தான் விளைந்த பொற்பினன் — அநுபோகமாய்க் கொடுக்கப்பட்ட சிறப்பினையுடையவன், ஏகம் ஆய் உள்ளத்தின்

கண் ஆனான் — தன்னோடு ஒன்றுபட்ட ஆன்மாக்களுடைய இடமானான், உள்குவார் உள்கிற்றை — நினைக்கிற பேருடைய நினைவை, உள்ளத்தால் காணானோ உற்று — தனது திருவுள்ளத்திலே அடைத்தருளிக் காணானோ! காண்பன் பொருந்தி என்றவாறு.

ஏகமாய் நின்றே இணை அடிகள் — கர்த்தாவினுடைய திருவடித்தாமரையானது சர்வான்மாக்களிடத்திலேயும் ஒன்றுபட்டு நின்று, ஒன்று உணர — ஆன்மாக்கள் ஒரு விடயத்தை அறிந்து புசிக்குமிடத்து என்றும் பொருள் உரைக்கப்படும்.

இனி, பத்தியினான் மறவாதேத்த — விட்டு நீங்காத அன்பினாலே வழிபாடு பண்ணவே, அவனது சீபாதத்தை அணையுமென்றது — கர்த்தாவினுடைய திருவடித் தாமரையைப் பொருந்துமென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே? அவன் அந்நியமின்றி — அந்தக் கர்த்தா அந்நியமில்லாமல் அநந்நியமாய், செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான் — செய்தபேர் செய்திக்குத் தக்க பிரயோசனத்தைக் கொடுத்து நிற்கையினாலே சொன்னது.

இனி, ஏகமாய் நின்றே இணை அடிகள் ஒன்று உணர போகம் ஆய் தான் விளைந்த பொற்பினான் — கர்த்தாவுடனே அத்துவிதமாய் நின்மல சொப்பனத்தில் கண்ணும் ஆதித்தனும் போலவும், நின்மல துரியத்தில் உடலும் உயிரும்போலவும், நின்மல துரியாதீதத்தில் ஆத்மாவும் ஆத்மஞானம் போலவும் இரண்டறக் கலந்து ஒன்றாய் நின்று கர்த்தாவினுடைய பாததாமரைகளை நினையுங்காலத்து அந்த மகாத்மாக்களுடைய பிராரத்துவ

தேகபோகமெல்லாம் சிவபோகமாய் விளைந்த பொலிவி ஞலே, ஏகமாய் உள்ளத்தின் கண் ஆனுன் — ஒரு முத லாய் அந்த மகாத்மாக்களுக்குக் கண்மணிபோல் நிற்கிற கர்த்தா, உள்குவார் உள்ளத்தை உள்ளத்தால் காணுனே உற்று — அந்த மகாத்மாக்கள் சிவபோகம் ஒன்றையுமே இச்சித்து நிற்கும் கருத்தை அறிந்து அவர்களுக்குத் தம்மை இன்பமாகக் கொடுத்து அவர்களுடைய பிரா ரத்துவ போகத்தைச் சிவபோகமாய் விளைவித்து அந்த மகாத்மாக்களுக்கு உயிராயுற்று நின்று தானும் அந்தப் போகத்தையறிந்து ஏற்றுக்கொள்ளானே ? ஏற்றுக் கொள்வன் என்று அறிவாயாக என்றவாறு.

இப்படி இப்பேரருள் பெற்று இம்மையே பர முத்தியெய்திய சாந்திகரையன்றிப் பத்தியினுன் மறவா மல் நினைந்து சாதகம் செய்த மகாத்மாக்களும் அந்தியத் திற் சிவத்தில் அயிக்கமாவார்கள் என்பதற்கு, இரண் டாஞ் சூரணி உணர்த்துகிருர்.

இனிப் பத்தியினுன் மறவாதேத்த அவனது சீ பாதத்தை அணையும் என்றது: அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான். நிட்டை கூடின துணிவு பிறந்து சீவகந்தோன்ருத சாத்திகர்களை யன்றி ஆசாரியர் அநுக்கிரகித்தபடி ஞானசாதகம் செய் யும் சாதகரும் பத்தியினுன் மறவாது எத்திப் பணிசெய்து மோட்சமே இச்சித்து நிற்கையால் அவர்களுக்கும் செய் வோர் செய்திப்பயன் விளைத்து நிற்கும் கர்த்தா அறிந்து அந்தியத்துக்குள்ளே மோட்சத்தைக் கொடுப்பர் ஆதலி ஞல் அந்தப் பத்தியுடையவர்களும் சிவத்தில் அயிக்க மாவார்களென்று நாம் சொன்னது என்பதோருரை.

**உதாரண வெண்பா :**

அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணூர்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன் — அருட்கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோல்
நேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.

*(இ-ள்) காணூர்க்கு — பிறவியந்தகருக்கு, அருக்கன் நேர் நிற்பினும் — ஆதித்தன் நேரே நின்றாலும், அல் இருளே — மிகுந்த பூத விருளே, ஈசன் — கர்த்தா, பாசத்தார்க்கு — பாச பெந்திகளாயிருக்கிற பேர்களுக்கு, இருட்கண்ணே — ஆணவமிடமாகவே மறைந்து நிற்பன், அருள் கண்ணால் பாசத்தை நீக்கும்—கிருபைக் கண்ணாலே ஆணவ மலத்தை நீக்குவன். அது எப்படிப்போல? பகல் அலர்த்தும் தாமரைபோல் — ஆதித்தன் அலர்த்துகிற தாமரையைப்போல, நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் — மிகுந்த அன்பினாலே தன்னை வழிபட்டவர்களிடத்திலே கர்த்தாநேரே இரண்டற்றிருப்பன் என்றவாறு.*

*இனி, அருக்கன் நேர் நிற்பினும் அல்லிருளே காணூர்க்கு — எங்கும் பிரகாசித்து நிற்கிற சூரியன் சந்நிதானத்திலே நின்றாலும் கண்ணில்லாத அந்தகர்க்கு இருட்டல்லாமற் சூரியன் தோன்றாது, இருட் கண்ணே பாசத்தார்க்கு ஈசன் — அதுபோல ஆணவமலம் நீங்காத பாச பெந்திகளுக்கெல்லாம் கர்த்தா தோன்றி நிற்பதில்லை, அருள் கண்ணால் பாசத்தை நீக்கும் பகல் அலர்த்தும் தாமரைபோல் — ஆனால் பாசபெந்திகளுக்குச் சிவனாற் பிரயோசனம் இல்லையோ? என்னில், சூரியனானவன் கிரணத்தினாலே பரிசித்துத் தாமரை அரும்பைப் பருவப் படுத்தி அலர்த்துவது போலக் கிரமத்திலே பாசத்தை*

நீக்கி இரட்சிப்பர், நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் — இவ்விடத்திலே சாதகர் சிவபத்தி மிகுந்து மறவாமல் நினைந்து பணிசெய்து நிற்கையால் கர்த்தாவும் சீக்கிரம் மத்தியான சூரியன்போல் அவர்களுக்கு நேர்பட்டு மல வாதனைகளை நீக்கி இம்மையே மோட்சத்தைக் கொடுப்பர் என்று அறிவாயாக என்றவாறு.

இப்படி நிட்டை கூடின மகாத்மாக்களுக்கெல்லாம் கர்த்தா ஒருவராய் விகாரமற நின்று சிவபோகமாகிய பேரின்பத்தை எப்படிக் கொடுப்பர்? என்னில், முத்தி யிலும் அளவுபடாமல் நின்று தனித்தனியே இன்பங் கொடுப்பர் என்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து — தன்னில்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றான்.

(இ-ள்) மன்னும் இருளை மதி துரந்த ஆறு — நிலைபெற்ற பூத இருளை ஆதித்தன் தானே வந்து நீக்கின முறைமை போல், அன்பின் மன்னும் அரனே மலம் துரந்து — அன்பிலே நிலைபெற்ற கர்த்தா தானே ஆணவ மலத்தை நீக்கி, தன்னில் — தனக்குள்ளே ஆன்மாவை வலித்துக்கொள்ளுவன். அது என்போல எனின்? வலித்து இரும்பை காந்தம் வசம் செய்வான் செய்தல் — காந்த மானது இரும்பைத் தன்னுக்குள்ளே வலித்து வசஞ் செய்துகொள்ளுகிறது போலக் கர்த்தா ஆன்மாவைத் தன்னுள்ளே வலித்து வசஞ்செய்து கொள்ளுவன். ஆனால்

உம்முடைய கர்த்தாவுக்கு விகாரமுண்டு என்னில், சலிப்பு இல் விகாரி அலன் தான் — போக்குவரவற்று விகாரமும் இல்லாதவன் என்றவாறு.

இனி, மன்னும் இருளை மதிதுரந்த ஆறு — படலம் தீர்ந்த கண்களுக்கெல்லாம் இருளைவந்து அணுகாதபடி பிரகாசித்து அந்தந்தக் கண்கடோறும் தோன்றி நிற்கிற சூரியனைப்போல, மன்னும் அரனே மலம் துரந்து — நிட்டை கூடின மகாத்மாக்களுக்கெல்லாம் இருள் வந்து அணுகாதபடி கர்த்தா ஒருவரே உயிர்க்குயிராய் நின்று மலத்தைத் துரந்து, தன்னின் வலித்து இரும்பை காந்தம் வசம் செய்வான் செய்தல் — பெரிய காந்தக்கல் மலையானது தூரக்கிடந்த இரும்புகளை வலித்து இழுத்துத் தன்னிற் சேர்ந்த பின்பு திரும்பி அகற்றுமல் வைத்துக் கொண்டு எப்படி அசைவற்றிருக்கிறதோ? அப்படி, சலிப்பு இல் விகாரி அலன் தான் — கர்த்தாவும் பூரணமாய் அசைவற்று விகாரமற நின்று பக்குவமான உயிர்களையெல்லாம் திருவடியிலே நீங்காமல் சேர்த்து வைத்துக் கொண்டு போகங் கொடுப்பர் என்று அறிவாயாக என்றவாறு.

இப்படிச் சிவத்தில் அயிக்கியமான ஆத்மாக்கள் கெட்டுக் கூடுமோ? கெடாமற் கூடுமோ? என்பதற்கு உத்தரம் உணர்த்துகிறுர் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

நசித்தோன்றி னுள்ள நசித்தலா லொன்று
நசித்திலதே லொன்றுவ தில்லை — நசித்துமலம்
அப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாம்
கப்பின்று மீசன் கழல்.

(இ-ள்) நசித்து ஒன்றின் — ஆன்மா நட்டமாய்ப் பொருந்துமேயானால், உள்ளம் நசித்தலால் — ஆன்மா நட்டமானபடியினாலே, ஒன்று — ஒன்றாய்ப் பொருந்தப் போகிறதில்லை, நசித்திலதேல் — ஆன்மா நட்டமாகா தென்று சொல்லுவையானால், ஒன்றுவதில்லை — கர்த்தா வினுடைய திருவடித்தாமரையைப் பொருந்தப்போகிற தில்லை, ஆனால் நட்டமானதென்ன? நசித்து மலம் — நட்டமானது ஆணவ மலம், அப்பு அணைந்த உப்பின் — அப்பையணைந்த உப்பைப்போல, உளம் அணைந்து சேடம் ஆம் — ஆன்மாவானவன் கர்த்தாவினுடைய திருவடித் தாமரையைப் பொருந்தி அடிமையாம், கப்பு இன்றாம் ஈசன் கழல் — கர்த்தாவினுடைய திருவடித் தாமரையானது இரண்டாயிராது என்றவாறு.

இனி, நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்று — ஆத்மா கெட்டுக் கூடுமேயானால் கெட்டுப் போனது ஒன்றுடனே கூட வேண்டுவதில்லை; ஆனால் கெடாமல் வேறாய் நிற்குமோ? என்னில், தான் ஒரு முதலாய்ச் செயல் கெடாமல் வேறாய் நின்றாலும் ஒன்றாய்க் கூடி நிற்கவேண்டுவதில்லை: பின்னை எப்படி என்னில், நசித்து மலம் — முன் ஆத்மாவைச் சிவத்துடனே கூட்டா மல் அந்நியமாக்கித் தானாக்கிக்கொண்டு நின்ற ஆணவ மல சத்தி கெட்டுத் தற்போத நிகழ்ச்சி தோன்றாமல் முன் மலத்துடனே கூடி மலமாய் மலத்துக்கல்லாமலும் ஒரு முதலாய்க் கிடந்ததுபோல முத்தியிலும் சிவத்துடனே கூடிச் சிவமாய் சிவத்துக்கல்லாமலும் ஒரு முதலாயே நிற்கும்; இரு பொருள் ஒரு பொருள் போல நிற்பது எப்படி? என்னில், அப்பு அணைந்த உப்பின் — ஒரு படி தண்ணீரிலே ஒரு படி உப்புக்கரைந்து கூடினால் இரு படியும் ஒரு படியாய் உப்பு ரசமும் தண்ணீரிற் கிடக்க

எப்படி இங்கே காணப்படுகிறதோ! அப்படிப்போல, உளம் அணைந்து சேமம் ஆம் கப்பு இன்றும் ஈசன் கழல்— ஆத்மாவும் முத்தியிலே கர்த்தாவினுடைய திருவடித் தாமரையில் அணைந்து வியாபகமாய்க் கலந்து ஒன்றாய்ச் சிவாநுபவம் ஒன்றினுக்கும் உரித்தாயிருக்கும் என்று அறிவாயாக என்றவாறு.

ஆத்மா முன் பெந்தத்திலும் பின்பு முத்தியிலும் புசித்து நிற்கும் என்பது எப்படி? என்னில், அதற்குத் திட்டாந்தமிட்டு உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

பொன்வாண்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோல் — முன்வாள்
மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணும்
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

(இ-ள்) பொன் வாள் முன் கொண்மூவில் புக்கு ஒடுங்கி — முன்னே ஆதித்தப் பிரகாசமானது மேகத்திலே மறைபட்டு நின்று, போய் அகல — மேகமானது விட்டு நீங்கினவிடத்து, தன் வாளே எங்கும் ஆம் தன்மை போல் — ஆதித்தப் பிரகாசமானது எவ்விடத்திலேயும் நிறைந்து விரிந்த முறைமைபோல, முன் வாள்—முன்னே ஆத்மாவினுடைய அறிவானது, மலத்தின் மறைந்து — ஆணவ மலத்திலே மறைபட்டு, உள்ளம் — ஆத்மாவானவன், மற்று உலகை உண்ணும் — மாயா போகங்களைப் புசிக்கும், மலத்து இரித்து செல்லும் வரத்து — மலம் நீங்கினவிடத்துக் கர்த்தாவினுடைய திருவடித் தாமரையைப் பொருந்துவன் என்றவாறு.

(இ-ள்) செம்மலர் நோன் தாள்—சிவந்ததாமரை மலர் போன்ற வலியதாளினை, சேரல் ஒட்டா—பொருந்த வொட்டாத, அ மலம் கழீஇ — அந்த ஆணவம் மாயை காமியம் என்னும் மூன்று மலங்களையும் நீக்கி, அன்பரொடு மரீஇ — சிவனடியார்களோடும் பொருந்தி, மால் அற — மயக்க விகற்பம்தீர, நேயம் மலிந்தவர் வேடமும்— நேயத்திலே ஆசை மிகுந்த வேடத்தாரையும், ஆலயம் தானும் — சிவலிங்கப்பெருமானையனையும், அரன் என தொழுமே — கர்த்தா என்றே வழிபாடு பண்ணுவாயாக என்றவாறு.

— என்பது சூத்திரம் என்னுதலிற்றோ? எனின் — இந்தச் சூத்திரம் என்னத்தைச் சொல்லத்தொடங்கிற்றோ எனின், அசிந்திதனாய் நின்ற பதியை — மன வாக்குக் காயங்களுக்கெட்டாத கர்த்தாவை, சிந்திதனாய்க்கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று — மன வாக்குக் காயங்களினாலே அறிந்து வழிபாடு பண்ணுகிற முறைமையைச் சொல்லத் தொடங்கிற்று.

ஈண்டு ஆணவம் மாயை காமியம் என்னும் மலங்களைக் களைக என்றது—இவ்விடத்திலே ஆணவம் மாயை காமியம் என்னும் மூன்று மலங்களையும் விட்டு நீங்க வேண்டுமென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினாலே? அவை தாம் ஞானத்தினை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்துமாதலான் — அந்த மும்மலங்களும் சிவ ஞானத்தை அறிவியாது அஞ்ஞானத்தையே அறிவிக்கும் ஆகையினாலே சொன்னது.

இனி, — என்பது சூத்திரம் என்னுதலிற்றோ? எனின், அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாய்க்கண்டு

வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று—முன் ஆத்மாவை மறைத்து மயக்கி நின்ற ஆணவமலம் அநாதி நித்தியம் ஆனபடியினாலும், மிகுந்த சதுரறியாமையையுடையதாகையினாலும், ஆத்மாக்களைச் சிவவேடத்துடனே கூடாமல் மறைப்பதே அதற்குக் குணம் ஆதலினாலும், தேகாந்தமாகுமட்டும் திருவருளை ஆதாரகமாய்ப் பிரியாமல் ஒடுங்கிப் பாசத்துக்கு இடங்கொடாமல் மிகுந்த பத்தியுடனே சிவனுக்கு அடிமைத்திறம் தப்பாமல் குரு லிங்க சங்கமம் மூன்றிடத்தினும் வழிபாடு செய்து நிற்கவேண்டுமென்று இச்சூத்திரம் நாம் சொன்னது. அது எப்படி ? என்னில், சிவந்த தாமரை மலர்போன்ற மேலான பரமசிவனுடைய பாதத்திலே ஆத்மாவைக் கூடாதபடி பாதிக்கும் மும்மலங்களையும் பற்றறக் கழுவி அந்தப்பாச பெந்திகளுடைய சங்கத்தையும் விட்டுச் சிவபத்தி மிகுந்த அன்பர்களுடன் கூடிக் கலந்து மருவி மயக்க விகற்பமற்றுச் சிவபோக நேயமே அநுபவித்துக்கொண்டிருக்கிற சிவஞானிகளையும், பூதிசாதன வேடங்களையும், சிவாலயங்களையும் பரமேசுரனே எனக் கண்டு தொழுது வழிபடுவாயாக என்றவாறு.

இதற்கு, முதற்சூரணி வருமாறு :

ஈண்டு ஆணவம் மாயை காமியம் என்னும் மலங்களைக் களைக என்றது, அவை தாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்தும் ஆகலான். நான் என்னும் அகங்காரமாய்த் தோன்றுகிற ஆணவ மலத்தையும், தேகமே தானாய்த் தோன்றுகிற மாயா மலத்தையும், என்னதென்று தோன்றுகிற இன்ப துன்பமாகிய கன்ம மலத்தையும் திருவருளினாலே பற்றறக் களையவேண்டும். களையாவிடில், அவை தாம் இப்போது அநுபவமான

ஞானத்தையும் மறைத்து அஞ்ஞானத்தையே தோற்று விக்கும் ஆதலால் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

புண்ணிய பாவம் பொருந்துமிக் காமியமும்
மண்முதன் மாயைகாண் மாயையும் — கண்ணிய
அஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

(இ-ள்) புண்ணிய பாவம் பொருந்தும் இ காமியமும் — புண்ணியமாயும் பாவமாயும் வருகிற கன்ம மலமும், மண் முதல் மாயை காண் மாயையும் — பிருதிவி முதல் நாதும் ஈருக முப்பத்தாறு தத்துவங்களாக வருகிற மாயா மலமும், கண்ணிய அஞ்ஞானம் காட்டும் இ ஆணவமும் — கருதிய அறியாமையைக் காட்டிவருகிற ஆணவ மலமும், இ மூன்றும் — இந்த மும்மலங்களும், மெய்ஞ்ஞானிக்கு ஆகா — சத்தியஞானிகளுக்கு ஆகா, விடு — விட்டுவிடு என்றவாறு.

இனி, சிவ பத்தர்களோடு இணங்குக என்றது — சிவனடியாரோடும் கூடியிருக்கவேண்டுமென்று சொல் விற்றே! அது எந்த ஏதுவினாலே? அல்லாதார் அஞ்ஞா னத்தை உணர்த்துவராதலான் — சிவ பத்தர்களல்லாத பேர்கள் சிவஞானத்தை அறிவியார்கள், அஞ்ஞானத் தையே அறிவிப்பார்கள் ஆகையினாலே சொன்னது.

இனி, புண்ணிய பாவம் பொருந்தும் இ காமியமும் — புண்ணிய பாவத்தை என்னது என்று விரும்பிச் செய்யும் கன்ம மலத்தையும், மண் முதல் மாயை காண் மாயையும் — பிருதிவி முதலான மாயா காரியங் கூடிப்

பரிணமித்த சரீரத்தை நான் என்று மயங்கும் மயக்கத்தைக் கொடுக்கிற மாயா மலத்தையும், கண்ணிய அஞ்ஞானம் காட்டும் இ ஆணவமும் — ஆத்மாவை நான் என்று அகங்கரித்து நின்று சிவனை மறந்து நிற்கப் பண்ணும் அஞ்ஞானமாகிய ஆணவ மலத்தையும், இ மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு—ஆக இம் மூன்று மலத்தையும் மெய்ஞ்ஞானத்தைப்பெற்ற மகாத்மாக்கள் பொருந்தார்கள்; ஆனதினாலே, நீயும் அவை பொருந்தாமல் ஆகாதென்று விட்டுவிடுவாயாக என்றவாறு.

இங்ஙனம் சொன்ன மும்மலவாதனையும் கூடாமல் நிற்பதற்கு உபாயம் சதா காலமும் இடைவிடாமல் சிவஞானத்தையே சிந்தனை பண்ணிக்கொண்டு சிவப் பித்து அதிகரித்திருக்கிற ஞானவான்களுடனே கூடிச் சிந்தனை பண்ணவேண்டுமென்று இரண்டாஞ் சூரணி உணர்த்துகிறார்.

இனிச் சிவ பத்தர்களோடு கூடி இணங்குக என்றது: அல்லாதார் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்துவர் ஆகலான். இங்ஙனம் சிவஞானிகளுடனே கூடிப் பழகவேண்டும் என்றது எதுக்கு என்னில்? பாச பெந்திகளான அஞ்ஞானிகளுடனே கூடிப் பழகினால் அவர்கள் உணர்த்தும் அஞ்ஞானப் பழக்கம் மிகுந்து பிரத்தியட்சமாய் அநுபவமான ஞானத்தையும் மறப்பித்துப் போடும் என்று அறிவாயாக என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

மறைப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்
சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை — அறப்பித்துப்

பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னுலுணரும்
மெய்த்தவரை மேவா வினை.

(இ-ள்) சிறப்பு இல்லார் தம் திறத்து சேர்வை—சிறப்பில்லாத பெத்த கூட்டத்தாருடைய இணக்கம், மறைப்பித்து — தற் சொரூபத்தை மறைப்பித்து, தம்மை மலங்களின் வீழ்க்கும் — தம்மை மும்மலங்களிலேயும் அழுத்தும், அற — அந்தப் பெத்த கூட்டத்தார் இணக்கம் நீங்க, பித்துப் பத்தர் இனத்தாய் — சிவனடியாரிடத்திலே மிகுந்த ஆசையாய், பரன் உணர்வினுல் உணரும் மெய் தவரை—கர்த்தாவினுடைய திருவருளினுலே அறிந்து வருகிற சத்திய தவத்தோரை, மேவா வினை — மும்மலங்களும் வந்து பொருந்தா என்றவாறு.

இனிப் பத்தரது திருவேடத்தையும், சிவனடியாரையும், சிவாலயத்தையும், சிவலிங்கப்பெருமானுயுனரையும், பரமேசுரன் எனக் கண்டு — கர்த்தா எனக் கண்டு, வழிபடுக என்றது — வழிபாடு பண்ணவேண்டுமென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினுலே? அவன் மற்று இவ்விடங்களில் பிரகாசமாய் நின்றே — அந்தக் கர்த்தா சங்கமத்தினிடத்திலும் பிரகாசமாய் நின்று, அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான் — அல்லாத விடங்களில் அப்பிரகாசமாய் நிற்கையினுலே சொன்னது.

இனி, மறப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்கும் சிறப்பில்லார் தம் திறத்துச் சேர்வை — இப்போது அநுபவமான சிவஞானத்தையும் மறப்பித்துப் பழையபடி மும்மல வாதனைகளிலே அமிழ்த்திவிடும் சிவபத்தியில்லாத அஞ்ஞான பாச பெந்திகளுடைய பழக்கம் என்று உணர்ந்து அவர்களை மும்மல ரூபம் என்றே அறிந்து

விட்டு நீங்கி, அறப்பித்துப் பத்தர் இனத்தாய் — அந்தப் பழக்கமறச் சிவப்பித்துக்கொண்டு உலகத்தை மறந்திருக்கிற சிவஞானிகளுடனே கூடி பரன் உணர்விஞல் உணரும், மெய் தவரை மேவா வினை — மேலான சிவஞானத்தையே சிந்தித்து உணர்ந்து குரு லிங்க சங்கமத்தையே சிவமாகக் கண்டு வழிபடும் மெய்த்தவத்தை உடையவர்களைப் பிறவித்துன்ப வினைகளானவை கூடா என்று அறிவாயாக என்றவாறு.

இப்படிப் பிரமாதிகளுக்கும் கிடையாத சிவஞானச் செல்வம் கிடைத்ததே என்னும் கெற்சிதத்திஞல் அடிமைத்திறம் வழுவாமல் சிவனடியார் திருவேடச் சிறப்பையும், சிவாலயங்களையும் மிகுந்த ஆசையுடனே வணங்கி வழிபடுவதே முத்திக்குப் பலம் என்று மூன்ருஞ் சூரணி உணர்த்துகிருர்.

இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுக என்றது. அவன் இவ்விடங்களிற் பிரகாசித்து நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசமாய் நிற்றலான் — சிவபோக முதிர்ச்சி மேன் மேலும் வளரவேண்டுமென்று உணர்ந்தபேர்கள் பத்தரது பூதி சாதனத் திருவேடச் சிறப்பையும் சிவலிங்கப் பெருமாள் எழுந்தருளியிருக்கிற சிவாலயங்களையும் பரமேசுரன் எனக் கண்டு பரவசத்துடனே பணிந்து வழிபட வேண்டுமென்று சொன்னது. கர்த்தா இவ்விடங்களில் பிரத்தியட்ச அனுபோகமாய்ப் பிரகாசித்து நின்று அல்லாத இடங்களில் அப்பிரகாசமாய் நிற்றலிஞல் என்று அறிவாயாக என்பது ஓர் உரை.

திருவேடச்சிறப்பு உணர்த்துகிருர்.

**உதாரண வெண்பா :**

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலால் — தன்னுணரும்
நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றாம் பதி.

*(இ-ள்) தன் உணர வேண்டி — தன்னை அறிய வேண்டி, தனது உருவை தான் கொடுத்து — தனது திருமேனியாகிய விபூதி பஞ்சாக்கர முதலாகிய திருவேடத்தையுங் கொடுத்து, தன் உணர — தன்னை அறிய, தன் உள் இருத்தலால் — தனக்குள்ளே இருக்கையினாலே, தன் உணரும் நேசத்தர் தம்பால் — தன்னை அறிகிற மிகுந்த ஆசையையுடையவர்களிடத்திலே, நிகழும் — வெளிப் படுவன், அது எப்படிப்போல? ததி நெய்போல் — தயிருக்குள்ளே நெய் வெளிப்பட்டதுபோல், பாசத் தார்க்கு இன்றாம் பதி — பாச பெந்திகளாயிருக்கிற பேர் களுக்குக் கர்த்தா இல்லை என்றவாறு.*

*இனித், தன் உணரவேண்டி தனது உருவை தான் கொடுத்து — மனுஷீக கோசரமாய் நிற்கிற கர்த்தா தன்னை யாவரும் கண்டு தெரிசிக்கும்படிக்குத் தம்முடைய திருவருள் வடிவான பூதி சாதன ருத்திராட்ச சடாதாரம் முதலான திருவேடச்சிறப்பைத் தமக்கு மகிழ்ச்சியான பக்குவாத்மாக்களுக்குக் கொடுத்து அவர்கள் திருமேனி யையும் அருள் வடிவாக்கி, தன் உணர தன்னுள் இருத்த லால் — அவர்கள் தன்னைச் சதாகாலமும் உணர அவர்கள் அறிவே தானாக இருந்து பிரகாசித்து வெளிப்பட்டு மற்ற ஆத்மாக்களுடைய மலங்களைப் போக்கி இரட்சித்திருத்த லால், தன் உணரும் நேசத்தார் தம்பால் நிகழும் ததிநெய் போல் — ஆனதினாலே திருவேடச் சிறப்புக்களையுடைய*

சிவனடியார்களைச் சிவமாகவே கண்டு தம்மால் ஏன்ற பணிவிடை செய்து வழிபடுகிறவர்களுக்குப் பாகப்பட்ட தயிரினிடத்திலே தோன்றும் நெய்போலப் பிரகாசித்துத் தோன்றித் தெரிசனை கொடுத்து நிற்பர், பாசத்தார்க்கு இன்றும் பதி — அப்படிச் சிவமாய்க் காணாத பாச பெந்திகளிடத்திலேயெல்லாம் தோன்றுமற் கர்த்தா ஒளித்து நிற்பர் என்று அறிவாயாக என்றவாறு என்பது ஓர் உரை.

இனிச், சிவாலயங்களின் மிகுந்த பத்தியாய்ப் பணி செய்து வணங்குவார்க்கும் கர்த்தா எளிதாய்ப் பிரகாசித்துக் காட்சி கொடுத்து இரட்சிப்பர் என்று சொன்னதற்கு,

**உதாரண வெண்பா :**

கண்டதோரு மந்திரத்தாற் காட்டத்தி னங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமால் — கண்டவுருத்
தானதுவா யன்றானன் தானதுவாய்த் தோன்றானே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

(இ-ள்) கண்டது ஒரு — காணப்பட்டதொரு சிவலிங்கப்பெருமானையனுரிடத்திலே, மந்திரத்தால் — பஞ்சாக்கரத்தினாலே அர்ச்சித்து வழிபாடு பண்ணவே, காட்டத்தின் அங்கி வேறு உண்டல் போல் — காட்டத்தைக் கடைந்தஇடத்து அந்தக் காட்டத்தினிடத்திலே அக்கினி காட்டத்துக்கு வேறாய் வெளிப்பட்டதுபோல், நின்று அங்கு உளதாமால் — அவ்விடத்திலே நின்று கர்த்தா வெளிப்படுவன், கண்ட உரு தான் அதுவாய் அன்று ஆனன் — காணப்பட்ட உருக்கள் எல்லாம் தானுமாய் அல்லவுமாய் இருக்கிற கர்த்தா, தான் அது ஆய்

தோன்றுனே — தான் அந்தச் சைதன்னிய மூர்த்தியாய்த் தானே தோன்றுனே, தான் அது ஆய் காணும் தவர்க்கு— சிவலிங்கப்பெருமானையனுரே பெருமாள் என்று அர்ச்சித்து வழிபாடு பண்ணுகிற தபோதனருக்குத் தோன்றுனே கர்த்தா என்றவாறு.

இனி, இவ்விடங்களில் வழிபடுக என்றது — சங்கமத்தினிடத்திலும் சிவலிங்கப்பெருமாளிடத்திலும் வழிபாடு பண்ணவேண்டுமென்று சொல்லிற்றே! அது எந்த ஏதுவினுலே? நரம்பு நாடி முதலானவற்றைத்தான் அதுவாய் வரும் புருடன் — நரம்பு நாடி முதலாகிய சரீரத்தைத்தான் அதுவாய் வருகிற ஆன்மா, அவை ஆகாவாறு — அந்தச் சரீரமாகாத முறைமைபோல, அ புருடனும் ஆகலான் — ஆன்மாவும் கர்த்தா ஆகான், ஆதல் — ஆகையினுலே சொன்னது என்பது ஓர் உரை.

இனி, கண்டது ஒரு மந்திரத்தான் காட்டத்தில் அங்கி வேறு உண்டல்போல் நின்று அங்கு உளது ஆம் ஆல் — காணப்படா நின்ற சிவாலயங்களில் எழுந்தருளியிருந்து மௌனமாய்ப் பூசாபிடேகம் திருவிழாச்சிறப்பு முதலானதும் கொண்டருளிச் சகல உயிர்களுக்கும் வரங்கொடுத்து இரட்சித்தருளுகிற சிவலிங்கப்பெருமாளிடத்திலேயும் ஆசாரியர் எழுந்தருளப்பண்ணிக்கொடுத்த சிவலிங்கத்தினிடத்திலேயும் புத்திபண்ணி மிகுந்த அன்பினுல் அர்ச்சித்து வழிபட்டுக் காண்கிற பேர்களுக்கும் காட்டத்தில் தோன்றுமல் நின்ற அக்கினி விரும்பிக் காணவேண்டும் என்கிற பேர்களுக்கு அவர்கள் முயற்சி பண்ணின வழியே அந்தக் காட்டத்திலிருந்து வெளிப்பட்டு அந்தக் காட்ட முழுதும் தன் வடிவாய்க்கொண்டு பிரகாசித்துத் தோன்றுவதுபோல, கண்ட உருதான் அது

ஆய் அன்று ஆனுன் — காணப்பட்ட உலகமெல்லாம் தானுகவும் தான் அல்லவாகவுமாய் இருக்கிற கர்த்தா, தான் அது ஆய் தோன்ருஞே தான் அது ஆய் காணும் தவர்க்கு — அந்தச் சிவலிங்க வடிவே தானுகப் பிரகாசித்துத் தோன்ருஞே? தோன்றுவன்; தன்னைச் சிவமாகக் கண்ட தபோதனர்க்குச் சிவாலய முழுதும் சிவமாகவே தோன்றும் என்று அறிவாயாக என்றவாறு. கர்த்தா சகல ஆத்மாக்களிடத்திலும் சகலப் பிரபஞ்சத்தினிடத்திலும் பரிபூரணமாய் எள்ளுக்கடோறும் எண்ணெய் கலந்து நிற்பதுபோல அத்துவிதமாயே நிற்பர். முத்திபெற்ற ஆத்மாக்கள் மற்ற ஆத்மாக்களிடத்திலும் பாசவர்க்கங்களிலும் கலவாமற் கர்த்தாவினுடைய திருவடித்தாமரையிற் கலந்து பூரணமாய்த் தனித்தனியே முத்திபெற்ற ஆத்மாக்கள் சிவாநுபவம் ஒன்றினுக்குமே உரித்தாய் நிற்கும். ஆனதினுல், அத்துவிதன் என்கிற பேர் கர்த்தாவுக்கேயாம்: அத்துவிதி என்கிற பேர் ஆத்மாக்களுக்கே. ஆகையால், பெத்தம் முத்தி இரண்டிடத்தும் ஆத்மாக்கள் கர்த்தாவுக்கு அடிமையே என்றறிந்து வழிபடவேண்டுமென்று உணர்த்துகிருர்.

இதற்கு, **நாலாஞ் சூரணி** வருமாறு :

இனி இவ்விடங்களில் வழிபடுக என்றது: நரம்பு நாடி முதலானவற்றைத் தான் அதுவாய் வரும் புருடன் அவை ஆகாவாறு அப்புருடனுமாகலான் — முன் நரம்பு நாடி முதலான எழுவகைத் தாதுவினுல் அமைந்த தேகமே தானுயிருந்த ஆத்மா இப்போது அதற்கு வேருய்த் தோன்றி நிற்கக்கண்ட முறைமையால் கர்த்தாவினுடைய திருவடித்தாமரையிலே கலந்து நின்ருலும் ஆத்மா வேருய் நின்று அநுபவப்படும் என்பதை அறிந்து மிகுந்த

அன்புடனே வழிபடவேண்டும் என்று நாம் சொன்னது என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

அதுவிது வென்ற தருவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான் — பொதுவதனில்
அத்துவித மாத லகண்டமுந் தைவமே
அத்துவிதி யன்பிற் றொழு.

(இ-ள்) அது இது என்றது அது அல்லான் — அது இது என்று சுட்டியறிகிற சரீரம் ஆன்மாவல்ல, கண்டார்க்கு — தற்றெரிசனப்பட்ட பேர்களுக்கு, அது இது என்றதையும் அல்லான் — அது இது என்று சுட்டியறிகிற ஆன்மாவும் கர்த்தா அல்ல, பொது அதனில் அத்துவிதம் — பொதுவாக இரண்டற்றிருக்கும், ஆதல்— ஆகையினாலே, அகண்டமும் தைவமே — சர்வமும் அடிமையே, அத்துவிதி — இரண்டற்றிருக்கிறவனே, அன்பில் தொழு—அன்பினாலே வழிபாடு பண்ணுவாயாக என்றவாறு.

இனி, அது இது என்றது அது அல்லான் கண்டார்க்கு — தத்துவரூபமாகிய சடவடிவை இப்போது அது இது என்று சுட்டியறிந்ததற்கு வேறென்று தன்னை அறிந்த ஆத்மாவுக்கு, அது இது என்றதையும் அல்லான்— தத்துவங்கள்போல அது இது என்று சுட்டி அறியப்படாமல் நின்ற கர்த்தாவானவர், பொது அதனில் அத்துவிதம் ஆதல் — பொதுவாய்ச் சகல ஆத்மாக்களிடத்திலும் சகல பிரபஞ்சத்தினிடத்திலும் அத்துவிதமாய் இரண்டறக் கலந்து நிற்பர் ஆதலினாலே, அகண்டமும் தைவமே —

என்றும் கண்டிக்கப்படாமல் கர்த்தாவினுடைய திருவடித் தாமரையில் கூடி நிற்கிற சகல மகாத்மாக்களும் கர்த்தாவுக்கு அடிமையே என்று அறிந்து, அத்துவிதி அன்பில் தொழு—கர்த்தாவினுடைய பாதத்தின் மட்டும் கலந்து நிற்கிற நீ அத்துவிதி; ஆகையால், அன்பினுடனே தொழுது பணிவிடை செய்துகொண்டு நிற்கக் கடவாய் என்றவாறு. ஆனால், தொழில் ஞானத்துக்கு விரோதமல்லவோ? என்னில், பிரபஞ்சத்தொழிலே ஞானத்துக்கு விரோதமல்லாமல் சிவ பணிவிடை விரோதமல்ல என்று உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

வினையா லசத்து விளைதலால் ஞானம்
வினைதீரி னன்றி விளையா — வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழும்
ஆனத்தா லன்பிற் றொழு.

(இ-ள்) வினையால் அசத்து விளைதலால் — கன்மத்தினாலே அசத்தாகிய பாசம் உண்டாகையினாலே, ஞானம் வினை தீரின் அன்றி விளையா — சிவஞானமோ கன்மம் தீர்ந்தாலல்லது உண்டாகாது, வினை தீர — அந்தக் கன்மம் நீங்கும்படிக்கு, ஞானத்தை நாடி தொழவே—சிவஞானத்தை விசாரித்து வழிபாடு பண்ணவே, அது நிகழும் — அந்தச் சிவஞானம் விளங்கும், ஆனத்தால் — ஆகையினாலே, அன்பில் தொழு — அன்பினாலே வழிபாடு பண்ணுவாயாக என்றவாறு.

இனி, வினையால் அசத்து விளைதலால் ஞானம் வினை தீரின் அன்றி விளையா — பெத்தாத்மாக்கள் அல்லா

மல் தேகாதிப் பிரபஞ்சத் தொழிலை ஞானவான்கள் செய்ய விரும்பினுல் அசத்தாகிய அஞ்ஞானம் விளையும் அல்லது ஞானம் விளையாது. பிரபஞ்சத்தொழிலை மறந்தவர்களிடத்திலே விளையும் என்று அறிந்து வினைதீர ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும். அந்தத் தொழின் முயற்சிகளை விட்டு மன வாக்குக் காயம் மூன்றும் சிவஞானத்தொழின் முயற்சிகளை விரும்பிச் செய்யவே அந்த ஞானம் சிவபோகமாகிய ஞேயத்தை மேன்மேலும் விளக்கும், ஆனத்தால் அன்பில் தொழு-ஆன திஞலே சிவஞானத்தை முன்னிட்டுக்கொண்டு அன்பு பெருகக் கர்த்தாவைத்தொழுது நிற்பாயாக என்றவாறு.

இங்ஙனம் சொன்னவிடத்தில் பணிசெய்து நிற்பதேயன்றி ஆசாரியர் பணிவிடை செய்யவேண்டாவோ? என்னில், அவ்விரண்டிடத்திற் செய்யும் பணிவிடையும் அவர் ஏவலே ஆகையால் ஆசாரியரை வழிபடுவது மிகுந்த பலன் என்று உணர்த்துகிருர் என்பது ஓர் உரை.

உதாரண வெண்பா :

தன்னை யறிவித்துத் தான்ருனுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது — முன்னவனே
தானேதா னுச்சேய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

(இ-ள்) தன்னை அறிவித்து — தற்சொருபத்தை யறிவித்து, தான் தானு செய்தானை — தன்னைத் தானுகச்செய்த கர்த்தாவை, பின்னை மறத்தல் பிழை அலது— பின்னை வழிபாடு பண்ணேன் என்கிறது பிழையல்ல,

பிழைக்குப் பிராயச்சித்தமுண்டு; இதற்குப் பிராயச்சித்த மில்லை, முன்னவனே — முன்னவனாகிய கர்த்தாத்தானே, தானே தானு செய்தும் — தன்னைப்போலே உன்னைச் சிவமாகச் செய்தாலும், தைவம் என்றும் தைவமே — அடிமை என்றும் அடிமையே, மானே — பெண்ணே! தொழுகை வலி — வழிபாடு பண்ணுகிறதே உனக்கு உறுதி என்றவாறு.

இனி, தன்னை அறிவித்துத் தான் தானு செய் தானை — வாக்கு மனுதீத கோசரமாகிய கர்த்தா கருணை மிகுதியினாலே திருவுருக்கொண்டு எழுந்தருளி வந்து தம் முடைய பெருமையையும் ஆத்மாவினுடைய இழிவையும் அறிவிற்பட அறிவித்து தீட்சாக்கிரமத்தினாலே தன்னைச் சிவமாக்கிப் பிரமாதிகளுக்குக் கிட்டாத பேரின்ப மோட் சங்கொடுத்த உபகாரத்தை, பின்னை மறத்தல் பிழை அலது — பின்பு சற்றே மறந்து மாறுபாடாக எண்ணிக் கர்வம் பண்ணினாலும் அது பிராயச்சித்தம் பண்ணித் தீர்த்துக்கொள்ளுகிற பிழையாயிராது. முன் சொன்ன இரண்டிடத்தினாலேயும் தீர்த்துக்கொள்ளவும் படாது. அந்த ஞானசாரியரே இரங்கிக் கருணைவைத்தாலே தீரும். ஆனதினாலே, முன்னவனே தானே தானுச்செய்தும் தைவம் என்றும் தைவமே — முன்னவனாகிய கர்த்தா தானே தன்னைச் சிவமாகச் செய்தாலும் தன்னை அந்த ஞானசாரியருக்குச் சமானமாக எண்ணி இகழ்ந்தார் களானால் அப்பழையபடி பெத்தனாய்ப் பிறந்து இறந்து போவதற்குச் சந்தேகமில்லை. ஆனதினாலே, ஆன்மா என்றும் கர்த்தாவாகிய ஞானசாரியருக்கு அடிமை என்று அறிந்து, மானே தொழுகை வலி — கற்புடையளாகிப் பர்த்தாவினுடைய ஏவல் கடவாமல் தொழுது நிற்பது போல ஆன்மாவாகிய பெண்ணே! நீயும் ஞானசாரியர்

திருவுளம் மகிழ்ச்சியுறப் பணிசெய்து தொழுது களித்து நிற்பதே உனக்கு மிகுந்த பலன் என்பதறிவாயாக என்ற வாறு.

இந்தச் சிவஞானபோத உபதேச சாத்திரம் மூன்று மலத்தைப்பற்றி நின்ற சகலருக்கென்றே உணர்த்துகிறார் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

சிவமென்னு மந்ததா சிந்தைநேர் நோக்கப்
பயமின்றாங் கண்வா சகத்திற் — சிவமுண்டாம்
ஒன்று மிரண்டு மலத்தார்க்கிங் கோண்குருவால்
இன்றிந்நூல் மும்மை மலர்க்கு.

(இ—ள்) சிவம் என்னும் அந்த தர — சிவமென்று சொல்லப்பட்ட அதி தீவிர தரமானவனே ! ஒன்று மலத் தார்க்கு சிந்தை நேர் நோக்க பவம் இன்றாம் சிவம் உண் டாம்— ஒரு மலத்தையுடைய விஞ்ஞானகலருக்குத் தனது திருவுள்ளத்தினாலே செவ்விதாகப் பார்க்க மலம் தீர்ந்து சிவம் உண்டாம், இரண்டு மலத்தார்க்கு கண் வாசகத் தில் பவம் இன்றாம் சிவம் உண்டாம்—இரண்டு மலத்தை யுடைய பிரளயாகலருக்கு மானும் மழுவும் சதுர்ப்புயமு மாக வந்து அவர்களைக் கண்ணாலே பார்த்து வாக்கால் உபதேசம் பண்ண மலம் தீர்ந்து சிவம் உண்டாம், இங்கு ஒண் குருவால் இன்று இ நூல் மும்மை மலர்க்கு பவம் இன்றாம் சிவம் உண்டாம் — மூன்று மலத்தையுடைய சகலருக்கு இவ்விடத்திலே நல்ல குருவினாலே உபதேசம் செய்யப்பட்ட இந்த நூலின் வழியே உபதேசம் பண்ண மலம் தீர்ந்து சிவம் உண்டாம் என்றவாறு.

இனி, சிவம் என்னும் அந்ததர — இப்போது உணர்த்தின அனுக்கிரகப்படிக்கு ஐயம் திரிவு விகற்ப மறத் தெளிந்து நிட்டைகூடிச் சிவமாய் நிற்கிற அதிதீவிர சத்திநிபாதத்தையுடைய குரு புத்திரனே, சிந்தைநேர் நோக்க பவம் இன்றும் — விஞ்ஞானகலரில் பக்குவாத் மாக்களுக்கு அறிவுக்கறிவாய் நின்று உணர்த்த மோட்ச முண்டாம், கண் வாசகத்தில் சிவம் உண்டாம்—பிரளயா கலரில் பக்குவாத்மாக்களுக்கு மானும் மழுவும் திரிநேத் திரமும் சதுர்ப்புயமும் காளகண்டமும் உடைய திருமேனி கொண்டு எழுந்தருளி முன் நின்று நோக்கி உபதேசித்து உணர்த்த மோட்சமுண்டாம், ஒன்றும் இரண்டு மலத் தார்க்கு — ஆணவ மலம் ஒன்றையுமுடைய விஞ்ஞான கலர்க்கு ஆணவமும் கன்மமும் ஆகிய இரண்டு மலத்தை உடைய பிரளயாகலருக்கு இங்ஙனம் சொன்னபடி மலம் தீர்ந்து மோட்சம் பெறுவதல்லது சாத்திரம் தேவையில்லை. இங்கு ஒண் குருவால் இன்று இ நூல் மும்மை மலர்க்கு— இந்த பூமியிலுள்ள மும்மலமுடைய சகலாத்மாக்களில் பக்குவர்க்கு அவர்களைப்போலக் கர்த்தா மானிடச்சட்டை சாத்திக்கொண்டு எழுந்தருளித் தீட்சாக்கிரமங்களினுலே மும்மலங்களையும் போக்கி மோட்சத்தைக் கொடுத்துத் திரிபதார்த்த விசாரம் புலப்பட அறிவதற்கு இந்தச் சிவஞான போதம் என்னும் சாத்திர சிந்தனையும் கட்டளை யிடுவர். ஆதலினுலே நீயும் முன்னூல் வழிநூல் சார்புநூல் முதலாகிய மெய்கண்ட சாத்திரத்தையே கேட்டபடிக்குச் சிந்தித்துக்கொண்டு மோட்சமடையக்கடவது.

இந்தச் சிவஞானபோதமென்னும் மேலான உண் மைக்கு ஞான சாத்திரம் பூமியிலுள்ள ஆத்மாக்களை இரட்சிக்கவந்த வழி உணர்த்துகிறுர் என்பது ஓர் உரை.

**உதாரண வெண்பா :**

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளும் ஞானநூல் — சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தா லின்று.

(இ-ள்) எந்தை சனற்குமரன் ஏத்தி தொழ — எம்முடைய சுவாமியாகிய சனற்குமாரபகவான் தோத்திரம் பண்ணி வழிபட, இயல்பாய் நந்தி உரைத்தருளும் ஞான நூல் — நன்மையாக நந்திகேசுர தம்பிரானார் அருளிச்செய்த ஞான நூலாகிய சிவஞானபோதக் கிரந்தத்தை, சிந்தை செய்து தான் உரைத்தான் — மெய்கண்டான் சிந்தையிலே விசாரித்துச் சிவஞானபோதம் என்று பேரிட்டுத் தமிழ் நூலாகச் செய்தான் மெய்கண்டதேவன் என்னும் திருநாமத்தையுடையோன், தாரணியோர் தாம் உணர — பூதலத்திலே உள்ள ஆன்மாக்கள் அறிய, ஏது திருட்டாந்தத்தால் இன்று — ஏதுக்களாலும் திருட்டாந்தத்தாலும் இப்பொழுது என்றவாறு.

இனி, எந்தை சனற்குமரன் ஏத்தி தொழ இயல்பா நந்தி உரைத்தருளும் ஞான நூல் சிந்தை செய்து தான் உரைத்தான் மெய்கண்டான் — கயிலாசத்திலே எந்தையாகிய சனற்குமார பகவான் துதித்து வணங்கிக் கேட்க இயல்பாகிய கிருபையினாலே நந்திகேசுரசுவாமி அநுக்கிரகம் பண்ணின சிவஞானபோதம் என்னும் சாத்திர கிரந்தத்தை அவர் அருள்பெற்ற சத்தியஞான தெரிசினிகள் உணர்ந்து பரஞ்சோதி மாமுனிகளுக்கு உணர்த்த அவர் அருள்பெற்ற மெய்கண்டசுவாமிகள் கேட்டுணர்ந்து

அந்த வடமொழியைத் தமிழ் நூலாகச் செய்து, தாரணி யோர் தாம் உணர ஏது திருட்டாந்தத்தால் இன்று— பூமியிலுள்ள பக்குவாத்மாக்கள் அறியும்படிக்கு ஏதுவி னாலும் திருட்டாந்தத்தினாலும் அர்த்தந்தெரிய விளக்கி அநுக்கிரகம் பண்ணினது என்று அறிவாயாக என்ற வாறு.

இந்தச் சம்பிரதாயவுரை திருவாவடுதுறை ஞான தேசிகர் அனுக்கிரகம் பெற்றபேருக்கே யன்றி மற்றப் பேருக்கு மோட்சம் கொடாது. இதற்கு வசனம் :—

"உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறர்பொருளைக்
கள்ளத்தாற் கொள்வே மெனல்"

என்ற குறளின் அர்த்தத்தை விசாரித்தறிந்து மோட்ச தாகிகளெல்லாம் திருவாவடுதுறை ஞானதேசிகர்க்கு அடிமைப்பட்டுக் கேட்டறிந்து சிந்திக்கவேண்டியது. நமசிவாயதேசிகன் துணை மெய்கண்டசுவாமியார் சீர்பாத கமலங்களே துணை. சுவாமிநாதசுவாமியார் திருவடிக்கமலம் வாழ்க. அம்பலவாணன் திருவடி வாழ்க.

**பன்னிரண்டாஞ் சூத்திரம் பழையவுரை முற்றிற்று.**

**சிவஞானபோதம் பழைய வுரை என்னும்**
**சம்பிரதாய உரை முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

## வாழ்த்து.

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவாவடுதுறைவாழ்குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ."

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்

ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.